# கபிலரின்

# குறிஞ்சி

(பாட்டு, கலி)






உரை விளக்கம்:
S.R. மார்க்கபந்து சர்மா M.A.

183

கபிலரின்

# குறிஞ்சி

(பாட்டு, கலி)

344

உரை விளக்கம்

**S.R. மார்க்கபந்து சர்மா M.A.,**

பதிப்பு, வெளியீடு

**திருமதி கா. மீனாட்சி M.A.,**

பு.எ.16/ப.எ.383, ஆர்க்காடு சாலை,

சென்னை-24.

கா.மீ. வெளியீட்டு எண் : 1
பதிப்பு : முதற்பதிப்பு 2001
உரிமை : ஆசிரியர்க்கு

## நூல் பற்றிய விவரங்கள்

| | |
|---|---|
| பெயர் | : கபிலரின் குறிஞ்சி (பாட்டு, கலி) உரை விளக்கம் |
| ஆசிரியர் | : S.R.மார்க்கபந்து சர்மா (வழித்துணைவன்) |
| பதிப்பு | : திருமதி கா. மீனாட்சி M.A., |
| பதிப்பில் உதவி | : நா.சந்திரசேகர் |
| பொருள் | : இலக்கியம் - உரைவிளக்கம் |
| தாள் | : 11.6 கி.கி. சேஷசாயி |
| நூல் அளவு | : 18 × 12.5 cms |
| அச்சுப்புள்ளி | : 10.5 pt |
| மொத்த பக்கம் | : 296 |
| விலை | : **75.00** |
| வெளியீடு | : திருமதி. கா. மீனாட்சி M.A., பு.எ.16/ப.எ.383, ஆர்க்காடு சாலை சென்னை -24. |

---

அச்சு அமைப்பு : சிவா கிராபிக்ஸ் போன்: 4730810
அச்சிட்டோர் : ஸ்கிரிப்ட், சென்னை-94.
கட்டமைப்பு : ராஜாம்பாள் பைண்டிங் ஒர்க்ஸ், சென்னை-94

# பதிப்புரை

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகட்கு முன், ஆசிரியர் பொறுப்பில் வெளிவந்தது இந்நூல். இப்போது புதுப் பொலிவுடன் அமைகிறது.

இந்நூலாசிரியர் திரு.சர்மா அவர்கள் அருவா வடதலை நாட்டின் (வடார்க்காடு மாவட்டம்) ஆர்க்கோணத்திற்கு அடுத்த சுமைதாங்கி என்னும் ஊரினர்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பலரிடம் பயின்றவர். நாவலர் சோமசுந்தர பாரதியார் நண்பரே! என இவரை விளித்துப் பாராட்டியுள்ளார். பன்மொழிப் புலவர்; அறிஞர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் வாழ்த்துக்கள் பெற்றவர். பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்களோடு தோழமை பூண்டவர்; ஒரு சாலை மாணவர்.

தமிழகத்தில் முதன் முதலில் ஆய்வுக் கண்ணோட்டத் தில் சிலப்பதிகாரத்தை அணுகி நுணுகி ஆய்ந்து நூல் சில படைத்தவர்; அந்நூல்கள் வழி, தமிழகத்துப் பெருமக்கள் பலரின் ஒருமித்த பாராட்டுக்கள் பெற்றவர்.

இவர்தம் சங்க இலக்கிய ஆய்வு நூல்களில், இரண்டு இது போது எம்மால் வெளிக் கொணரப் பெறுகிறது.

அடுத்து வர இருப்பது "கபிலர் ஓவியம்"

இந்நூல்கள் மூன்றும் இவர்தம் ஆழ்ந்து அகன்ற நுண்மாண் நுழைபுலத்தைத் தெள்ளிதின் விளக்குவனவே.

ஏற்றுப் பயில்க இனிது

நா.சந்திரசேகர்

# நெஞ்சில் கனல் மணக்கும் பூக்கள்

- அகில்<br>அசோகு<br>அடும்பு<br>அவரை<br>அனிச்சம்
- ஆத்தி<br>ஆம்பல்<br>ஆரம்<br>ஆவிரம்<br>இண்டம்
- இருவாட்சி<br>இலவம்<br>எறுழம்<br>ஓமை<br>கஞ்சங் குல்லை
- கருங்குவளை<br>கருந்[illegible]க்கொடி<br>கரு[illegible]சி<br>கருவ[illegible]ம்<br>காஞ்சி
- காட்சி மல்லிகை<br>காந்தள்<br>காயா<br>குரவம்<br>குருக்கத்தி
- குருந்தம்<br>குவளை<br>குறிஞ்சி<br>குன்றி<br>கூவிரம்
- கொகுடி<br>கொடுவேரி<br>கொறுக்கச்சி
- கொன்றை<br>கோங்கம்<br>கோடல்<br>சண்பகம்<br>சாதி
- சுர புன்னை<br>செங்கருங்காலி<br>செங்கழுநீர்<br>செம்பூ<br>செம்மனி
- செருந்தி<br>சிறுபூளை<br>சிறுமூங்கில்<br>சூரல்<br>ஞாழல்
- தணக்கம்<br>தாமரை<br>தாழை<br>திருத்துழாய்<br>தில்லை
- தும்பை<br>தெங்கின் பாளை<br>தேமா<br>தோன்றி<br>நந்தியா வட்டை
- நரந்தம்<br>நறைக்கொடி<br>நாகம்<br>நெய்தல்<br>பகன்றை
- பச்சிலை<br>பயினி<br>பருத்தி
- பலாசு<br>பவழ மல்லி<br>பாதிரி<br>பாலை<br>பிச்சி
- பிடவம்<br>பீர்க்கு<br>புனலி<br>பெரும்புன்னை<br>பெருமூங்கில்
- போங்கம்<br>மகிழம்<br>மஞ்சாடி<br>மரவம்<br>மரா
- மருதம்<br>மலை எருக்கு<br>மா<br>முருக்கு<br>முல்லை
- மௌவல்<br>வஞ்சி<br>வடவனம்<br>வள்ளி<br>வாகை
- வாழை<br>வானி<br>வில்வம்<br>வெட்சி<br>வெண்காக்கணம்
- வெண்கோடல்<br>வெப்பாலை<br>வேங்கை

# வாழ்த்துரை

அன்புமிக்க நண்பரே,

தமது அருமை நிருபமும், தாம் எழுதிய குறிஞ்சிப் பாட்டுரைக் கையெழுத்துப் பிரதியும் வரப்பெற்றேன். இன்றிரவு குற்றாலத்துக்குப் போகிறேன். அங்கு ஒரு திங்கள் தங்க நேரும். அதனாலுடனே ஆங்காங்கே விடுத்துப் படித்துப் பார்த்தேன். நன்றாய் இருக்கிறது என்பது போதாது. நடைஎளிதில் எழிலுடையது. வளமும் சுவையும் வாய்ந்துள்ளது.

நூற்புலவர் கருத்தை அவர் சொல்பொருளால் தெளிப்பதை விட்டு, தம் புலமைத் திறம் காட்ட உரைகாரர் பொருள் சொல்லுவதே பழைய உரையாசியர் வழக்கம். பரிமேலழகருரையிற் கூட இக்குறை காணலாம். ஏற்ற எளிய சொற்களால் போற்றற்குரிய மெய்ப்பொருளைக் கண்டு கூறும் முறை பிறழாமல் தமதுரை அமைந்திருப்பது மாட்சியும் மகிழ்ச்சியும் ஒருங்குதவுகிறது.

சொற்பொருளும், கருத்துப்பொழிப்பும், பிற்குறிப்பும் நெகிழ்வோடு மகிழ்வும், நேர்மையும், கூர்மையும் நிறைந்துள செவ்விக்குச் சான்று பகர்கின்றன. இத்தகைய மெய்ப்புலமைப் பணி இன்னும் பல்லாண்டு தமிழுக் கியற்றிப் புகழ்பெறுக. மனமார வாழ்த்தும் நண்பன்,

பசுமலை
8.7.52 ச.சோ. பாரதி

# முன்னுரை

ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் இப்பாடலைப் பாடியதாக இப்பாட்டின் இறுதியில் காணப்பெறும் விளக்கம் கூறுகின்றது. இதனால் வேற்றுமொழியில் வல்லவனான ஒரு புலவனுக்கு ஆசிரியர் நம் மொழியின் மரபு மாண்பினைப் புலப்படுத்திக் காட்டும் நோக்கத்துடன் இப்பாடலைப் பாடியிருக்கின்றார் என்று தெரிகின்றது.

பிரகத்தன் தெரிவித்துள்ள நன்றியறிதல் குறுந் தொகையில் ஒரு பாடலாய் இடம் பெற்றிருக்கின்றது. இதனால் ஆசிரியர் தம் நோக்கத்தை நன்கு நிறைவேற்றிக் கொண்டிருக்கின்றார் என்பது தெளிவாம்.

இக் காலத் தமிழ் மாணவருக்குச் சங்க இலக்கியத்தின் சிறப்பியல்புகளைப் புலப்படுத்தும் முறையில் இவ்வுரை அமையவேண்டும் என்ற நோக்கத்துடன் நான் இப்பாடலுக்கு உரை காண முன்வந்தேன். என் ஆசிரியர் வாழ்த்துரையால் நானும் என் நோக்கத்தை நன்கு நிறைவேற்றிக் கொண்டிருக்கிறேன் என்பது புலப்படு கின்றது.

குறிஞ்சிக் கலியின் உரை அச்சாகும் காலத்திலேயே இவ்வுரை எழுதத்தலைப்பட்டது. கபிலர் பாடல்கள் அனைத்திற்கும் உரைகண்டு, அவர் தமிழ் மொழிக்குச் செய்துள்ள தொண்டின் எல்லையை ஓரளவு அறியத் தலைப்படவேண்டும் என்ற நோக்கத்தின் விளைவே

இவ்வுரை. ஓராண்டிற்குள் இது முடிவு பெற்று விட்டது. ஆசிரியர் வாழ்த்துரையையும் பெற்றபின்னர், குறிஞ்சிக் கலியின் அச்சுப் பிரதிகள் அனைத்தும் என் அலமாரியை அணிசெய்த வண்ணம் இருந்த நிலை. இதனை உடனே அச்சிட்டு வெளியிடாமற்செய்து விட்டது. கபிலருடைய பிற பாடல்களுக்கு உரைகாணவேண்டும் என்ற எண்ணமும் எழுந்த இடத்திலேயே அடங்கிவிட்டது!

ஒன்பது ஆண்டுகளுக்குமேல் கையெழுத்தில் அடங்கிக் கிடந்த இவ்வுரையின் தலையெழுத்து இப்பொழுது மாறுகின்றது. இது அச்செழுத்தின் அணிகொண்டு வெளிவருகின்றது. இவ் வொன்பது ஆண்டுகளாக இது தனிச் சிறையில் இருந்து தவம் கிடக்கவில்லை. இரண்டு மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை இதனை நானே படித்துப் பார்த்து மகிழ்ந்த வண்ணம் இருந்தேன். ஒவ்வொரு முறையும் இது மேலும் விளக்கமுடையதாய் மாறியும் வந்தது. எனவே, என் ஆசிரியரை வாழ்த்துரை வழங்கச்செய்த உருவத்தில் இவ்வுரை இல்லை. ஒன்பதாண்டுகளின் வளர்ச்சியைப் பெற்றே விளங்கு கின்றது.

இப் பாடலில் ஆசிரியர் ஒரு நூறு பூக்களின்—ஒன்று குறைவாக (99) பெயர்களைக் கூறி அவற்றைத் தலைவி பறித்ததாகக் காட்டியிருக்கின்றார். அவற்றுள் ஒரு சில பூக்களையே நான் அறிவேன். பிற எனக்குத் தெரியாத பெயர்களேயாம். எனவே, இப் பூக்களைப் பற்றிய பகுதிக்கு நச்சினார்க்கினியர் கூறியிருப்பதனையே நான் பெயர்த்துக் கூறியுள்ளேன்! என்னுடைய இவ்வறியாமையைப் பொருட்படுத்தவேண்டா என்று கேட்டுக்கொள்ளு கின்றேன்.

இப் பாடலின் ஆராய்ச்சி உள்ளுறை உவமம், ஏனையுவமம், இறைச்சி என்பனவற்றை என்னைத்

தெளிவுடன் தெரிந்துகொள்ள வைத்தது. இப்பாடல் தமிழ் மொழியில் முதன் முதலில் தோன்றியுள்ள கதையை உள்ளிட்ட கவிதையாக இருப்பதனோடு, உள்ளுறைகளைக் கொண்டே தான் கூறவந்த கதை நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தியிருக்கின்றது. இதனுடைய உள்ளுறைகளின் அமைப்பு ஒரு மாலையைப் போல் விளங்குகின்றது. இவ்வமைப்பு முறையை இளங்கோவடிகள் மிக பண்புடையதாக மாற்றியமைத்துத் தம் காப்பியத்தைச் சிறப்படையச் செய்துள்ளார். இவையனைத்தும் வேறு நூல்கள் வாயிலாக விளக்கமாக வெளிவரும்.

இப் பாடலைப் பற்றிய ஆராய்ச்சி அளவால் பெருகிடவே அதனைத் தனி நூலாக வெளியிட எண்ணியுள்ளேன். அது அடுத்து வெளிவரும். இவ்வுரையைப் பயிலும் மாணவர், இதனோடு நின்றுவிடாமல் நச்சினார்க்கினியர் உரையையும் முற்றிலும் பயிலவேண்டும்.

அப்பொழுதுதான் அவர்கள் இப்பாடலை நன்கு பயின்றதாகக் கூறிக்கொள்ள முடியும். பழைய உரையில் நான் வியந்து பாராட்டும் பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடவில்லை; ஆனால் நான் ஏற்காதவற்றைக் குறிப்பிட்டுள்ளேன். அதனால் எஞ்சிய பகுதிகளை நான் வியக்கின்றேன் என்பது தெளிவாகும்.

**25.09.61** **மார்க்கபந்து சர்மா.**

**சுமைதாங்கி**

## ஆசிரியரின் நூல்கள்

### சிலப்பதிகாரம்

சிலம்பின் ஓவியம்

சிலம்பின் தகுதி

சிலம்பின் நிழல்

சிலம்பின் பாயிரம்

சிலம்பின் ரசனை

### சங்க இலக்கியம்

கபிலர் ஓவியம்

குறிஞ்சிக்கலி

குறிஞ்சிப் பாட்டு

# குறிஞ்சிப் பாட்டு

அன்னாய் வாழிவேண் டன்னை ஒண்ணுதல்
ஒலிமென் கூந்தலென் தோழி மேனி
விறலிழை நெகிழ்த்த வீவரும் கடுநோய்
அகலு ளாங்கண் அறியுநர் வினாயும்
பரவியும் தொழுதும் விரவுமலர் தூயும் 5

வேறுபல் உருவின் கடவுள் பேணி
நறையும் விரையும் ஓச்சியும் அலவுற்று
எய்யா மையலை நீயும் வருந்துதி
நற்கவின் தொலையவும் நறுந்தோள் நெகிழவும்
புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவும் 10

உட்கரந் துறையும் உய்யா அரும்படர்
செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்
முத்தினு மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடின் புணரும்
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின் 15

மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொன்மருங் கறிஞர்
மாதரும் மடனும் ஒராங்குத் தணப்ப
நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி 20

இருவேம் ஆய்ந்த மன்ற லிதுவென
நாமறி உறாலிற் பழியு முண்டோ

ஆற்றின் வாரா ராயினும் ஆற்ற
ஏனையுல கத்து இயைவதால் நமக்கென
மானமர் நோக்கம் கலங்கிக் கையற்று 25

ஆனாச் சிறுமைய ளிவளும் தேம்பும்
இகன்மீக் கடவு மிருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
இருபே ரச்சமோ டியானு மாற்றலேன்
கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையும் 30

வண்ணமுந் துணையும் பொரீஇ எண்ணாது
எமியேந் துணிந்த ஏமஞ்சால் அருவினை
நிகழ்ந்த வண்ண நீநனி யுணரச்
செப்ப லான்றிசின் சினவா தீமோ
நெற்கொள் நெடுவெதிர்க் கணந்த யானை 35

முத்தார் மருப்பின் இறங்குகை கடுப்ப
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்
நற்கோள் சிறுதினைப் படுபுள் ளோப்பி
எற்பட வருதிய ரெனநீ விடுத்தலின்
கலிகெழு மரமிசைச் சேணோ னிழைத்த 40

புலியஞ் சிதண மேறி அவண
சாரல் சூரல் தகைபெற வலந்த
தழலுந் தட்டையும் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி
உரவுக்கதிர் தெறூஉம் உருப்பவி ரமையத்து 45

விசும்பாடு பறவை வீழ்பதிப் படர
நிறையிரும் பௌவம் குறைபட முகந்துகொண்டு
அகலிரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசதிர்ந் தன்ன இன்குர லேற்றொடு
நிரைசெலல் நிவப்பின் கொண்மூ மயங்கி 50

இன்னிசை முரசின் சுடர்ப்பூண் சேஎய்
ஒன்னார்க் கேந்திய இலங்கிலை எஃகின்
மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்தென
அண்ணல் நெடுங்கோட் டிழிதரு தெண்ணீர்
அவிர்துகில் புரையும் அவ்வெள் ளருவித் 55

தவிர்வில் வேட்கையேம் தண்டா தாடிப்
பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடிப்
பொன்னெறி மணியின் சிறுபுறம் தாழ்ந்தஎம்
பின்னிருங் கூந்தல் பிழிவனம் துவரி 60

உள்ளகம் சிவந்த கண்ணேம் வள்ளிதழ்
ஒண்செங் காந்தள் ஆம்பல் அனிச்சம்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
உரிதுநா றவிழ்தொத்து உந்தூழ் கூவிளம் 65

எரிபுரை எறுழம் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடசம்
எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்இணர்க் குரவம்
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா 70

விரிமலர் ஆவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கம் திலகம் தேங்கமழ் பாதிரி
செருந்தி அதிரல் பெருந்தண் சண்பகம் 75

கரந்தை குளவி கடிகமழ் கலிமா
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவம் சிறுமா ரோடம்

வாழை வள்ளி நீள்நறு நெய்தல்
தாழை தளவம் முட்டாள் தாமரை 80

ஞாழல் மௌவல் நறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
பாங்கர் மராஅம் பல்பூந் தணக்கம் 85

ஈங்கை இலவம் தூங்கிணர்க் கொன்றை
அடும்பு அமர் ஆத்தி நெடுங்கொடி அவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகம் சிந்து வாரம்
தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி 90

நந்தி நறவம் நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
ஆரம் காழ்வை கடியிரும் புன்னை
நரந்தம் நாகம் நள் இருள் நாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும் 95

அரக்குவிரித் தன்ன பரேர் அம் புழகுடன்
மாலங் குடைய மலிவன மறுகி
வான்கண் கழிஇய அகலறைக் குவைஇப்
புள்ளார் இயத்த விலங்குமலைச் சிலம்பின்
வள்ளுயிர்த் தெள்விளி இடைஇடைப் பயிற்றிக் 100

கிள்ளை ஒப்பியும் கிளையிதழ் பறியாப்
பைவிரி அல்குல் கொய்தழை தைஇப்
பல்வேறு உருவின் வனப்பமை கோதைஎம்
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி
எரிஅவிர் உருவின் அங்குழைச் செயலைத் 105

தாதுபடு தண்ணிழல் இருந்தன மாக
எண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழ்த்
தண்ணறுந் தகரம் கமழ மண்ணி
ஈரம் புலர விரலுளர்ப்பு அவிழாக்
காழகி லம்புகை கொளஈஇ யாழிசை 110

அணிமிகு வரிமிஞிறு ஆர்ப்பத் தேம்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி 115

நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சி
பைங்காற் பித்திகத்து ஆயித ழலரி
அந்தொடை ஒருகாழ் வளைஇச் செந்தீ
ஒண்பூம் பிண்டி ஒருகாது செரீஇ
அந்தளிர்க் குவவுமொய்ம்பு அலைப்பச் சாந்தருந்தி 120

மைந்திறை கொண்ட மலர்ந்தேந் தகலத்துத்
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலியச்
செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்
வண்ண வரிவில் ஏந்தி அம்புதெரிந்து
நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி 125

இயலணிப் பொலிந்த ஈகை வான்கழல்
துயல்வருந் தோறும் திருந்தடிக் கலாவ
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பின்
பகைபுறங் கண்ட பல்வேல் இளைஞரின்
உரவுச்சினம் செருக்கித் துன்னுதொறும் வெகுளும் 130

முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவனம் எழுந்து நல்லடி தளர்ந்தியாம்

இடும்பைகூர் மனத்தேம் மருண்டுபுலம் படர
மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்து 135

ஆகாண் விடையின் அணிபெற வந்தெம்
அலமர லாயிடை வெரூஉத லஞ்சி
மெல்லிய இனிய மேவரக் கிளந்தெம்
ஐம்பா லாய்கவின் ஏத்தி ஒண்டொடி
அசைமென் சாயல் அவ்வாங் குந்தி 140

மடமதர் மழைக்கண் இளையீர் இறந்த
கெடுதியும் உடையேன் என்றனன் அதன்எதிர்
சொல்லேம் ஆதலின் அல்லாந்து கலங்கிக்
கெடுதியும் விடீஇ ராயின் எம்மொடு
சொல்லலும் பழியோ மெல்லிய லீரென 145

நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பின் இம்மென இமிரும்
மாதர் வண்டொடு சுரும்புநயந்து இறுத்த
தாதவி ழலரித் தாசினை பிளந்து
தாறடு களிற்றின் வீறுபெற ஓச்சிக் 150

கல்லென் சுற்றக் கடுங்குரல் அவித்தெம்
சொல்லற் பாணி நின்றன னாக
இருவி வேய்ந்த குறுங்கால் குரம்பைப்
பிணையேர் நோக்கின் மனையோள் மடுப்பத்
தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து

சேமம் மடிந்த பொழுதின் வாய்மடுத்து
இரும்புனம் நிழத்திலின் சிறுமை நோனாது
அரவுறழ் அஞ்சிலை கொளீஇ நோய்மிக்கு
உரவுச்சினம் முன்பால் உடல்சினஞ் செருக்கிக்
கணைவிடு புடையூக் கானம் கல்லென 160

மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமின் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅம் செருக்கி மரம்கொல்பு
மையல் வேழம் மடங்கலி னெதிர்தர 165

உய்விடம் அறியே மாகி ஒய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவன் பொருந்திச்
சூருறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்
உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை 170

அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலின்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதர
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்பத் 175

திணிநிலைக் கடம்பின் திரள்அரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎம்
நுரையுடைக் கலுழி பாய்தலின் உரவுத்திரை
அடுங்கரை வாழையின் நடுங்கப் பெருந்தகை
அஞ்சி லோதி அசையல் யாவதும் 180

அஞ்ச லோம்புநின் அணிநலம் காக்கஎன
மாசறு சுடர்நுதல் நீவி நீடுநினைந்து
என்முக நோக்கி நக்கனன் அந்நிலை
நாணும் உட்கும் நண்ணுவழி யடைதர
ஒய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ 185

ஆகம் அடைய முயங்கலின் அவ்வழிப்
பழுமிளகு உக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்

புள்ளெறி பிரசமொடு ஈண்டிப் பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல் 190

நீர்செத்து அயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொ ளாங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட் டின்னியம் கறங்க ஆடுமகள்
கயிறூர் பாணியில் தளருஞ் சாரல்
வரையர மகளிரில் சாஅய் விழைதக 195

விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்
தண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்தின் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் விழைதகு பெருவிறல்
உள்ளத் தன்மை உள்ளினன் கொண்டு 200

சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்
வசையில் வான்திணைப் புரையோர் கடும்பொடு 205

விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னொடு உண்டலும் புரைவது என்றாங்கு
அறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது
ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி 210

அந்தீந் தெண்ணீர் குடித்தலின் நெஞ்சமர்ந்து
அருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி
வானுரி உறையுள் வயங்கியோ ரவாவும்
பூமலி சோலை அப்பகல் கழிப்பி
எல்லை செல்ல ஏழூர்பு இறைஞ்சிப் 215

பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதல் தெவிட்ட ஆன்கணம்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்
ஓங்கிரும் பெண்ணை அகமட லகவப் 220

பாம்புமணி உமிழப் பல்வயின் கோவலர்
ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற
ஆம்ப லாயிதழ் கூம்புவிட வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
அந்தி அந்தணர் அயரக் கானவர் 225

விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த
வான மாமலை வாய்சூழ்பு கறுப்பக் கானம்
கல்லென்றிரட்டப் புள்ளினம் ஒலிப்பச்
சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத்
துனைஇய மாலை துன்னுதல் காணூஉ 230

நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம் சின்னாள்
கலங்கல் ஓம்புமின் இலங்கிழை யீரென
ஈர நன்மொழி தீரக் கூறித்
துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து 235

துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன் அதற்கொண்டு
அன்றை யன்ன விருப்போ டென்றும்
இரவரல் மாலைய னேவரு தோறும்
காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும் 240

நீதுயி லெழினு நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்றோள் இன்துயி லென்றும்
பெறாஅன் பெயரினும் முனியல் உறாஅன்

இளமையின் இகந்தன்று மிலனே வளமையின்
தன்னிலை தீர்ந்தன்றும் இலனே கொன்னூர் 245

மாய வரவின் இயல்புநினைஇத் தேற்றி
நீரெறி மலரின் சாஅ யிதழ்சோரா
ஈரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்கண்
ஆகத் தரிப்பனி உறைப்ப நாளும்
வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய் 250

நினைத்தொறுங் கலுழுமால் இவளே கங்குல்
அளைச்செறி உழுவையும் ஆளியும் உளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியும் களிறும்
வலியில் தப்பும் வன்கண் வெஞ்சினத்து
உருமும் சூரும் இரைதேர் அரவமும் 255

ஒடுங்கிருங் குட்டத்து அருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையும் இடங்கருங் கராமும்
நூழிலும் இழுக்கும் மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளும் உளப்படப் பிறவும்
வழுவின் வழாஅ விழுமவர் 260

குழுமலை விடரகம் உடையவால் எனவே. 261

*ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டு முற்றிற்று.*

# வெண்பா

நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடையள் 1
என்குற்றம் யானும் உணர்கலேன்–பொன்குற்று
அருவி கொழிக்கும் அணிமலை நாடன்
தெரியுங்கால் தீயது இலன்.

ஆற்றல்சால் கேள்வி அறம்பொருள் இன்பத்தை 2
போற்றிப் புனைந்த பொருளிற்றே–தேற்ற
மறையோர் மணம்எட்டின் ஐந்தாம் மணத்தின்
குறையாக் குறிஞ்சிக் குணம்.

# குறிஞ்சிப் பாட்டு
## (உரை விளக்கம்)

அன்னாய்! வாழி; வேண்டு; அன்னை! ஒள்நுதல்
ஒலிமெல் கூந்தல்என் தோழி மேனி,
விறல்இழை நெகிழ்த்த வீ(வு) அரும் கடும்நோய்: (1–3)

அன்னையே! (நீ) வாழ்வாயாக; (நான் கூறுவனவற்றை) விரும்பி ஏற்றுக்கொள்; அம்மா! ஒளி விளங்கும் நெற்றியையும், தழைத்த மெல்லிய கூந்தலையும் உடைய என்னுடைய தோழியின் எழிலையும், வெற்றியினையுடைய வளைகளையும் தளர்த்திவிட்ட, போக்குதற்கு அரிதான கொடிய நோயினை,

**வாழி:**

உடன்பாட்டுக் குறிப்பு. 'நன்னீரை வாழி அனிச்சமே' (குறள்; 1111) என்பதன் உரையைக் காண்க. 'இவள் நோயைப் போக்க உன்னால் வழி காணக்கூடும் என்ற எண்ணத்தை இனியேனும் விட்டு விடு' எனச் செவிலிக்குத் தோழி தெரியப்படுத்தினாள் என்பதனைக் குறிப்பிடுகின்றது.

**வேண்டு:**

விரும்பு, விரும்புதல் காரணமாக ஏற்றுக் கோடல் நிகழும். கேட்பவள் தன்னுடைய தாயாகையால், காரணமாய் அமையும் 'விரும்பு' என்று சொன்ன அளவோடு நின்றுவிட்டாள். அதன் பயனாக விளையும்

ஏற்றுக்கோடலையும் செய்வாய் என்று குறிப்பாய் வேண்டிக் கொண்டாள். அதனையும் வெளிப்படக் கூறினால், தாய் தன்னை அவள் வற்புறுத்துவதாக எண்ணிக் கொள்வாள் அன்றோ?

அன்னை: கேட்பிக்க வந்தது. 'என்னிலும் இளையவளான இவள் கூறுவனவற்றை நான் விரும்பிக் கேட்டு, அவை குறிப்பிடும் வழியினைக் கைக்கொள்வதா? என்று எண்ணித் தள்ளிவிடாமல் கேட்டருள வேண்டும்' எனவற்புறுத்தும் ஆற்றலுடையது. 'என்னிடத்துள்ள அன்பு காரணமாகவேனும் நான் கூறுவனவற்றை ஏற்றுக்கொள்' எனத் தன் அன்பு வெளிப்படக் கூறியதுமாம்.

கதிரவன் தனக்கேயுரிய ஒளியினைப் பெற்று விளங்குபவன்; தன் ஒளியால் தான் விளங்குவதனோடு, பிறபொருள்களையும் விளங்க வைப்பவன். அவனைக் கண்டு தாமரை மகிழ்ந்து மலர்கின்றன. தம் எழிலை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. அக் கதிரவனைப் போலவே இத் தலைவியும் தனக்கே உரித்தான ஒளியினைப் பெற்ற நெற்றியினை உடையவள்; இவள் நுதலின் ஒளி, இவள் முகத்தை எழில்பெறச் செய்வதனோடு, தன்னைக் கண்டார் முகத்தாமரைகளையும் மலரச் செய்யும் தகுதியுடையது. இச்சிறப்பு நோக்கி அதனை இங்கு ஒள்நுதல் எனக்குறிப்பிடுபவள், பின்னர் விளக்கமாக மாசறு சுடர் நுதல் எனக்கூறக் காண்போம்.

**ஒலித்தல்:**

தழைத்தல். செறிவு, வன்மை என்ற இரு தன்மைகளும் சேர இருப்பதனையே தழைத்திருப்பதாகக் கூறுவோம். இத் தலைவியின் கூந்தல் செழித்து வளர்ந்திருந்தது; எனினும், அந்நிலையைப் பெற்றிருப்பதன் அறிகுறியாக அடர்த்தி யினை மட்டுமே உடையதாயிருந்தது. அதனோடு

உடன்பிரியாமல் இருக்கக்கூடிய வன்மை எள்ளளவும் இல்லை எனத் தெளிவிக்கவே ஒலி மெல் கூந்தல் என்றாள். இயற்கையில் காணப்பெறும் புதுமை இது என்பது தோழி கருத்து. இதனால் தலைவியின் சிறப்பின் எல்லை பெருகுகின்றது.

**மேனி:**

எழில் இது தனக்கென உரித்தான உருவம் இல்லாதது; எப்பொருளை நிலைக்களனாகக் கொண்டு விளக்கம் பெறுகின்றதோ, அதனையே தன் உருவமாகக் கொள்ளும் வல்லமையுடையது. இவ்வாறு தனக்கு இருக்க இடனளிக்கும் பொருளுக்குக் கைம்மாறாக, இது அப் பொருளை விளக்கமடையச் செய்யும். எனினும் அப்பொருளின் உருவத்தை இது தனக்குரித்தாகக் கொண்டு விடுகின்றதாகையால், இதனால் விளக்கமுறும் பொருள் உருவமற்றது போல் தோன்றும். ஒரு பொருளின் எழிலை நாம் கண்டு வியக்கும் காலத்தில், அப்பொருளின் உருவம் நமக்குப் புலனாகாது. இங்கு எழில் இத் தலைவியின் உடலைப் பற்றுக்கோடாகக் கொண்டு, இவளைப் பேரழகு படைத்தவளாக ஆக்கியிருந்தது. இது இவளிடத்தே தங்கியிருந்த காலத்தில், இவள் உடலை யாரும் காணவில்லை. இப்பொழுது நோய் இவளுடைய எழிலைப் போக்கிவிடவே, இவளுடைய நிறம், உருவம் என்ற இரண்டும் எல்லாருக்கும் புலனாகின்றன. அவற்றின் வாட்டத்தையும், மாறுபாட்டையும் காண்பவர் இவள் உடலைக்கண்டு மனம் கலங்குகின்றனர்.

மேனியின் தளர்ச்சியாவது, வாயால் ஊதப்பெற்ற கண்ணாடியில் ஆவிபடிந்து, ஒளி மழுங்கிக் காணப்படுவதனைப் போல், தன் இயல்பான ஒளி மங்கித் தோன்றுவதாம். இவளைப் பற்றிக் கொண்டிருக்கும் நோய் நீங்கியவுடன், இவள் மீண்டும் எழில் நிரம்பப்

பெற்றவளாய் விளங்குவாள். மாசுபடிந்த கண்ணாடியை ஈரத்துணியால் துடைத்துவிட்டபின், அது மீண்டும் தன் பழைய ஒளியைப் பெற்றுவிளங்குவதனை ஒத்தது எனக் கொள்க. 'தோழி ! பண்டையற்றோ கண்டிசின் நுதலே !' (குறு: 249) என இவ்வாசிரியரே கூறியிருத்தலைக் காண்க. ஒளியிழந்திருக்கும் தன் நுதல், தலைவனுடைய மலையைக் கண்டவுடன், ஒளி பெற்றதாக மாறிவிட்டிருக்க வேண்டுமென்பது இத்தலைவியின் கருத்து. இதனால் எழில் மீண்டும் பழைய நிலையை எய்தும் இயல்புடையது எனப்புலனாகின்றது.

நச்சினார்க்கினியர் மேனியை நிறமெனக் கொண்டு, அதற்கேற்பப் பொருள் கூறியிருக்கின்றார். நிறமும் கவர்ச்சியுடையதாய் இருக்க, எழிலுடையதாய் இருத்தல் வேண்டும். எனவே, பிறவற்றின் உதவியில்லாமல், தானே விளங்கக் கூடியதும், தன் இயல்பைப் பிற பொருள்களுக்கு ஊட்டக் கூடியதுமாகிய எழிலை ஆசிரியர் குறிப்பிட்டதாகக் கொள்ளப்பட்டது. மேலும், காலக் கழிவால் நிறத்தின் கவர்ச்சி குறையும். மங்கிய நிறம், மீண்டும் பழைய நிலை எய்தமுடியாது. இது அதனுடைய இயல்பு. எனவே ஆசிரியர் குறிப்பிடுவது எழிலையே யாம்.

தன்னைக் கண்டவரைத் தடுத்து நிறுத்திவிடுவதனோடு அவர்கள் கண்களை ஊடுருவிச் சென்று, அவர்தம் உள்ளங் களையும் பற்றிக்கொண்டு தன் வயத்ததாக ஆக்கிவிடும் தகுதி சிறக்கப் பெற்றிருந்ததாகையால், தலைவியின் ஒள்நுதலை முதற்கண் கூறினாள். அந்நுதலின் எழிலை எடுத்துக் காட்டக்கூடிய பின் திரையாய் அமைந்த ஒலிமென் கூந்தலை அதனை அடுத்துக் கூறினாள். எழிலின் நிலைக்களனாய் உள்ள உருவம் எத்துணைச் சிறப்புடைய தேனும் நுதல் ஒளி வீசாமல் மாசு படிந்தும், கூந்தல் தழைத்தும் நீண்டும் கறுத்தும் இராமல் சிறிதாகவும்

இருப்பின், அவ்வுருவம் எழில் இருந்து விளங்கவோ, விளக்கந்தரவோ ஏற்ற நிலைக்களனன்று என்பாள் தலைவியின் மேனியைக் கூறுமுன், அது இருக்கவும், விளக்கஞ் செய்யவும் இன்றியமையாதனவாய் உள்ள நுதலையும், கூந்தலையும் குறிப்பிட்டாள்.

### விறல் இழை:

வெற்றியையுடைய வளை, 'விறல்சால் விளங்கிழை நெகிழ' (நற்; 85) 'விறலிழை அவரொடு விளையாடுவான் மன்னோ' (கலி. 30, 14) என வந்த இடங்களில் வளைக்கு வெற்றியுடைமை குறிப்பிடப்பட்டிருப்பதனைக் காணலாம். வளைக்கு வெற்றியாவது எது? பிற அணிகலன்கள் அனைத்தும் கண் அல்லது காது என்ற ஒரு புலனை மட்டுமே கவரும் இயல்புடையன: ஆனால் வளையோ இவ்விருபுலன்களையும் கவரும் ஆற்றலுடையது.

சிலம்பு தன் ஒலியால் காதுகளைக் கவரும்; எனினும், அந்நிலையில் அது கட்புலனாக இருக்கமுடியாது. அதனுடைய செய்ந்நேர்த்தியைக் கண்டு மகிழும் காலத்தில் அது காண்பவர் கைகளில் இருக்குமாகையால் ஒலிக்காது; காண்பவர் கண்களை வளைகளுக்கும் முன்னர்க் கவரும் ஆற்றல் குழைக்கு உண்டு. ஆனால் அதற்குக் காதுகளைக் கவரும் தன்மையில்லை. மேலும் அது தன்னையணிந்த மங்கையரிடத்துப் பொறாமை மிக்கது. தலைவனைக் கண்ட மகிழ்ச்சியால் மனங்களிக்கும் மங்கையரைக் காணப்பொறாது, குழை கழன்றோடும், அவர்கள் பெருமை தனக்குச் சிறுமையைப் பயப்பதாக அது கருதும் போலும்!

வளையோ, தன்னை அணிந்த மங்கையரோடு ஒன்றிவிடும் இயல்புடையது. காதலனைக் கண்ட மகிழ்ச்சி பொங்கி வழிந்து சென்றுவிடக்கூடாது என எண்ணியே, வளை இறுகும்போலும்! தன்னை அணிந்தவர்

மனம்வாட்டம் அடையின், வளை அதனைத் தாங்க மாட்டாமல் கழன்று விழும். எனவே வளையே மங்கையரிடம் மிக்க பரிவுடைய அணிகலனாகும். இதனுடைய இயல்பினை உணர்ந்து பாராட்டுபவள் போலவே, இதனை மேனியுடன் சேர்த்துக் கூறினாள் என்க.

இம் மூன்றடிகளால் தலைவியின் இயற்கை எழில், செயற்கை ஒப்பனை என்ற இரண்டும் இவளைப் பற்றிக் கொண்டிருந்த நோயினால் சிதைவுற்றன என்ற விவரத்தைத் தோழி விளக்கிவிட்டாள். தான் பற்றிக் கொண்ட மங்கையின் இயற்கை நலனைக் கெடுத்த தனோடு, அவள் அணிந்திருந்த வளையையும் அச்சுறுத்தி அகலச்செய்யும் ஆற்றல் பெற்றது இவளைப் பீடித்த நோய் என்று தெரிகின்றது. இதனைப் புலப்படுத்தவே தோழி கடு நோய் என்று அதனைக் குறிப்பிட்டாள்.

**வீதல்:**

அழிதல். பின்னர், மருந்து, மந்திரம், வழிபாடு ஆகிய எவற்றாலும் போக்க முடியாத தன்மையுடையது இந்நோய் என விவரிப்பாள், இங்கு அதனைக் குறிப்பாய்ப் புலப்படுத்த விரும்பி வீவுஅரும் நோய் என்றாள். உயிரற்ற பொருளாகிய தலைவியின் வளையையும் உருகச் செய்ததெனின், இது தலைவிக்கு எத்தகைய துன்பத்தைத் தந்திருக்கும்! இதனை முற்றிலும் போக்க முன்வரும் தோழி நம் பாராட்டுதல்களுக்கு உரியவளே!

அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்
பரவியும், தொழுதும், விரவுமலர் தூஉயும்,
வேறுபல் உருவின் கடவுள் பேணி,
நறையும் விரையும் ஓச்சியும், அலவுற்று
எய்யா மையலை நீயும் வருந்துதி; (4–8)

இப்பெரிய ஊரில் உள்ள அறிஞர்களை அடுத்துக் கேட்டும், துதித்தும், வணங்கியும் (மணத்தாலும் நிறத்தாலும் வேறுபட்ட) பலவகை மலர்களைக்கொண்டு தூவிப் பூசனை செய்தும், வேறு வேறாகக் காணப்பெறும் பலஉருவங்களினும் கடவுளையே விரும்பிச் சந்தனம், சூடம் போன்ற மணம் நிறைந்த பொருள்களைச் செலுத்தியும் (இவள் நோயைத் தொலைத்துவிட வேண்டும் என்ற உன் நோக்கமும், அதனை நிறைவேற்ற நீ மேற்கொண்ட வழிகளும் பயனளிக்கவில்லையாகையால், இனி இதனை ஒழிக்க வேறு ஏதேனும் இருக்கவும் கூடுமோ என்று எண்ணுபவளாய்) வறுமையுற்று, (இவளைப் பற்றிக்கொண்டிருக்கும் நோயின் முதலை) அறிய மாட்டாதவளாய், மயக்கத்தைக் கொண்டவளாகி, நீயும் (பெரிதும்) வருந்துகின்றாய்;

**அகல் உள்:**

அகன்ற இடம்; அல்லது அகற்சியை இயல்பாகக் கொண்டிருப்பது. சங்க இலக்கியத்தில் இச்சொற்களின் சேர்க்கை ஓர் ஊரினைக் குறிப்பிடப் பயன்படுத்தப் படுகின்றது. அக்காலத்தில் போக்குவரவு சாதனங்கள் இன்றுபோல் இல்லையாகையால், பெரும்பாலோர் தம்மூரைவிட்டு வெளிச் சென்றவராய் இருக்கமாட்டார்; எனவே மிகப்பெரிது என்ற கருத்தைத் தெரிவிக்க அவர்கள் தம் ஊரை உவமையாகக் காட்டுவது வழக்கம். இவ்வழக்கமே, ஊரைக்குறிப்பிட, புலவர்கள் இச்சொற்களைப் பயன்படுத்தக் காரணமாயிருந்தது.

இங்குக் குறிப்பிடப்பெறும் ஊர் மிகப் பெரியது என்று உணர்த்த ஆங்கண் என நீட்டிக் கூறினாள். இதனால் இவ்வூரில் அறிஞர் பலர் இருந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தையும் நம் மனத்தே தோற்றுவித்து விட்டாள்.

அவர்கள் அனைவராலும்இவள் நோயைப் போக்கக் கூடவில்லை.

அறியுநர்:

மருத்துவம், மந்திரம். குறிபார்த்தல். வெறியயர்தல் போன்ற பல்வேறு துறைகளில் வல்லவர். முன்னர் மேனி, வளை என்பவற்றின் தளர்ச்சியைக் கூறி நோயின் தன்மை தெரிய வைத்தவள், இங்கு ஊரின் பெருமையையும், அறிஞரின் எண்ணிக்கையையும் குறிப்பிட்டு அதன் கடுமையை உணர்த்தியிருக்கின்றாள்.

பரவுதல்:

இறைவன் புகழை வாயால் பாடுதல் தொழுதல். அவனை உடலால் வணங்குதல், **பேணுதல்:** மனத்தான் விரும்புதல்; ஆவது அவனை இடையறாது நினைத்தல். இதனால் செவிலி, தலைவியின் நோய் நீங்குவதற்காக, இறைவனைத் தன் மனமொழி மெய்களால் அணுகிப் பாடுகிடந்ததனைத் தோழி வியந்து கூறினாள்.

எதனை நாம் பெரிதும் விரும்புகின்றோமோ, அதன் நினைவு நம் மனத்தைவிட்டு நீங்காமல் இருக்கும் இவ்வியல்பைக் கருதியே, இறைவனை இடையறாது எண்ணி வேண்டிக் கொண்டதனைப் பேணுதல் என்ற சொல்லால் குறிப்பிட்டார். வள்ளுவப் பெருந்தகையும் கடவுள் வாழ்த்தாகப் பாடிய பத்துக் குறள்களில் ஐந்து பாடல்களால் இறைவனைச் சேர்ந்திருத்தலையே வற்புறுத்தியிருக்கின்றார். அவனைச் சேர்ந்திருத்தலாவது இடையறாது நினைத்தலே எனப் பரிமேலழகர் பொருள் உரைத்திருத்தலை உணர்க.

'வேறுபல் உருவின் கடவுள் பேணல்' குறுந்தொகை யின் 263-ம் பாடலினும் கூறப்படுகின்றது. தலைவியர்க்குப்

பருவத் தூண்டுதலான் வரும் இந்நோய்க்கு இவ்வாறு பேணல் பயனளிக்காது என்று அப்பாடல், தெரிவிக் கின்றது. இந்நோயை நீக்கத் தக்க மருந்து காதலனுடைய மார்பு ஒன்றேயாம் என்றும், அவனே இதனைப் போக்கும் ஆற்றல் உடைய மருத்துவன் ஆவான் என்றும், நெய்தற்கலியின் பாக்கள் பலவும் கூறியிருப்பதனை இங்கு நினைவிற் கொள்ளவேண்டும். செவிலிக்கு இரங்கி இறைவனாலும், ஊரில் உள்ள அறிஞராலும் இத்தலைவியின் நோயைப் போக்க முடியாமற் போனது வியப்புக்குரியதன்று!

தலைவியின் துன்பத்தைத் துடைக்கச் செவிலிபட்ட துன்பங்கள் அனைத்தையும் தோழி விரிவாகக் குறிப்பிட்டு வியந்திருப்பது, அவளைத் தன் தோழியின் நோயைப் போக்க முயன்றதற்குப் பாராட்ட வேண்டும் என்றன்று; தான் கூறப்போவதனை, அவளைப் புறக்கணிக்காமல் கேட்டு, ஏற்றுக்கொள்ளச் செய்யவே, தோழி அவளுடைய செயல்களின் அருமையைப் பாராட்டுபவள்போல் பேசியிருக்கிறாள்! இது நடிப்பே அன்றி, உண்மை அன்று.

பரவியும், தொழுதும், தூயும், ஓச்சியும் என்பனவற்றைப் போலல்லாமல் பேணி என உம்மை சேர்க்காமல் கூறியிருப்பது, அதுவே இறைவனை வழிபடும் முறையாகும் என்று நமக்கு உணர்த்தவேயாம். நச்சினார்க்கினியர் ஆசிரியர் அச்சொல்லுக்கு அளிக்காத உம்மையைத் தாமே தந்துவிட்டு, பின்னர் அதுவும் பிறவற்றின் நிலைக்குத் தாழ்ந்துவிட்டதனைக் கண்டு வருந்தியிருக்கின்றார். தம் செயலுக்குப் பரிகாரமாக அவர் பேணியும் என்ற உம்மைச் சிறப்பு, ஏனைய எண்ணும்மை என்று கற்பித்துக்கூற நேர்ந்தார்.

நறை:

சந்தனம், விரை: சூடம். உலகத்தே பொருள்கள் நீர்மை (Liquid) பருமை (Solid) ஆவி (gas) என்ற மூன்று நிலைகளில் ஏதேனும் ஒன்றினைப் பெற்றவையாய் இருக்கக் காண்கிறோம். இம்மூன்றனுள்ளும் நறையால் முதல் இரண்டினையும், விரையால் பின்னிரண்டினையும் ஆசிரியர் இங்குச் சுட்டியிருக்கின்றார். இம்மூன்று நிலைகளும் வேறுபட்ட தோற்றமுடையனவே. எனினும் ஒரு பொருளே இந்நிலைகளில் எதனையும் பெற்று விளங்கும். தண்ணீர் தன் இயல்பான நிலையில் பெரிதும் பயன்படுகின்றது. அதுவே பனிக்கட்டியாக மாறிப் பொருள்களை அழிவுறாமல் பாதுகாக்கும்; ஆவியாக மாறி இயந்திரங்களை இயக்கும். எனவே ஒரே பொருள் வெவ்வேறு நிலையை எய்தி வெவ்வேறு பயனை அளிக்கும் எனப்புலனாகின்றது. இதனால் பொருள்களின் நிலை வேறுபாடுகள் வெறும் தோற்றங்களேயல்லாமல், அவற்றின் இயல்பைப் புலப்படுத்துவன ஆகா என்பது விளங்குகின்றது.

பௌதிக இயற்கையின் இவ்வுண்மையை-வேறு பாடுகளுக்குள்ளே பொதிந்துகிடக்கும் பொதுமையை-உணர்த்தவே ஆசிரியர் மூன்று நிலைகளுக்கும் வெவ்வேறு உதாரணங்களைக் காட்டாமல், இரண்டு பொருள்களை மட்டுமே குறிப்பிட்டார். ஆசிரியர் கருத்து அதுவேயெனின், ஒரே உதாரணத்தைக் காட்டுவதே அவர் நோக்கத்தை நன்கு நிறைவேற்றுமாகையால், இரண்டு உதாரணங்கள் காட்டியிருப்பது மிகையேயாம் எனின், அற்றன்று. பொருள்களின் மூல தத்துவத்தை உணர்ந்து கொள்ள முற்படுவோர்க்கு இந்நிலைவேறு பாடுகள் பயனற்றவையே அல்லாமல், அவற்றைப் பயன்படுத்தவும் துய்க்கவும் விரும்புவார்க்கு இவை இன்றியமையாது வேண்டும். மணத்தைப் பொதுத் தன்மையாய்ப் பெற்றவை

களுள், நறை அதனை இருந்து பரப்ப, விரை அதனை எரிந்து பயப்பதனை உன்னுக.

**அலத்தல்:**

வறுமையை அடைதல். 'அலத்தற்காலை ஆயினும், புரத்தல் வல்லன்' (புறம்:103) இது பொருளின் தொலைவால் தோன்றும் வறுமையைக் குறிப்பிடுகின்றது. ஆனால் இப்பாடலில் அச்சொல் அறிவின் வறுமையைப் புலப்படுத்தப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. அறிஞர் பலரும் கூறிய வழிகளைக் கையாண்டு பார்த்தும் பயன் பெறாமையால், கடவுளைப் பலவகைகளில், வேண்டினாள்; அதுவும் பயனளிக்காமற் போகவே, செவிலி இனிவேறு என்ன செய்யக்கூடும் என்று எதனையும் துணியமாட்டாமல் துன்புறும் நிலையை அச்சொல் இங்குக் குறிப்பிடுகின்றது. எனவே ஆராய்ச்சி வறுமையைப் புலப்படுத்த ஆசிரியர் அதனைப் பயன்படுத்தி யிருக்கின்றார். இளங்கோவடிகளும், 'அருவியாடியும், சுனைகுடைந்தும் அலவுற்று வருவேம்' (24:4) என விளையாட்டு மிகுதியால், உடல் தளர்ந்து அதன் விளைவாய் ஊன்றியுணரும் தன்மை மழுங்கியிருக்கும் நிலையைக் குறிப்பிட இச்சொல்லைப் பயன்படுத்தி யிருக்கும் ஒப்புமையை உணர்க.

**எய்யாமை:**

அறியாமை. 'எய்யாமையே அறியாமையே' (தொல். சொல்:342) 'எய்யா நல்லிசை' (முருகு:61) என்ற இடத்திற்போல, அளந்தறியமாட்டாத என்ற பொருளைக் கருதிக் கொள்ளினும் ஏற்கும்.

**மையல்:**

மயக்கம், பித்து. இந்நிலையுற்றார், தாம்படும் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளமாட்டாதவராய், உணர்வின்றியே, பிறர்க்கு இன்னல் இழைப்பவராய் விடுகின்றார் என்பதனை மையல் யானை மடங்கலாக மாறிவிடும் என இலக்கியம் கூறுவதனால் உணரலாம். செவிலி இனி ஏதேனும் செய்ய முற்பட்டால், அது தலைவியின் உயிருக்குக் கேடு பயக்கும் எனத் தான் அஞ்சியதனைத் தோழி குறிப்பாய்ப் புலப்படுத்திவிட்டாள்.

நோயுற்றமையால் நலியும் இத்தையலாள் போன்றே அவள் நோயைத் தணிப்பிக்க முற்பட்ட செவிலியும், வெற்றி காணாது, தன் கைப்பொருளை இழந்ததனோடு, மதியையும் இழந்தவளாகித் துன்பப்படுகின்றமையைக் கண்டு, மனம் தாளாது இரங்கிக் கூறுபவளைப் போலத் தோழி நீயும் வருந்துதி என்றாள். நோயினைக் கொண்டவளைப் போலவே, அவளிடத்துக் கொண்ட அன்பினால் நீயும் வருந்துகின்றாய் எனக் குறிப்பிட்ட தாகக் கொள்ளுவதும் பொருந்தும்.

இப்பாட்டு தோழி கூற்று. கேட்பவள் செவிலித்தாய். தலைவியை மணம் பேச அயலார் வந்து வரைவு இயம்பவும், அத்தலைவியால் தூண்டப்பெற்ற தோழி செவிலிக்கு மறைபுலப்படுத்துகின்றாள். அறத்தொடு நிற்றல் இப்பாடலின் துறை. பிழை மணத்தைத் தடுப்பதனோடு, நன்மணம் எய்தவழிவகுப்பது இதன் நோக்கமும் பயனும் ஆகும். கபிலர் இத்துறையில் பல்வேறு தொகைகளில் பல பாடல்களை இயற்றியிருக்கின்றார். அவற்றுள், குறிஞ்சிக் கலியுள் ‘காமர் கடும்புனல்’ எனத் தொடங்கும் நீண்ட பாட்டினுள் தாம் கூறியவற்றையே, அவர் இந்நெடும் பாட்டாக விரித்துரைக்கின்றார்.

அன்னாய்! வாழி; வேண்டு; என் தோழி மேனி, இழை நெகிழ்ந்த நோய் அறியுநர் வினாயும், பரவியும், தொழுதும், தூயும், கடவுள் பேணி ஓச்சியும், அலவுற்று எய்யாமல் நீயும் வருந்துதி;

நல்கவின் தொலையவும் நறும்தோள் நெகிழவும்
புள்பிறர் அறியவும் புலம்புவந்து அலைப்பவும்
உள்கரந்து உறையும் உய்யா அரும்படர்
செப்பல் வன்மைஇல் செறித்துயான் கடவலின், (9 – 12)

நன்மையைச் செய்யும் வனப்பு அழியவும், மயக்கத்தை ஊட்டும் தோள்கள் மெலிந்து தளரவும், (முன்னர் முன்னங் கைகளில் இருந்ததனை, இப்பொழுது தோள்வரை ஓடுவனவாய் இயங்கும்) வளைகளால் (இவளை உற்ற நோயைப்) பிறர் அறியவும், தனிமையாகிய துன்பம் (அழையாமல்) வந்து (ஓயாமல்) வருத்தவும், (இவ்வாறெல்லாம் செய்தும், அறிஞர்கள் அறிவுக்கும் அகப்படாமல்) உள்ளுக்குள்ளேயே ஒளிந்து வாழும் (தன்மை சிறந்ததாய்ப்) பொறுத்துக்கொள்ள முடியாத, புதுமையான (காதலன் மேற் செல்லும் நினைவு என்ற) நோயினை, (அது இவளை எப்படிப் பற்றிக் கொண்டது. அதனைப் போக்கும் வழி யாது என உனக்கு) விவரிக்கும் மன வலிமை இல்லாமல், நான் (அவற்றை என் மனத்துக்குள்ளேயே) நெருக்கிச் செலுத்திவிடுவதனால்,

**கவின்:**

அழகு, வனப்பு. நிறத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு விளங்கும் இதனை எண்ணியே நச்சினார்க்கினியர் மேல் மேனியை நிறம் எனக்கருதினார். இதுவும் தனக்கென ஓர் உருவம் இல்லாததுவே! தலைவியின் உடலைப் பற்றுக்கோடாகக் கொண்டிருக்கும். இந்நிறத்தின் விளைவைக் கவின் என்று கூறுவர்.




சாயல் உருவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டது. உடலுக்கு ஊறுநேர்ந்தால் நிறம் மாறும். ஆனால் எழில், உடல் (உருவம்) நிறம் என்ற இரண்டு பற்றுக்கோடுகளைக் கொண்டதாகையால், மழுங்கியிருக்குமே யல்லாமல் என்றும் அழிவெய்தாது; மாறுபாட்டினைத் துறந்து மீண்டும் ஒளிரும் இயல்பு இதற்கு உண்டு. காலக்கழிவு காரணமாக உடல்நிலை தளரவும், நிறம் மாறும். ஆனால் எழில், இம்மாறுபாட்டால் மங்குவதற்கு மாறாக, ஆன்ம ஒளியாய்ச் சுடர்விட்டு விளங்கும். இச்சிறப்பினைக் கருதியே ஆசிரியர் மேனியென்ற சொல்லை இதனைக் குறிப்பிடக் கையாண்டார் என்று கொள்ளப்பட்டது.

**தொலைதல்:**

இல்லையாதல்; முற்றிலும் நீங்கிவிடல். கவின் தலைவன் தலைவி என்ற இருவருக்கும் பயன்படக்கூடிய பண்புடையதாகையால் நல்கவின் எனப்பட்டது. 'எனக்கும் ஆகாது, என்னைக்கும் உதவாது, பசலை உணீஇயர் வேண்டும், திதலை அல்குல் என்மாமைக் கவினே' (குறு;27) என வெள்ளிவீதியார் கவன்றமை காண்க. இக்கவின் நற்றாயால் தரப்படும் நலமாகும். 'தாய் ஓம்பு ஆய் நலம்' (அகம் 146), 'அன்னை ஓம்பிய ஆய்நலம்' (குறு 223) என்ற பகுதிகளால் இதன் பிறப்பினை உணரலாம்.

**நறும்:**

நறவு. கள். திரட்சியால் கண்டாரை மயங்கச் செய்யும் தோள் என்பாள். நறுந்தோள் என்றாள். இது தலைவனை

மகிழ்வூட்டும் தன்மையுடையது. எனவே அவனுக்கு மட்டுமே பயன்படுவது. இது உடலோம்பலின் பயனாய்ப் பெறப்படுவது. எனவே, இதனைச் செவிலி தந்த செல்வம் என எளிதில் உணர்ந்து கொள்ளலாம். இவ்வாசிரியரே **'யாய் ஓம்பினள் எடுத்த தடமென்தோளே'** (அகம்: 18) என இதன் பிறப்பினைக் குறிப்பிட்டிருக்கின்றார்.

**புள்:**

வளை. **'புட்கை போகிய புன்தலை மகாஅர்'** (மலைபடு: 253) என்ற பகுதியின் உரையால் இதனைத் தெரிந்துகொள்ளலாம். இவ்வளைகள் தன் செல்வ மிகுதியால், தந்தையால் அன்புடன் அளிக்கப்பெற்றவை. எனவே, இவை தன் தந்தையால் இத்தலைவி பெற்ற செல்வமாம். (வண்டு - புள் - வளை)

இயற்கையாய்ப் பெற்றிருந்த எழிலுடன், தன்னுடைய செயற்கை ஒப்பனையும் சேரச் சிதையப் பெற்றாள் என்று முன்னர் விவரித்த தோழி, இப்பொழுது அவள் தன்னுடைய தாய், செவிலி, தந்தை இம்மூவரும் விரும்பித் தந்த செல்வங்கள் அனைத்தையும் முற்றிலும் இழந்துவிட்டமையைப் புலப்படுத்துகின்றாள். எனவே தனக்கே உரித்தாய் இருந்தவற்றோடு, தான் பெற்ற வற்றையும் இத்தலைவி இழந்துவிட்டாள் என்று உணர்த்தி யிருக்கின்றாள். முன்னையவற்றைத் தொலைக்கத் தலைவிக்கு உரிமையுண்டு; பின்னவற்றைப் பேண வேண்டுமேயல்லாமல் தொலைக்கக்கூடாது. அதனை உணர்ந்தவளாய் இருந்தும் தொலைக்க நேர்ந்தாள். இனி இழக்க அவளிடம் ஒன்றும் இல்லை என்பதாம். இதனால் அவள் மனநிலையையும் உடன் குறிப்பிட்டாள் என்க.

தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் பயன்படும் கவின் தொலைந்தமையை முதலிலும், தலைவனுக்கு

மட்டுமே பயன்படும் தோள் நெகிழ்ச்சியை அடுத்தும். பிறர்க்கு இவள் நிலையை உணர்த்தப் பயன்படு வளையை இறுதியிலும் அமைத்துக் கூறியுள்ள முறை வைப்பு இல்லறத்தின் இயல்பைப் புலப்படுத்துவதாக இருக்கக் காண்கின்றோம். தலைவனோடு சேர்ந்து தான் இன்பமடைவதனோடு, தலைவி அவனை மகிழ்வூட்டிப் பிறர் பாராட்டும் வண்ணம் நடத்துவதே இல்லற மன்றோ?

இருவர் கூடி நடத்துவதே இல்லறமாகவும், அதன் இயல்பைத் தலைவியின் மேல் ஏற்றிப் புலப்படுத்திக் காட்டுவது குறைபடக் கூறலாகாதோ என்று எண்ணுபவர், தலைவியை இல்லாள் எனப்பாராட்டும் இலக்கியம் தலைவனை இல்லான் என்று குறிப்பிடாததனைக் கருதிப்பார்க்க.

தோள் நெகிழ்ச்சி காரணமாக அன்றோ கவின் தொலைதல் கூடும்? ஆசிரியர் கவின் தொலைவை முதற்கண் கூறியிருப்பது காரண காரியத் தொடர்பை இயல்புக்கு முரணாகக் காட்டியதாகாதோ? ஆகாது; அதுவே இயல்பாம். இங்குக் காரியத்தைக் கொண்டே காரணத்தை அறியவேண்டும். தோள் நெகிழ்ச்சி காரணமாகவே கவின் தொலைவு ஏற்படும் எனினும், முதற்கண் கட்புலனாவது பின்னதேயாம். வழக்கிலும், 'ஏன் வாட்டமுற்றிருக்கின்றீர்? உடல்நலக் குறைவா?' என்றே கேட்கின்றோம் என்பதனை நினைக. தோள் நெகிழ்ச்சியும், கவின் அழிவும் தோன்றும் காலத்து அவை தலைவியுடன் இருப்பவருக்கே புலப்படும். ஆனால் பிறரும் அவள் நிலையை உணரும்படிச் செய்வன அவளுடைய வளைகளின் நெகிழ்ச்சியே யாம்.

கவின் மாறியதனை முற்பட உணர்ந்தவள் தலைவி யோடு எப்பொழுதும் உடன் இருக்கும் தோழியே! அதனையும், தோள் நெகிழ்ச்சியையும் கண்டுகொண்டு

கவன்றவள் செவிலி. வளை நெகிழ்ந்து ஓடும் நிலை ஏற்பட்ட பின்னரே தலைவியின் நிலையை உற்றார் உறவினர் அறிந்துகொண்டிருக்கக்கூடும்.

புலம்பு:

தனிமை. காதலன் உடன் இல்லாமையால் தோன்றுவது. தோழியும், ஆயத்தாரும் சூழ இருப்பினும், இது அவர்கள் அனைவரையும் ஏய்த்துவிட்டுத் தலைவியைச் சென்று பற்றிக்கொள்ளுவது. இதன் வல்லமையை யாரே உணர்ந்துகொள்ளக்கூடும்? தலைவி தன் காதலனை எண்ணி ஏங்கியவாறு காணப்படுகின்றாள். ஆயத்தார் விளையாட்டால் ஊட்டும் உவகையும், அவளுக்குக் கசந்துவிட்டது. தலைவி இவ்வனைத்தையும் இழந்து விட்டதனைத் தோழி பொருட்படுத்தவில்லை. ஆனால் அவள் தன் மனத்தையும் இழந்து தவிக்கின்றாளே என்பதுவே அவள் ஏக்கம். உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்டு உருகுபவளுடைய நோயை மருந்தும், மந்திரமும், வழிபாடும் போக்க முடியாதனவாய் இருந்ததனில் வியப்பில்லை யன்றோ?

இத்தகைய பேரிழவுகளைத் தோற்றுவித்ததே எனினும், தலைவியைப் பற்றிக் கொண்டுள்ள நோய் அறிஞர்களுக்கும் புலப்படவில்லை என்பாள், உள்கரந்து உறையும் என்றாள்; ஒருவருக்கும் புலப்படாமல் இருப்பதேனும், அது வலியிழந்ததாக இல்லை என்பாள் உறையும் என்றாள். உறைந்திருப்பது வாளா இல்லாமல் ஓயாமல் தொழில் புரிந்து கேட்டினை விளைவிக்கின்றது என்பாள் உய்யா நோய் என்றாள். பின்னர்ப் போக்குதற்கரிய கடுநோய் எனக்கூறி அதன் தன்மையைக் குறிப்பிட்டவள், இப்பொழுது பொறுத்தற்கரிது எனக்கூறி அதன் கொடுமையின் எல்லையைப் புலப்படுத்துகின்றாள்.

அருமை:

புதுமை. இதற்கு முன் இவளுக்கு இத்தகைய நோய் தலைப்பட்டதில்லை என்று உணர்த்துகின்றது.

படர்தல்:

நினைத்தல். தலைவன் மேற்சொல்லும் நினைவு; ஓரிடத்தில் கால்கொண்டு பல பக்கங்களிலும் ஒருசேரப் பரவிச் செல்லுதலே படர்தல் எனப்படும். கொடி படர்தலைக் கொண்டு இதனை அறியலாம். இங்குத் தலைவனை நாடிச் செல்லும் நினைவாகிய நோய் தலைவியின் உள்ளத்தே கால்கொண்டு அவனை நோக்கிப் படர்ந்து செல்லுகின்றது என்று தோழிகூறியிருக்கின்றாள். அது தன் இலக்கையடையப் பலவழிகளினும் ஒருசேர முன்னேறிச் செல்லுகின்றது என்பதனை இவள் நுதலும் மேனியும் பசப்பதாலும் தோளும் ஆகமும் தளர்வதாலும், வளையும் வடமும் நெகிழ்வதாலும் கண்கூடாகக் காணலாம்.

செறித்தல்:

நெருக்குதல்; அடக்குதல். தலைவி ஒரு தலைவனோடு தொடர்பு கொண்டுள்ள செய்தி வெளிப்படின் அலராம் என்று அஞ்சியவளாய், தோழி அதனைத் தன் மனத்துக்குள்ளேயே அடக்கி வைத்துக் கொண்டிருந்தாள். தானே வெளிப்படல் உண்மையின் இயல்பு. அவ்வாறு அவள் நெஞ்சறிந்த உண்மை வெளிப்படமுயலும் காலங்களில், தோழி அதனை வெளிவரவொட்டாமல் செய்ததனையே இங்கு நமக்கு உணர்த்தியிருக்கின்றாள்.

கடவல்:

செலுத்துதல். தலைவி படுந்துயரைக் கண்டு மனம் தாங்காது, செவிலிக்கு உண்மையைக்கூறி, இவள்

நோய்க்குப் பரிகாரம் தேடலாம் என்ற எண்ணம் தோழிக்கு ஏற்படுவதுண்டு. ஆனால் தலைவியின் அனுமதியில்லாமல் அதனைப் புலப்படுத்தக் கூடாதே! அக்காலங்களில் வெளிப்படத் துடித்துக்கொண்டு வாயளவு வந்துவிடும் உண்மையைத் தோழி முயன்று மீண்டும் தன் மனத்துக்குள்ளேயே சென்று தங்கும்படிச் செலுத்தி விடுவாள். இதனையே அவள் செறித்துக் கடவல் என்ற சொற்களால் நமக்கு உணர்த்தியிருக்கின்றாள்.

இவ்வாறு வெளிவரத் துடித்துக் கொண்டிருந்த உண்மையைத் தோழி அடக்கியதற்குத் தலைவி மட்டும் காரணமாக மாட்டாள். செவிலிக்கும் அதன் பொறுப்பு சேரும். தான் உண்மையைக் கூறின், அதனைச் செவிலி ஏற்றுக்கொள்ளுவாளா என்ற ஐயமும், ஏற்றுக்கொள்ளினும் இவ்வாறு நிகழப்பார்த்திருந்தாயே என்று தன்னைக் கடிந்து கொள்ளுவாளே என்ற அச்சமும் தோழிக்கு உண்டு. இவையிரண்டுமே அவளை மறை புலப்படுத்த வொட்டாமற் செய்தனவேயல்லாமல், நச்சினார்க்கினியர் கூறுவதுபோல் நோயின் கடுமையன்று. இதனை அவளே பின்னர்த் தெளியக் கூறுகின்றாள்.

முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வரும் குரைய கலம்கெடின் புணரும்;
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசுஅறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆகுஅறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொல்மருங்கு அறிஞர்; (13–18)

முத்தினாலும், மாணிக்கத்தினாலும், பொன்னாலும் மாட்சிமை பெற்றனவாகப் பொருந்தியிருக்கும் அணிகலன் கள் (வறுமையை எய்திய காலத்துத்) தொலைந்து விட்டனவேனும் (பின்னர் நல்லூழ்வர, அவை) சேருதலும் கைகூடும். (ஆனால்) குணமும், மேன்மையும்

குறைந்துவிட்டால் (அக்குறைபாடு காரணமாக ஏற்பட்டுவிடும் பழியினை) முற்றிலுமாக இல்லையாம் படித்துடைத்து, விளக்கத்தையே பண்பாக உடைய புகழினை (மீண்டும் பழைய மேம்பாட்டினை யுடையதாய் விளங்கும்படி) நிலைபெறுத்தல் பற்றற்ற மெய்யறி வினையுடைய பெரியோர்களுக்கும் (சிறுமை சேர்ந்து விட்ட) அந்நிலையில் எளிதாகும் என்று பழமையான பெருநூல்களை (ஓதி, உணர்ந்து, துளக்கறத்) தெரிந்து கொண்ட அறிஞர்கள் கூறமாட்டார்கள்.

**அத்துணை:**

அவ்வளவு, நெஞ்சறிசுட்டு. மனத்தால் மிக மாண்புடையதாகக் கருதிக் கொள்ளப்படும் ஓர் எல்லையைக் குறிப்பிடும். அணிகலன்களின் பெருமையை வியந்ததாம். இதனால் அவற்றின் தொலைவு எளிதில் ஈடுசெய்ய முடியாததது எனக் குறிப்பித்தாள்.

**நேர்வருதல்:**

பொருந்தியிருத்தல். இவற்றை வறுமையால் தொலைந்துவிட்ட அணிகலன்கள் என்று கொள்ளாமல், காலக் கழிவால் இயல்பும், ஒளியும் குன்றியன எனக் கொள்ளுவதும். அவற்றை மீண்டும் புதுப்பித்துப் பழைய ஒளியினைப் பெற வைப்பது கூடும் எனக் கருதுவதும் பொருந்தும். இது தலைவியின் எழில் மீண்டும் ஒளி பெறும் என்பதனைக் கருதிக் கூறியதாகவும் கொள்ள இடமளிக்கின்றது.

**குரைய:**

இது ஓர் அசைச்சொல். இவ்விடத்தில் இதனைப் பயன்படுத்தியது, அத்துணை என்ற குறிப்பிட்ட

மாட்சியின் எல்லையை நினைத்துப் பார்க்கத் தூண்டுவதாய் அமைகின்றது.

சால்பு:

குணம். பிறந்த குலத்தின் பெருமையால், முயலாமல் கிடைப்பது. வியப்பு: பிறரால் பாராட்டப்பெறும் மேன்மை. இது கல்வி கேள்விகளின் முதிர்ச்சியால் கிடைப்பது.

இயல்பு:

உலக வழக்கை ஒட்டி நடக்கும் தகுதி. இது மேற்கூறியவற்றின் பயனாய்ப் பெறப்படுவது. 'உலகத்தோடு ஒட்ட ஒழுகலே' அறிவுடைமைக்கு அழகாகும் என வள்ளுவர் கூறுவதனை நினைக. இவற்றால் இயல்பாய்ப் பெறும் குணநலம், முயன்று பெறும் அறிவு முதிர்ச்சி, பின்னர் இவ்விரண்டினையும் பயன்படுத்துவதால் தோன்றும் பணிவு ஆகிய இவையனைத்தையும் ஒருங்கே பெற்றவரே சான்றோர் எனத் தகுவர் என்று தெரிகின்றது.

சிறு குற்றமேயெனினும், பெரியோர் தவறிச் செய்ததே எனினும், அது குணக் குறைவைத் தப்பாது விளைவித்து விடும் என்றும், அதனைப் பின்னர் எப்பாடு பட்டாலும் முற்றிலும் மறையும்படித் தொலைத்துவிடுதல் எத்தகைய பெரியோருக்கும் இயலாது என்றும் ஆசிரியர் வற்புறுத்தியிருக்கின்றார். இதனால் பெரியோர்களாக ஆதலினும், அரிதின் முயன்று பெற்ற அம்மேம்பட்ட நிலையினின்றும் நழுவாமல் இருத்தல் மிக அரிது என விளங்குகின்றது. எப்பொழுதும், என்ன நேரினும், தம்நிலை தளராமல் காத்துக் கொள்ளும் உரனுடையவரே சான்றோர் எனக் கருதப்படுவர்.

**மாசு:**

குற்றம். மனமொழி மெய்களின் இயக்கத்தால் தோன்றுவது. அறக்கழீஇ: முற்றிலும் இல்லையாம் படிப்போக்கி. புகழ் எப்பொழுதும் விளக்கமுடையதாகவே இருக்கும்; கதிரவனுடைய ஒளியினைப் போலவே, விளக்கத்தைப் புகழினின்றும் பிரிக்க முடியாது. எனவே, வயங்குபுகழ் எனப்பட்டது.

**ஆசு:**

பற்று. 'ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ' *(புறம்:225)* என்பதனைக் காண்க. ஆசறு காட்சி ஐயர்: பற்றற்ற மெய்யறிவினையுடைய மேலோர். இவர்கள் எய்தியுள்ள நிலை வியக்கத்தக்கது என்பார் ஐயர் என்றார். 'ஐ வியப்பாகும்' *(தொல்: சொல்: 385)*

## தொல் மருங்கு அறிஞர்:

காலக் கழிவால் அழிவெய்தி விடாமல், எக் காலத்துக்கும் ஏற்றவையாய்ப் பொருந்தி, நிலைபெற்று வாழ்வனவாய் உள்ள பழைய நூல்களை முறையாகக் கற்றுத் தெளிவினைப் பெற்ற பேரறிஞர். மிகப் பழமையான நூல்கள் என்றமையால், அவை பல தலைமுறைகளினும் பலரை உய்யக் கொண்டு உயர்த்திய பெருமையைப் பெற்றன என்று உணர்த்தினார்.

இவ்வாசிரியர் இயன்ற இடங்களில் எல்லாம் சான்றோர் சிறப்பியல்புகளை வியந்து பாராட்டும் பண்பு மிக்கவர். நற்றிணை 1, 32-ஆம் பாடல்களிலும், அகநானூற்றின் 2, 382-ஆம் பாடல்களிலும், இவர் இவ்விடத்திற் போலவே சான்றோரைப் பாராட்டியிருக்கக் காணலாம். தமக்கு விருப்பமான இச்செய்தியைப் புகுத்திக் கூறுகின்றாரே யெனினும், இவர் இதனைத்தாம் இயற்றும் பாடலின்

பொருளோடு இயைந்து காணும்படி அமைத்துக் காட்டுகின்றார்.

செவிலிக்கு அஞ்சித் தனக்குத் தெரிந்திருந்த செய்தியை இதுகாறும் வெளிப்படுத்தாதிருந்த தோழி, இப்பொழுது தலைவியின் விருப்பத்தை நிறைவேற்றத் தான் முன்வந்ததாகப் பின்னர் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளுகின்றாள். இவள் தான் கூற வந்ததனைக் கூறுமுன் சான்றோர் சிறப்பினைக் குறிப்பிட்டது இவள் கூறுவனவற்றைச் செவிலி விரும்பிக் கேட்கவும், ஏற்றுக்கொள்ளவும் ஆக்கம் அளிக்கின்றது. 'இவ்வளவு துணிவுடன் பெரியோரைப் பற்றிப் பேசுமிவள், அவர்கள் காட்டிய வழியிற்செல்லும் பண்புடையவள் போலும்!' என்றும், 'அவர்களைப் போல இவளும் குணக் குறைவுடையனவற்றைப் போற்ற மாட்டாள் போலும்!' என்றும், செவிலி எண்ணிக்கொள்ள வேண்டுமென்றே தோழி இங்குச் சான்றோர் பெருமையைப் புலப்படுத்தியிருக்கின்றாள்.

மாதரும் மடனும் ஓராங்கு தணப்ப
நெடுந்தேர் எந்தை அரும்கடி நீவி
இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென
நாம்அறி வுறாலின் பழியும் உண்டோ? (19 – 22)

காதலும், பேதைமையும் (நம் அச்சம், நாணம் என்ற இரண்டினையும்) ஒருசேரப் போக்கவும், பெரிய தேர்களைப் பெற்றுள்ள என் தந்தையின் கிடைத்தற்கரிய பாதுகாவலைத் துறந்துவிட்டு, நாம் இருவரே சூழ்ந்து முடித்த மணம் இது என்பதனை (நம் தாய்க்கு) நாம் தெரியச் சொல்லுவதனால், நமக்குக் குற்றமும் கூடுமோ'

**மாதர்:**

அன்பு; காதல், விருப்பம். இது காமத்தைத் தூண்டும் இயல்புடையது. மடன்: பேதைமை. ஆராய்ந்து பாராமல்

தலைவன் கூறியவற்றை ஏற்றுக் கொள்ளும் இயல்பு. இதனைக் கொளுத்தக் கொண்டும் கொண்டது விடாமல் என நச்சினார்க்கினியர் விளக்குவர்.

மாதரும் மடனும்சேர்ந்து இவ்விருவரையும் தம் அச்சத்தையும், நாணத்தையும் துறக்கச் செய்தன. இவற்றால் இவர்கள் தம் அறிவைப் பயன்படுத்த முடியாமற் போயிற்று என்க. 'நாணட்டு நல்லறிவிழந்த காமம்' (குறு. 231) என வந்திருத்தலைக் காண்க.

மாதர் காரணமாக மடன் தோன்றியது. பின் இவையிரண்டும் சேர்ந்து இவர்கள் அச்சத்தை அகற்றின; அதன்பின் விளைவாய் இவர்கள் தம் நாணத்தைத் துறந்தனர். இதனால் தலைவி காதலன் ஒருவனைத் தானே தெரிந்து கொள்ள நேர்ந்தமைக்குக் காரணம் காட்டியிருக்கின்றாள்.

மாதர் என்ற சொல்லை இம்முறையில் பொருள் கொள்ளாமல், நச்சினார்க்கினியர், அதனைத் தந்தையும், தாயும் இவளை ஒருவனுக்கு மணமுடிக்கக் கருதியிருந்த ஆவலாகக் காட்டியிருக்கின்றார். தாம் கொண்டதற்கு ஏற்ப, 'இருமுது குரவரும் தமக்கு இயைந்தோர்க்குக் கொடுப்போம் என்றிருக்கின்ற காதலும் என்மடனும் சேரப்போக' எனப் பொருள் விரிக்கின்றார்.

இச்சொற்கள் இப்பாடலில் தலைவி கூறியனவாக வந்தவை. இவற்றைத் தன்னுடைய நடத்தையை அவளே விளக்குவதாகக் கொள்ளுவதே சிறந்தது. நச்சினார்க்கினியர் கருதியபடி கொள்ளின், இவை தலைவியின் நடத்தை காரணமாக விளையும் விளைவினைப் புலப்படுத்தும். இவள் எப்படித் தலைவனைத் தேடிக்கொண்டாள் என்பதனை விளக்கவே இப்பாடல் எழுந்தது. எனவே அவள் செயலின் விளைவைக் குறிப்பிடல் தேவையில்லை; மேலும் தந்தையர், முதலியோர் பொறுப்பேயல்லாமல்,

தோழியின் பொறுப்பாகாது. இவையே யல்லாமலும், தாயும் தந்தையும் இவளுக்கு ஒருவனை மணமுடிக்கத் கருதியிருந்ததனை ஓரளவு குறிப்பால் அறிந்தும், இவள் அதனைப் பொருட்படுத்தாது ஒரு தலைவனைத் தேடிக்கொண்டாள் எனக் கருதவும் தோன்றும்.

## தணத்தல்:

போக்கல் காதலும், மடனும் முறையே ஈர்த்தலையும் செலுத்துதலையும் செய்ய, இவள் விடக்கூடாத தந்தையின் பாதுகாவலைத் துறக்க நேர்ந்தது என்பதாம். துறந்தாளே எனினும், தந்தையின் பாதுகாவலின் நன்மையையும், இன்றியமையாமையும் உணர்ந்து அதனைக் குறிப்பிட்டிருக்கின்றாள். இதனால் இவள் அதனை எளிதில் துறந்துவிடவில்லை. ஆராய்ந்து பார்த்த பின்னரே இச்செயலைச் செய்ய முன் வந்தாள் எனப்புலப்படுகின்றது.

இதனால் தலைவி ஒரு காதலனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது விளையாட்டு, அல்லது அறியாமை காரணமாய் நிகழ்ந்து விட்டதன்று; பொறுப்புடைய செயலேயாம் எனத்தோழி உணர்த்துகின்றாள். ஆயின், 'அவள் மாதரும் மடனும் தூண்ட இவ்வாறு செய்தாள்' எனக்கூறியது, அது பொறுப்புடைய செயல் என்பதனோடு மாறுபடாதோ எனின், படாது; கேட்பவரைத் தான் கூறுவனவற்றை ஏற்றுக்கொள்ளச் செய்யக் கையாளும் ஓர் உத்தியே இவ்வாறு வேறுபாடு தோன்றும்படி கூறியது என்க.

## நெடும் தேர்:

பெரிய தேர். நெடுமையை வரிசையாகக் கொண்டு, பலவாய தேர் என்பதும் ஏற்கும். இது தந்தையின் செல்வ மிகுதியை உணர்த்த வந்தது. செல்வம் மலிந்த வீட்டில் பிறப்பதே எளிதில் எல்லோருக்கும் கிடைக்கமாட்டாத

ஒரு பெரும் பேறு. அதனோடு தந்தை அன்புடைய வனாகவும் இருப்பின், அவனுடைய பாதுகாவலைத் துறத்தல் அறிவுடைய—நன்மையை நாடிக்கொள்ளும்—செயலாகுமா? இதனை உணர்த்திக் காட்டவே அருங்கடி என்றாள்.

**இருவேம்:**

தலைவியும், தோழியும். நச்சினார்க்கினியர் கருதியிருப் பதனைப்போல் இது தலைவனையும், தலைவியையும் குறிப்பிடுவதன்று. மேல் தோழி, 'எமியேம் துணிந்த' எனத் தன்னையும் உளப்படுத்திக் கூறிக்கொள்ளுகின்றாள். இதனைத் 'தானும் உடன்படுதலின் எமியேம் துணிந்த' என்றாள் என்று நச்சினார்க்கினியரே தோழியையும் தலைவியையும் குறிப்பிடுவதாகவே கொண்டிருக்கின்றார். பின்னர்த் தோழி கூறியிருப்பதனையே இங்குத் தலைவி சுட்டியிருப்பதாகக் கொள்ளுவதே இயல்புடையது. மாதரும், மடனும் தலைவனுக்கு இருக்காது! எனவே அவள் தோழியை உளப்படுத்தியே கூறினாள் என்க.

மாதரும் மடனும் செலுத்தச் சூழ்ந்ததே எனினும், இது தள்ளப்படும் தன்மையுடையதன்று என்பாள் ஆய்ந்த என்று கூறினாள். தலைவனைக் கண்ட மாத்திரத்தில் 'இவள் அருமறை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையள்' *(கலி:39)* ஆகிவிட்டாள் என்பதனைப் புலப்படுத்தவே மன்றல் எனக்கூறியிருக்கின்றாள். உண்டோ எதிர்மறை. இல்லை என்றபடி.

ஆற்றின் வாரார் ஆயினும், ஆற்ற,
ஏனைஉல கத்தும் இயைவதால் நமக்கு; என
மான்அமர் நோக்கம் கலங்கிக் கையற்று
ஆனாச் சிறுமையள் இவளும் தேம்பும்; (23 – 26)

(நாம் செல்லத் துணிந்துவிட்ட) வழியிலே (நம்மைப் போகவிட) வரவிரும்பாதவர்களே ஆகிவிடினும், (நாம் நம் உறுதி குன்றாமல், இவ்வுடல் உள்ளவரை) பொறுத்துக் கொண்டு இருப்போம் ஆயின், (இப்பொறுமையாகிய நோன்பின் பயனாய்) அடுத்த பிறவியிலேனும், நமக்கு (நம் விருப்பம்) கைகூடும்; என்று (என்னிடம் சொல்லுபவள்) மான்களுடையதனைப் போன்ற விருப்பத்தை விளைவிக்கும் பார்வை, (தன் இயற்கை) திரிந்து, (மையல் நோக்கம் தோன்றி விடவும், இன்னது செய்யலாம் என்ற விருப்பம் எதுவும் இல்லாமல்) செயலற்று, நீங்காத குறையையுடையவளாகி இவளும் மெலிகின்றாள்.

**ஆறு:**

வழி, 'அறந்தலைப் பிரியா ஆறு மற்றதுவே' (கலி:9) எனச் சான்றோரால் பாராட்டப்பெற்ற வழியினையே இச்சொல் குறிப்பிடுகின்றது. ஆற்றுதல்: பொறுத்துக் கொண்டிருத்தல். இங்குத் தாய் தந்தையரும், சுற்றத்தாரும் தன் செயலை ஏற்றுக்கொள்ள மறுத்தார்களேயெனின், தலைவி இன்னவாறு செய்யத் துணிந்துவிட்டாள் என்பதனைத் தோழி செவிலிக்கு வற்புறுத்தி உணர்த்தியிருக்கின்றாள்.

'மாதரும்... நமக்கு' என்ற பகுதி தலைவி தோழிக்குக் கூறிய சொற்களைக் கொண்டது. இதுவே தோழியை அறத்தொடு நிற்கத் தூண்டுவதாகும். தன் அச்சத்தை அகற்றிப் பேசத் துணியவைத்த சொற்களைத் தோழி தலைவியின் வாய்மொழியாகவே வெளிப்படுத்துகின்றாள். இயல்பாகத் தோன்றும் நாணை அகற்றவும், செவிலிக்கு வற்புறுத்தவும் இம்முறை பெரிதும் பயன்படும். வழக்கிலும் பிறரை வற்புறுத்த விரும்பும் காலத்து, நாம் வேறொருவரைச் சாட்டிக் கூறும் உத்தியைக் கையாளுவதனை நினைக.

## ஏனை உலகம்:

மறுபிறப்பு. வேறு உலகம் எனின், அங்குத் தோன்றுவது மக்கட் பிறப்பாகாது; இவள் அவனை மணத்தலும் நிகழாது, 'இம்மை மாறி மறுமையாயினும், 'நீயாகியர் என் கணவனை, யானாகியர் நின்நெஞ்சு நேர்பவளே ! (குறு;49) என் இவ்வுலகத்திலேயே மீண்டும் பிறந்து, மணம் பெற்று வாழ்வதனை வேண்டியதாகக் கூறியிருப்பதனைக் கருதுக. 'மறுமை உலகத்து மன்னுதல் பெறினே' (குறு:199) என்ற பரணர் பாடலினும் உலகு எனக்குறிப்பிடப் பெற்றிருக்கின்றதேனும், அது மறுமையில் புதியதாகத் தோன்றும் இவ்வுலகினையேயாம்.

'இம்மையுலகத்து இசையொடும் விளங்கி, மறுமையுலகமும் மறுவின்று எய்துப' (அகம்:66) என உத்தரகுரு போன்ற போக பூமிகளிற் சென்று பிறக்கும் பேற்றினை வேண்டியவளும் உண்டே! ஆம். அவ்வாறு விரும்பியவள், இல்லற வாழ்க்கையை ஆரத்துய்த்து, அதன் பயனாய்ப் பூங்கட் புதல்வனைப் பயந்தெடுத்து மனநிறைவினைப் பெற்ற மங்கை என்பதனை உன்னுக. இப்பாட்டில் தலைவி, இப்பொழுதுதான் வாழ்க்கையின் முதற்படியில் காலூன்றியிருக்கின்றாள்!

## மான்அமர் நோக்கம்:

முன்னர் பயின்றவற்றைக் காணுங்காலத்தும் மருளும் மான்களின் அச்சம் நிறைந்த பார்வை. இது தன்னைக் காண்பவரை அன்பு கொள்ளச் செய்யும் பண்பு சிறந்தது. கை: ஒழுக்கம், கைகோள் என்பது ஒழுகலாற்றை உணர்த்துவதனை நினைக. கையறுதல்: ஒழுக்கம் ஒன்றும் இல்லாமல் இருத்தல். தலைவியின் இரண்டும் கெட்ட நிலையை இது தெளிவாய்ப் புலப்படுத்துகின்றது. நொதுமலர் வரலால் இனிக்களவொழுக்கம் நிகழாது;

நன்மணம் நிகழும் வரை, இவளைக் களவு, கற்பு என்ற இரு ஒழுக்கங்களில் எதனையும் மேற்கொண்டவளாகக் கருதுவதற்கில்லை. இந்நிலையை எண்ணிப்பார்க்கவும், இவள் மானமர் நோக்கம் மறைந்து, கலக்கம் தோன்றிவிட்டது. இது காண்பவரை இரங்கச் செய்யும்.

இப்பிறவியிற் போலவே, மறுபிறவியிலும் இத்தலைவனையே தன் காதலனாகப் பெறக்கூடும் என்ற உறுதி இவளுக்கு இருக்கின்றது என்பதனை உலகத்தும் என்ற உம்மை உணர்த்துகின்றது. அப்பொழுது, இவள் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதற்குத் தடையாய் இருக்கும் இச்செவிலியும் தாய் தந்தையரும் இருக்கமாட்டார் என்ற துணிவு, இவளை இயைவதால் எனக்கூற வைத்தது.

தலைவி கூறியவை அனைத்தும், பின்னர் நிகழப் போவனவற்றையோ, அல்லது அவை நிகழக்கூடிய முறையினையோ, நினைத்துக் கூறியவை அல்ல. தன் தாய் தந்தையரைத் தன்வழிக்குத் திருப்ப அவள் கையாண்ட உத்தியே வருவனவற்றைக் குறித்துக் கூறச் செய்தன. ‘இருவர்கண் குற்றமும் இல்லையால்’ என்று உணர்ந்த அவர்கள் ‘தெருமந்து சாய்ப்பார் தலை!’ இவ்வாறு செய்யவே, தலைவி தான் ஒரு துணிவினை மேற்கொண்டு விட்டவளைப் போலப் பேசியிருக்கின்றாள்.

### ஆனாச் சிறுமை:

நீங்காத குற்றம்: தலைவியைத் தவிர்க்க முடியாத குற்றத்தைச் செய்தவள் போலத் தோழி குறிப்பிட்டிருப்பது வெறும் நடிப்பே! செவிலி இதனை எப்படிக் கருதுவாள் எனக் காணக்கூறிய சொற்களே அவை! தோழியின் கருத்து இவற்றுக்கு நேர்மாறானதாகும். மேல், அவள் செயலை மன்றல் எனக்கூறியவள், பின்னர் அது சிறப்புடையது

என்றும், பெரியோர்களால் விரும்பி ஏற்றுக்கொள்ளக் கூடியது என்றும், நன்மையைப் பயக்கும் பண்புடையது என்றும் விவரிக்கின்றாள்.

தானே நோயைத் தேடிக்கொண்டவள், அதனால் உன்னை இத்தகைய துன்பத்தை அடையுமாறு செய்திருப்பதனோடு நில்லாமல், தானும் தொடர்ந்து துன்பப்பட்டவாறு இருக்கின்றாளே என்பாள் இவளும் தேம்பும் என்றாள்! செவிலியின் நிலைக்குப் பெரிதும் இரங்குபவளைப் போல் நடிக்கும் தோழியின் திறன் பாராட்டத்தக்கது. இதனால், 'உன் துன்பத்தைக் காணமாட்டாமல், அதனைப் போக்கவே நான் முன்வந்திருக்கிறேன்' என்று அவள் செவிலியை உணரவைக்க முற்படுகின்றாள். உலகில் எவரும், முதற்கண் தம் நன்மையையே நாடுவர்; தாம் நிறைந்த மனத்தராகிய பின்னரே, பிறரையும் அவ்வாறு இருக்கச் செய்ய முற்படுவர். இது மக்கள் இயல்பு. இதனைக் கருதியே தோழியும் செவிலிக்கு நன்மையைச் செய்ய முன்வந்தவளைப் போல் நடித்து, தலைவியின் நன்மையை நாடியிருக்கின்றாள். இதனால், செவிலி தான் கூறுவனவற்றை விரும்பிக்கேட்கும் பயனைத் தோழி பெறுவாள்!

தொலையவும், நெகிழவும், அறியவும், அலைப்பவும், உறையும் உய்யா அரும்படர், செப்பல் வன்மை இல் செறித்து யான் கடவலின், தணப்ப, நீவி, ஆய்ந்த மன்றல் இதுவென அறிவுறாலின் பழியு முண்டோ, வாரார் ஆயினும், ஆற்ற இயைவதால் எனக்கலங்கிக் கையற்றுத் தேம்பும்.

இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்
வினைஇடை நின்ற சான்றோர் போல
இருபேர் அச்சமொடு யானும் ஆற்றலென்; (27 – 29)

(தம் உள்ளங்களை நிறைத்து மிகுந்த) மாறுபாடாகிய பகைமை (மேற்செல்லும்படிச்)செலுத்தும் இரண்டு பெரிய அரசர்கள் செய்யும் போரினிடையே (அதனைத் தடுத்து நிறுத்த) நின்ற சான்றோர்களைப் போல (இவள் நோய் மிகுவதால் ஏற்படும் அச்சம், உண்மையைக் கூறின் நீ சினப்பாயோ என்ற அச்சம், ஆகிய) இருவகைப்பட்ட மிக்க அச்சங்களைக் கொண்டவளாய், நானும் (உங்கள் இருவருள் ஒருவருக்கும்) உதவி செய்ய முடியாதவளாக ஆகிவிட்டேன்;

**இகல்:**

மாறுபாடு, பகைமை. கடவல்: செலுத்துதல். மீக்கடவல்: மேற் செல்லச் செலுத்துதல். மனமாறுபாடு காரணமாக விளைந்த போராகையால் சந்து செய்விக்கவந்த சான்றோர்க்குத் தம் செயல் அரிதாகிவிட்டது. இருவருள் ஒருவரும் முதன் முதலில் விட்டுக்கொடுக்க இசையவில்லை! இவருள் எவரை முதற்கண் மனம் மாற்றி மாறுபாட்டினைக் கைவிடச் செய்வது என்று சான்றோருக்குத் தெரிந்து கொள்ள முடியைவில்லை! எனவே திகைத்து நின்றுவிட்டனர்!

**ஆற்றுதல்:**

உதவியளித்தல். 'ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுவீர் (புறம்;158) என்பதன் உரையைப் பார்க்க. தலைவியின் ஆற்றாமை செவிலியின் மயக்கம் இவ்விரண்டனையும் ஒரு சேரப் போக்கத் தக்க வழி தோழிக்குத் தெரியும்; எனினும் அதனை வெளியிடத் துணிவில்லாமல் இவள் இருவரையும் துன்பத்தைத் துய்க்க வைத்து விட்டாள்.

யாரை முதலில் விட்டுக் கொடுக்கச் சொல்லலாம் என்று துணியமுடியாமல் கவன்ற சான்றோர் இருவரையும் போரிடாமல் தடுக்கச் செய்யும் வழி தெரிந்தும் அதனைச்

செயல்படுத்தத் தெரியாமல் கவன்ற நிலையினைப் போல, தோழியும் இருவருக்கும் உதவியளிக்கும் வழியைத் தெரிந்திருந்தவளாய் இருந்தும், அதனைச் செயல்படுத்தத் துணிவில்லாதவளாக இருந்தாள் என்பதனை யானும் என்ற உம்மையால் உணர்த்தியிருக்கின்றாள்.

ஆற்றல் ஏன்:

பொறுத்துக் கொண்டிருப்பானேன்? 'வலி மிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை நயனாடி நட்பாக்கும் வினைவர்' *(கலி:46)* போல இல்லாமல், இருவரையும் துன்பம் துய்க்காமல் இருக்கச் செய்ய வழி தெரிந்திருக்கும் யான் இனிப்பொறுத்துக் கொண்டிருப்பது ஏன் எனக்கருதி, நீங்கள் நன்மையை அடையக்கூடிய வழியைக்கூற முன்வந்தேன் எனத்தோழி குறிப்பிட்ட தாகவும் கொள்ளலாம். இப்பொருளுக்கு, யாரை முதலில் விட்டுக் கொடுக்கச் செய்யலாம் என்று துணிய மாட்டாமல் கலங்கும் சான்றோரைப் போலல்லாமல், தோழி, செவிலியையே விட்டுக் கொடுக்கச் செய்ய வேண்டும் என்பதனை உணர்ந்திருந்த தன் பெரு மிதத்தினைப் புலப்படுத்த யானும் என்றாள் எனக்கொள்ளவேண்டும்.

கொடுப்பின் நன்கு உடைமையும், குடிநிரல் உடைமையும்
வண்ணமும், துணையும் பொரீஇ எண்ணாது
எமியேம் துணிந்த ஏமஞ்சால் அருவினை
நிகழ்ந்த வண்ணம் நீநனி உணரச்
செப்பல் ஆன்றிசின்; சினவா(து) ஈமோ! (30 – 34)

(இவளை, இவள் விரும்பியவனுக்கே) மணஞ்செய்து கொடுப்பின் அது நன்மை பொருந்தியதாய் இருக்கும் என்பதனையும், (இருவருடைய) குடிகளும் தம்முள் ஒத்தனவாய் இருப்பதனையும் (இவர்களுடைய)

குணநலங்களையும் சுற்றத்தார் தகுதிகளையும் (பெற்றோரையும், உற்றார் உறவினரையும் போல அலசி) பொருத்திப்பார்த்து ஆராய்ந்து கொண்டிராமல், நாங்களாகவே முடிவுசெய்து விட்ட பாதுகாவல் நிறைந்த இப்புதுமையான மணம் நிகழ்ந்த முறையினை நீ நன்றாக உணர்ந்து கொள்ளும்படிச் சொல்லுதலை மேற் கொண்டேன்; கேட்டருள்!

**நிரல்:**

ஒப்புமை. வண்ணம்: குணம், பொரீஇ பொருத்திப் பார்த்தல், எண்ணல்: ஆராய்ந்து பார்த்தல். இவற்றையெல்லாம் பலபட ஆராய்ந்து பார்க்கும் பெற்றோரும் உற்றோரும் மணம் செய்து கொள்ள வேண்டியவர்கள் விருப்பு வெறுப்புகளைத் தெரிந்து கொள்ள முற்படுவதில்லை. இதுவே இன்பம் பயக்கும் நன் மணத்துக்கு இன்றியமையாது வேண்டுவது என்பதனை வற்புறுத்துவாள் போலவே, பெரியோர் செய்வனவற்றைச் செய்யாது துணியப்பட்ட மணம் இது என்றாள்.

**இசின்:**

இறந்த காலத்தைக் குறிப்பிடும். இனிச் சொல்லப் போகின்றவற்றைத் தோழி கூறத் துணிந்து விட்டதனை அது இங்குக் குறிப்பிடும் ஆற்றல் பெற்றதாக விளங்குகின்றது.

பலபட எண்ணாது நிகழ்ந்ததேனும், இனி எண்ணி மாற்றிக்கொள்ள முடியாது என்பாள் துணிந்த வினை என்றாள்; மாற்றிக்கொள்ள முடியாததேனும், இதனால் தலைவிக்கு ஊறு விளையாது, நன்மையே எய்தும் எனத் துணிவு தோன்றக்கூறுவாள் ஏமஞ்சால் வினை என்றாள். தந்தையும் சுற்றத்தாரும் எப்பாடுபட்டுத் தேடியலைந்தாலும்

இத்தகைய நல்ல தொடர்பினைப் பெற்றிருக்க முடியாது என்று உணர்த்த விரும்பியவள் அருவினை என்றாள்.

நீ விரும்பி ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதற்காகவே நான் நடந்தவற்றைக் கூட்டியோ, குறைத்தோ, மாற்றியோ, திரித்தோ கூறப்போவதில்லை. உண்மையை உள்ளவாறு நீ நன்றாக உணர்ந்து கொள்ளும்முறையிலும், நான் மேல் குறிப்பிட்டவற்றை நீயே ஏற்கும் என்று ஒப்புக்கொள்ளு வதற்காக விரிவாகக் கூறுவேன் என்பாள் நீ நனியுணரக் கூறுவேன் என்றாள். இவ்வாறு கூறியது, தான் கற்பித்துக் கூறப்போவதனைச் செவிலியை உண்மையென ஏற்றுக்கொள்ளச் செய்யும் ஆற்றல் உடைய உத்தியாம்.

சினம் அறிவைச் சிதைக்கும். எனவே அதற்கும் சிறிதும் இடம் கொடுக்காமல் கேட்டருள் என்றாள். இதனால் உன்னுடைய சினம் என்னைக் கடிந்து கொண்டாலும் உன் அறிவு நான் கூறுவனவற்றை ஏற்றுக் கொள்ளும் என்று குறிப்பாய்ச் செவிலிக்கு உணர்த்தினாள் என்க. இது தோழியின் தன்னம்பிக்கையின் எல்லையையும், திறனின் அளவையும் ஒருங்கே புலப்படுத்துகின்றது!

இப்பகுதி-முதல் முப்பத்துநான்கு அடிகள்— இப்பாட்டினுள் பொதிந்திருக்கும் கதைக்குச் சிறந்த தோற்றுவாயாக அமைகின்றது. இம் முன்னுரையைத் திறம்பட உரைத்திருப்பதனைக் கொண்டே, தோழி கதையைச் சுவை பயக்க விரித்துரைப்பாள் எனத் துணியலாம்.

'நெல்கொள் நெடுவெதிர்க்கு அணந்த யானை
முத்(து)ஆர் மருப்பின் இறங்குகை கடுப்ப
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்
நல்கோள் சிறுதினை படுபுள் ஓப்பி
எல்பட வருதியர்' எனநீ விடுத்தலின், (35 – 39)

'நெல்லைத் தன்னிடத்தே கொண்டுள்ள உயர்ந்த மூங்கிலுக்கு (விருப்பங்கொண்டு) தலையைத் தூக்கிய யானையின் முத்துக்கள் நிறைந்திருக்கும் கொம்புகளின் மேல் வளைந்து தோன்றும் துதிக்கையைப் போல பஞ்சினைத் தம்மீது கொண்டிருப்பவற்றைப் போல் (தோன்றும் படி) வெளிப்படுத்திய, முற்றிக்கொண்டு வரும் தன்மை சிறந்த பெரிய கதிர்களில், நன்றாகப் பாலை ஏற்றுக்கொண்ட சிறிய தினையின் மணிகளுக்கு (விருப்பம் கொண்டனவாய், அவற்றை உண்ண) வந்து விழும் பறவைகளை ஓட்டிவிட்டு, பகல் நீங்க வருவீர்களாக' என்று கூறி நீ (எங்களைப் போக) விட்டமையால்,

**வெதிர்:**

மூங்கில். அதனுடைய நெல், யானை பெரிதும் விரும்பும் உணவாகும். அணத்தல்: தலையைத் தூக்கல். 'ஆயிர அணர்தலை அரவு' (பரி;3:59) என்ற பகுதிக்கு, 'கிளர்ந்த தலை' எனப் பரிமேலழகர் உரை கூறியிருக்கின்றார்.

உயர்ந்து வளர்ந்திருக்கும் மூங்கிலை வளைக்கத் தூக்கிய துதிக்கையை, அம்மூங்கில் எட்டாமையால், வளைத்து மருப்பின் மேல் தங்க வைத்துக் கொண்டபடி, யானை அம்மூங்கில் நெல்லை எப்படிப் பெறுவது என்று எண்ணிய வண்ணம் இருந்த நிலையின் சித்திரம் இது தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முயலும் யானையின் தோற்றத்தை இதனால் ஆசிரியர் தீட்டியிருக்கின்றார்.

**துய்:**

பஞ்சு. புதிதாக வெளிப்படும் கதிர்களின் மீது பூவின் நுனிகள் ஒட்டிக் கொண்டிருப்பவை, பஞ்சினை அப்பி வைத்திருப்பது போல் தோற்றமளிப்பது. இயற்கையிற் காண்பது. பால் ஏறி, மணிகள் திரளத் தொடங்கியதும்,

அவை காற்றால் மோதப்பட்டுக் கழன்று விழும். அதன் பின்னரே, கதிர்கள் பார்ப்பதற்கு அழகாகத் தோன்றும்.

**இறங்குதல்:**

தாழ்தல். உயரத்தூக்கிய துதிக்கைக்கு மூங்கில் எட்டாமல் இருக்கவே, அதனைத் தாழ்த்தி விடாமல் தூக்கிய நிலையிலேயே ஒய்வு பெற மருப்பின் மீது வைத்துக் கொண்டு, அம் மூங்கிலை வளைக்க வழிகளை ஆராய்ந்தது யானை.

**கடுப்ப:**

ஒப்ப. உவமஉருபு; மெய்யுவமம். புனிறு: மகப்பேற்றால் வரும் தீட்டு; தூய்மையை இழந்தபடி இருக்கும் நிலை. பஞ்சு விலகியும், ஒட்டிக்கொண்டும் இருக்கும் நிலை. இந்நிலை மாறியபின்னரே, மணிகள் தின்பதற்கு ஏற்றவையாம்; மணிகள் முற்றிக் கொண்டு வரும் காலத்தில் நேராக நிமிர்ந்து தோன்றும் கதிர்கள், சிறிது சிறிதாக வளையத் தலைப்படும். நன்கு முற்றிய பின் கரிக் குறட்டினைப் போல் வளைந்து காணப்படும்.

**எல்:**

பகல். எனவே கதிரவனைக் குறிப்பிடுகின்றது. கதிரவன் படும்பொழுது எற்பாடு எனப் பெறும். அந்நேரம் வரை புனத்திலேயே இருந்து, பறவைகளை ஓட்டிவிட்டு, அதன் பிறகு வீட்டுக்கு வரும்படி செவிலி பணித்திருந்தாள்.

தான் சொல்ல வந்ததனைத் தொடங்கும் பொழுதே தோழி செவிலிக்கும் தம் செயல்களின் பொறுப்பு சேரும் என்று தோன்றும் வண்ணம், அவள் கட்டளையை அவள் வாய் மொழியாகவே கொண்டு கூறுகின்றாள். பின்னரும் அவள் தாம் அவ்வப்பொழுது நடந்து கொண்ட முறைகளுக்கு, இயற்கையையோ, நாய்களையோ

களிற்றினையோ காரணமாகக் காட்டுவாள். 'தலைவியைக் குற்றம் கூறுவதற்கில்லை, ஏனெனில் அவள் தன் செயல்களை விரும்பிச் செய்யவில்லை. நிகழ்ந்த வண்ணம் செய்ய நேர்ந்தாள்' என்ற கருத்தினைத் தோழி செவிலியின் மனத்தில் தோற்றுவிக்க முயன்றாள்.

கலிகெழு மரமிசைச் சேணோன் இழைத்த
புலிஅஞ்சு இதணம் ஏறி, அவண
சாரல் சூரல் தகைபெற வலந்த
தழலும் தட்டையும் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின ஊழ்ஊழ் வாங்கி
உரவுக்கதிர் தெறூஉம் உருப்புஅவிர் அமையத்து
விசும்(பு)ஆடு பறவை வீழ்பதிப் படர, (40 – 46)

· செழித்து (வளர்ந்திருந்த) நல்லநிறத்தைக் கொண்டிருந்த மரத்தின்உச்சியில், இரவில் தினைப் புனைத்தைக் காவல் செய்பவன் அமைத்த, புலிகள் அஞ்சும் தகுதியினையுடைய பரணின் மீது ஏறி, அவ்விடத்தேயிருந்த மலைச்சாரலின் கண் வளர்ந்த பிரம்பினால் அழகுபெறப் பின்னப்பெற்ற தழல், தட்டை, குளிர் என்பனவற்றையும், கிளிகளை ஓட்ட உதவும் பிற கருவிகளையும், (தேவைக்குத் தக்கபடி) முறை முறையே பயன்படுத்தி, வல்லமை மிக்க கதிரவனின் கிரணங்கள் சுடுகின்ற வெப்பம் மிகுந்து விளங்கும் நண்பகற் பொழுதிலே, வானத்தே திரியும் பறவைகள் (இரை தேடுதலை விட்டுத் தாம் தாம்) விரும்பிய சேக்கைக் கண்ணே சேரச் செல்லவும்)

**கலித்தல்:**

செழித்தல். 'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' *(புறம்:24)* இது மரத்தின் திண்மையையும் உயரத்தையும் உணர்த்த உதவுகின்றது. கெழு: நிறம். 'குருவும் கெழுவும் நிறனா கும்மே' *(தொல்: உரி:5)* தழை அடர்ந்து பசுமையுடன்

பொலிவு பெற்றிருக்கும் தோற்றத்தைப் புலப்படுத்த வந்தது. பகற்காலத்தே நிழல் தருவதனோடு, தழை அடர்த்தியால் பரணின் இருப்பை விலங்குகள் கண்டு கொள்ள முடியாதபடி மறைத்துக் கொண்டிருக்கும் தன்மையால் சிறந்த மரம் என்க.

**சேணோன்:**

உயர்ந்த பரணின் மீது இருப்பவன். பகற் காலத்தில் கொடிய விலங்குகள் நடமாடா. ஆகவே பகலில் தினைப்புனங்களைக் காக்கப் பெண்கள் போதும். அவர்கள் உயர்ந்த பாறைகளின் மீது நின்று கொண்டும், அல்லது கொல்லையின் நடுவே அமைக்கப் பெறும் சிறிய பரண்கள் மீதிருந்தும் தம் தொழிலைச் செய்வர். ஆனால் இரவில் காவல் புரிபவன், கொடிய விலங்குகளிடம் இருந்து தப்ப, உயர்ந்த மரத்தின் உச்சியில் பரண்களை அமைத்துக் கொள்வான். எனவே சங்கப் பாடல்கள் சேணோன் என்ற சொல்லை இரவில் புனங்களைக் காப்பவனைக் குறிப்பிடவே பயன்படுத்தியிருக்கின்றன. புலிகளுக்குப் பயந்து கட்டப் பெற்ற பரண். அவற்றையும் அஞ்சவைக்கும் தகுதி பெற்றது என்க.

**தழல்:**

சுற்றுவதனால் ஓசை உண்டாகும்படி பிரம்பினால் அல்லது சூரற் கொடியினால் பின்னப் பெறுவது. தட்டை: தட்டுவதனால் ஓசை உண்டாகும்படி மூங்கில் பிளவுகளால் செய்யப் பெறுவது. 'ஒலிகழைத் தட்டை' (மலைபடு: 328) 'வெதிர் புனை தட்டை' (நற்:147) 'அமை அறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டை' (அக '383) என்பன இது மூங்கிலால் செய்யப்படுவதனைக் குறிப்பிடு கின்றன. குளிர்: இழுத்து விடின் ஓசை உண்டாகும்படி மூங்கிற் பத்தைகளால் செய்யப் பெற்ற கருவி.

இவையனைத்தும் கிளிகடி மரபின என்றமையால், பிற பறவைகளை வாயால் ஓலமிட்டு ஓட்டினர் என உணர்த்தினாள். 'குருவி ஒப்பியும், கிளி கடிந்தும்' (சிலப்:24) எனக் கிளிகளைக் கடிதல் குறிப்பிடப் பெறுதலைக் காண்க.

'கிளியவள் விளியென எழல் ஒல்லாவே' (குறு:291) என இவ்வாசிரியரே மகளிர் குரலைக் கேட்டுக் கிளிகள் தம் இனத்தின் அழைப்பு என எண்ணி, வட்டமாய்க் கொல்லையில் வந்து விழும் என்று குறிப்பிடுகின்றார். இதனால் புலந்து அழுத கண்ணளாய்க் கொடிச்சி குளிரை ஒலித்தாள் என்பது அப்பாடலால் அறியப்படுகின்றது. இதனை உணர்ந்திருந்தவள் கிளிகளை ஓட்டியதனைக் கூறினால், பிற பறவைகளை ஓட்டியமை பெறப்படும் என்று எண்ணி தாம் கிளிகளைக் கடிந்ததனை மட்டும் குறிப்பிட்டிருக்கின்றாள்.

அருகே வந்து விழுவனவற்றைத் தழல், தட்டை குளிர் இவற்றை இயக்கியும், தொலைவில் இருப்பனவற்றைக் கவணால் எறிந்தும் ஓட்டினர் என்பதனை உணர்த்த ஊழ் ஊழ் வாங்கி என்றாள்.

நண்பகற் பொழுதில் பறவைகள் இரை தேடுதலை விடுத்துத் தத்தம் சேக்கைகளுக்குச் செல்லுதல் இயற்கையாய் நிகழ்வது. அவை அவ்வாறு செல்வதனை வீழ்பதிப் படர்ந்தன எனக் குறிப்பிட்டதனால், தாம் விரும்பி அருவியாடச் சென்றது அமைவுடையதே எனக் குறிப்பித்தாள். இவ்வாறு கொள்ளாமல், அவை விரும்பிய சேக்கைக்குச் சென்றதனைப் போல, நாங்கள் விரும்பும் இல்லங்களுக்குச் வருவதற்கில்லாமல் நீ 'எல்பட வருதியர்' எனப் பணித்தாய் என்றாள் என்பதும், ஆம். பறவைகளுக்கு உள்ள உரிமையைக் கூட அளிக்காதவரை, நீ அவர்களுடைய செயல்களுக்குப் பொறுப்பாளிகளாகக்

கருதுவது முறையாகாது எனக் குறிப்பித்தாள் என்று கோடலுமாம்.

நிறைஇரும் பெளவம் குறைபட முகந்துகொண்டு
அகல்இரு வானத்து வீசுவளி கலாவலின்
முர(சு) அதிர்ந்(து) அன்ன இன்குரல் ஏற்றொடு
நிரைசெலல் நிவப்பின் கொண்மூ மயங்கி
இன்இசை முரசின் சுடர்ப்பூண் சேஎய்
ஒன்னார்க்கு ஏந்திய இலங்கு இலை எஃகின்
மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்த; என, (47 – 53)

நீர் நிறைந்து காணப்படுகின்ற கரிய கடலுக்குச் சிறுமை உண்டாகும்படி மொண்டுகொண்டு, அகன்ற பெரிய வானத்திடத்தே, மிக்க உயரத்திலே, வரிசை வரிசையாகச் செல்லுதலையுடைய மேகம், வேகமாக வீசும் காற்று கலக்கம் எய்துவிக்கவும் (அதனால் தாக்கப்பெற்று அடித்துச் செல்லப்படவும்) போர்முரசு முழங்குதலை ஒத்த இனிய முழக்கத்தையுடைய இடியேற்றினை நெருங்கி, மணமுரசின் ஒலியை ஒத்து விளக்கமுடைய வீரக்கழல்களை அணிந்த முருகன், பகைவர்க்கு (அழிவு ஏற்படும்படி) எடுத்த விளக்கத்தைத் தரும் இலைத்தொழிலையுடைய (வேல் போன்று) மின்னலால் தாக்குண்ட தொகுதிகள், மலையின் மீது மழையைப் பொழிந்தன; (அவை அவ்வாறு) பொழிந்தமையால்,

**கலாவல்:**

கலங்கச் செய்தல், 'கோடல் நீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ' (நெடுநல்: 6) நீரை முகந்து கொண்டு, அகல்இரு வானத்து நிவப்பின் நிரைசெலல் கொண்மூ, வீசுவளி கலாவலின், முரசு அதிர்ந்தன்ன இன்குரல் ஏற்றோடு மயங்கிப் பொழிந்த என மாற்றிக் கூட்டிப் பொருள் கொள்க. இதனால் மலையின்மீது மழை பெய்தமைக்குக்

காரணம் கூறினாள்; உடன் அவர்கள் அருவியாட நேர்ந்தமையையும் உணர்த்திவிட்டாள்.

**நிரை:**

வரிசை, கூட்டம், தொகுதி. நிவப்பு: உயரம். மயங்குதல்: நெருங்குதல். 'முகிழ் மயங்கு முல்லை' *(பரி: 15)* என்பதன் உரையைக் காண்க. தூக்கப்படுதலுமாம்: 'காலொடு மயங்கிய கலிழ்கடல்' *(பரி: 8: 31)* என்ற பகுதிக்குப் பரிமேலழகர் 'காற்றால் ஏறுண்ட-இடியுண்ட (அ) மோதுண்ட-புடைபெயர் கடல்' எனப் பொருள் விரித்திருக்கின்றார்.

கொண்மூ: மேகம் கருவி: தொகுதி. மின்னலால் தாக்குண்ட மேகக்கூட்டம் மழையைப் பொழிந்தது என்க. 'மின்னுச் செய் கருவிய பெயல் மழை தூங்க' *(குறு: 205)* எப்பொழுதும் நீர் நிறைந்தே காணப்படும் இயல்பு கருதி நிறையிரும் பௌவம் எனப்பட்டது. பௌவம் –கடல்: 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்'' *(சிலம்பு:8)* அளக்கலாகா அகல நீள உயரங்களை உடைமையின் அகல் இரு வானம் என அடைகள் அடுக்கி வந்தன.

இடியோசையை இன்குரல் என்றது நன்மையைப் பயக்கும் பெயலுக்கு அது அறிவிப்பாயும், காரணமாயும் அமைதலின் என்க. போர் முரசு அதிர்தல் இடியின் முழக்கத்துக்கும். மணமுரசின் ஒலி முருகனுடைய கழலோசைக்கும் உவமைகள். மிக இடித்து அச்சத்தையும் உண்டாக்கி, மிகப்பெய்வித்து அழிவையும் தந்துவிடும் தன்மையைக் கருதி இன்குரல் என்றாள். அவ்வாறன்றி எப்பொழுதும் நன்மையையே செய்யும் செய்யவன் ஆகையால், முருகன் கழலோசையை இன்இசை என்றாள்.

பொழிந்த என என்பவை 'பொழிந்தென' என வந்தன. 'உண்ணுநீர் ஊட்டி வா என்றாள்; என' (கலி: 51) என்ற பகுதிக்கு. 'உண்ணுநீரை உண்ணப் பண்ணுவித்து வா என்று சொன்னாள்; என்று சொல்லுகையினாலே' என நச்சினார்க்கினியர் உரை கூறியிருத்தலைப் போலவே, இங்கும், 'மின் மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்த; பொழிந்தமையால் தெள்நீர் அருவி இழிந்தது' என மேல் வருவனவற்றோடு காரணகாரியத் தொடர்பு அறாமல் இணைத்துப் பொருள் கொள்க.

அண்ணல் நெடுங்கோட்டு இழிதரு தெள்நீர்
அவிர்துகில் புரையும் அவ்வெள் அருவி
தவிர்வு இல் வேட்கையேம் தண்டாது ஆடி,
பளிங்குசொரி(வு) அன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பின் பாயம் பாடி, (54 – 58)

தலைமையினை உடைய உயர்ந்த குன்றினின்றும் ஒழுகிவரும் தெளிந்த நீராலாகிய, ஒளிவீசுகின்ற வெண்மையான துணியைப் பரப்பியதனைப் போல் தோன்றுகின்ற அருவியில், நீங்க முடியாத விருப்பத்தை யுடையவராய் விளையாடி, (பின்னர்) பளிங்கைச் சொரிந்து வைத்திருப்பதனைப் போன்ற (வெண்மையான நீரையுடைய) பரந்த சுனையின் கண்ணே மூழ்கி மகிழும் காலத்தில், செறிதலைப் பண்பாக உடைய மலையின் புணர்ச்சி விருப்பத்தைத் தோற்றுவித்தும் ஊட்டியும் மகிழ்விக்கும் தகுதியை வியந்து பாடி.

**அண்ணல்:**

தலைமை; இங்கு பிற குன்றுகளினும் உயர்ந்து விளங்கும் ஒரு குன்றினைக் குறிப்பிடுகின்றது. அதனை முருகன் விரும்பி உறையும் குன்று, அல்லது முருகன் உருவம் எனக் கொள்ளுவதும் ஏற்கும். ஏனெனில் பின்னர் 'பிறங்குமலை

மீமிசைக் கடவுள்' (208) என இவளே கூறுகின்றாள். நச்சினார்க்கினியர் இச்சொல்லை இங்குத் தலைவனைக் குறிப்பிடுவதாகக் கொண்டது இருவரும் ஒரு மலையில் வாழ்பவரே எனக் காட்டவே ஆம்.

### இழிதருதல்:

இனிய ஓசையுடன் மெல்ல இறங்கி வருதல். நீர் வீழ்ச்சியாக இல்லாமலும், வேகம் உடையதாய் இல்லாமலும், சலசலத்து ஓடும் அருவியைக் குறிப்பிட்டாள். அவர்களை ஆடத்தூண்டி மகிழ்வித்தது அதன் இயல்பே ஆம்.

### தவிர்தல்:

ஒழிதல்; நீங்குதல். விளையாடுதலை விட்டு நீங்கிச் செல்ல மாட்டாத விருப்பத்தை அவர்களுக்கு அவ்வருவி ஊட்டிற்று. செவிலியின் பணியை எண்ணியவராய், அருவியால் மயங்கப் பெறுதல் அப்பணியைப் புறக்கணிப்பதாகும் எனக்கருதி, அதனைத் தவிர்ந்து, நிறைவு பெறாத தம் வேட்கையைத் தணிப்பித்துக் கொள்ளும் பொருட்டுச் சுனையில் சென்று மூழ்கினர். தண்டாது: நிறைவினைப் பெறாது. "பிரிவரிதாகிய தண்டாக்காமம்" (குறு: 57) என்பதனைக் காண்க. தண்டுதல்—அலைத்துப் பெறுதல். தண்டாமை என்பது அதன் எதிர்மறை. எனவே இருபாலார்க்கும் (இங்கு அருவிக்கும், அவர்களுக்கும்) நிறைவு தோன்றாத்தன்மை.

### பாய்:

பரந்த, அகன்ற. ஆழத்தோடு சுனை அகன்றதாயும் இருந்ததனைத் தோழி குறிப்பிட்டது, செவிலி கடிந்து கொள்ளாமல் இருக்கவே யாம். இச் சுனையில் மூழ்குவதால் அபாயம் நேராது என்பதாம்.

'அருவியாடியும் சுனை குடைந்தும் அலவுற்று வருவேம்' *(சிலப்:24)* என்ற பகுதியால் சுனையிற் குடைதல் தவிர்வில் வேட்கையைத் தணிப்பிக்க உதவும் என்று விளங்குகின்றது. குடைதல்: மூழ்குதல்.

நளிபடு சிலம்பு:

*செறிவு மிக்க மலை; எனவே செறிவைத் தோற்றுவிக்கும் பண்பும் கொண்ட மலை.* தன்னைப் போல் பிறரையும் இருக்கச் செய்ய விரும்புவது மக்களின் அடிப்படைப் பண்புகளுள் ஒன்று; அதுவே அவர்களை வாழவைப்பது, நளி என்பது குளிர்ச்சி, செறிவு என்ற இருபொருள்களைத் தரும். 'நளிபுனல்வையை' *(பரி:89)* என்ற பகுதியில் குளிர்ச்சியையும், 'நளிமலைச் சிலம்பு' *(நெடுநல்:100 முருகா:238)* என்ற பகுதிகளில் செறிவையும் அது புலப்படுத்துகின்றது.

படுதல்:

*விளைதல், உண்டாதல்,* 'தேம்படு மலர்' *(பரிபா:17:1)* என்பதற்குப் பரிமேழகர் 'தேன் விளைந்த மலர்' எனப்பொருள் கூறியிருக்கின்றார். இதனால் தம்மைச் சேர்ந்தாரிடத்துப் புணர்ச்சி விருப்பத்தை உண்டாக்க வல்லது மலை எனக் கொண்டே, இயற்கைப் புணர்ச்சியை மலையின்கண் நிகழ்வதாகக் கூறும் மரபு தோன்றிற்று.

பாயம்:

*புணர்ச்சி விருப்பம்.* 'பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது' *(பெரும்பாண்:342)* என்ற இடத்தில் பாயம் இப்பொருள் பயப்பதனை நச்சினார்க்கினியரே குறிப்பிட்டிருக்கின்றார். இதனால் அவர்கள் மலையின் பண்பைப் பாராட்டிப் பாடினார் என்று விளங்குகின்றது.

பொன்எறி மணியின் சிறுபுறம் தாழ்ந்தஎம்
பின்இரும் கூந்தல் பிழிவனம் துவரி,
உள்அகம் சிவந்த கண்ணேம், வள்இதழ்
ஒள்செம் காந்தள், ஆம்பல், அனிச்சம்
தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி
செங்கொடு வேரி, தேமா, மணிச்சிகை, (59 – 64)

அழகைப் பொழியும் நீலமணியினைப் போல், எம் கழுத்தின் புறத்தே தொங்கிய பின்னலை யுடைய கரிய கூந்தலைப் பிழிந்து உலர்த்தி உள்ளிடம் சிவந்த கண்களையுடையவர்களாய்ப் பெரிய இதழ்களையுடைய செங்காந்தள், ஆம்பல், அனிச்சம், குளிர்ந்த நீர்நிறைந்த குளங்களில் பூக்கும் குவளை, குறிஞ்சி, வெட்சி, செங்கொடுவேரி, இனிய கனிகளைப் பயக்கும் தேமாம்பூ, செம்மணிப்பூ.

பொன்:

அழகு. 'பொன்புனைந்த கழலடியோன்' *(புற.வெ. மாலை:7)* எறிதல்: பொழிதல். 'கல்குறைபட எறிந்து' *(பரிபா:20)* முன்னர் ஒலிமெல் கூந்தல் என்று கூறியதற்கொப்ப, இங்குப் 'பொன் எறிமணியின் கூந்தல்' என்றாள்.

சுனையிற் குடைந்தாடவே கண்கள் சிவப்பேறின. செங்காந்தள் ஒளிமிக்கது; முருகனுக்குரியது. மேல் அம்மலைச் சாரல்களை அழகுறுத்தியவை அவையே எனக்குறிப்பிடுவதனால், மிகுதியாக இருந்த அவற்றை அவர்கள் முதன் முதலில் பறித்ததாகக் குறிப்பிட்டார்.

உரிதுநாறு அவிழ்தொத்து உந்தூழ், கூவிளம்,
எரிபுரை எறுழம், சுள்ளி, கூவிரம்,
வடவனம், வாகை, வல்பூங் குடசம்,

எருவை, செருவிளை, மணிப்பூங் கருவிளை,
பயினி, வானி, பல்இணர்க் குரவம் (65 – 69)

தனக்கே உரித்தான மணத்தை யுடையதும், விரிந்த கொத்துகளை யுடையதுமான பெருமூங்கிற்பூ, வில்வம். நெருப்பின் நிறத்தை ஒத்த எறுழம், மராமரப்பூ, கூவிரம், வடவனம், வாகை, வெண்மையான பூக்களாகிய வெப்பாலை, பஞ்சாயக்கோரை, வெண்காக்கணம், நீலமணி போலப் பூக்கும் கருவிளம், பயினி, வானி, பல கொத்துகளையுடைய குரவம்.

பசும்பிடி, வகுளம், பல்இணர்க் காயா,
விரிமலர் ஆவிரை, வேரல், சூரல்,
குரீஇப்பூளை, குறுநறுங் கண்ணி,
குருகிலை மருதம், விரிபூங் கோங்கம். (70 – 73)

பச்சிலை, மகிழம்பூ, பல கொத்துகளையுடைய காயாம்பூ, விரிந்த பூக்களையுடைய ஆவிரம், சிறுமூங்கிற்பூ, சூரற்பூ, சிறுபூளை, குன்றி, முருக்கிலை, மருதம், விரிந்த பூக்களையுடைய கோங்கு.

போங்கம், திலகம், தேம்கமழ் பாதிரி,
செருந்தி, அதிரல், பெருந்தண் சண்பகம்,
கரந்தை, குளவி, கடிகமழ் கலிமா,
தில்லை, பாலை, கல்இவர் முல்லை, (74 – 78)
குல்லை, பிடவம், சிறுமா ரோடம்.

மஞ்சாடி, மஞ்சாடி மரத்தின்பூ. தேன்மணக்கும் பாதிரி, செருந்தி, புனலி, பெரிதும் குளிர்ந்திருக்கும் சண்பகம், நாறு கரந்தை, காட்டுமல்லிகை, மணம் கமழ்வதும் தழைத்திருப்பதும் ஆகிய மாம்பூ, தில்லை, பாலை, கல்லிலே படரும் முல்லை, குல்லை, பிடவம், செங்கருங்காலி,

வாழை, வள்ளி, நீள்நறு நெய்தல்
தாழை, தளவம், முள்தாள் தாமரை,
ஞாழல், மௌவல், நறுந்தண் கொகுடி,
சேடல், செம்மல், சிறுசெங் குரலி,
கோடல், கைதை, கொங்குமுதிர் நறுவழை (79 – 83)

வாழை, வள்ளி, நீண்டதும் மணம் பொருந்தியதுமாகிய நெய்தல், தெங்கிற்பாளை, செம்முல்லை, முள்ளுடைய தண்டினைக் கொண்ட தாமரை, புலிநகக்கொன்றை, மௌவல், மணமும் குளிர்ச்சியும் உடைய கொகுடி, பவழக்கால் மல்லிகை, சாதி, கருந்தாமக் கொடிப்பூ, வெண்கோடல், தாழம்பூ, தாது முதிர்ந்த நறிய சுரபுன்னை,

காஞ்சி, மணிக்குலை, கள்கமழ் நெய்தல்
பாங்கர் மராஅம், பல்பூந் தணக்கம்,
ஈங்கை, இலவம், தூங்கிணர்க் கொன்றை,
அடும்பமர் ஆத்தி, நெடுங்கொடி அவரை,
பகன்றை, பலாசம், பல்பூம் பிண்டி, (84 – 88)

காஞ்சிப்பூ, நீலமணிபோலும் கொத்துக்களையுடைய தேன் நாறுங் கருங்குவளை, ஓமை, மரவம், பலபூக்கள் நெருங்கியிருக்கும் தணக்கம், இண்டம், இலவம், அசையும் நீண்ட கொடியில் உள்ள அவரை, பகன்றை, பலாசம், பல பூக்களையுடைய அசோகம்,

வஞ்சி, பித்திகம், சிந்து வாரம்
தும்பை, துழாஅய், சுடர்ப்பூந் தோன்றி,
நந்தி நறவம் நறுப்புன் னாகம்
பாரம், பீரம், பைங்குருக் கத்தி,
ஆரம், காழ்வை, கடியிரும் புன்னை, (89 – 93)

வஞ்சி, பிச்சி, கருநொச்சி, தும்பை, துளசி, விளக்கு போலும் பூவினையுடைய தோன்றி, நந்தியாவட்டை,

நறைக்கொடி, புன்னை, பருத்தி, பீர்க்கு, பசிய குருக்கத்தி, சந்தப்பூ, அகிற்பூ, மணத்தையுடைய பெரிய புன்னைப்பூ,

> நரந்தம், நாகம், நள் இருள்நாறி
> மாயிரும் குருந்தும், வேங்கையும் பிறவும்
> அரக்கு விரித்தன்ன பரேரம் புழகுடன்
> மால்அங்(கு) உடைய மலிவனம் மறுகி,
> வான் கண் கழீஇய அகல்அறை குவைஇ. (94 – 98)

நாரத்தம், நாகம் இருவாட்சி, கரியதும், பெரியதும் ஆகிய குருந்தம், வேங்கை முதலிய பூக்களையும் பிற பூக்களையும், சிவப்பைப் பரப்பினாற் போன்றிருக்கும் பருத்த அழகிய செம்பூவுடன் (மணம், குணம், நிற இவற்றின் வேறுபாடு காரணமாக மயங்கப் பெற்றவையாய் அங்கிருந்த மலர்களை விரும்பியவராய்க் கொண்டு வந்து, மழை தன்னிடத்தைக் கழுவி மாசு நீக்கிய அகன்ற பாறையின் மீது குவித்து,

**மால்:**

மயக்கம். நிறத்தாலும், குணத்தாலும் தம்முள் வேறுபட்ட பூக்கள் பலவும் விரவிக்கிடத்தலை உணர்த்திற்று. இவை மயங்கிக் கிடந்த நிலை, இவற்றைக் காண்பவருக்கு மயக்கத்தை ஊட்டும் பண்புடையதாகவும் இருந்தது என்பதாம்.

**மலிவணம்:**

மகிழ்ச்சியுடையேமாம், மலிவு: மன மகிழ்ச்சி, 'மலிவுடை உள்ளத்தான்' (பரி:19;88) மறுகுதல். எடுத்துச் செல்லல், கொண்டு பேர்தல். 'மான் குறையொடு மது மறுகவும்' (பொருந;217) 'நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகவும்' (மதுரை:539) என்ற இடங்களில் நச்சினார்க்கினியர் இப்பொருளைக் கூறியிருக்கின்றார்.

**அரக்கு:**

சிவப்பு. அறை - பிளந்த பாறை. வான் ஆகுபெயராய் மழையை யுணர்த்திற்று.

பரேரம் புழகு என இறப்பச் சிறப்பித்திருப்பது. அரக்கு விரித்தன்ன அதனுடைய செம்மை நிறத்தை நாம் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும் என்றே யாம். அவர்கள் பறித்த மலர்களுள் முதன் முதலாகப் பறித்தது ஒண் செங் காந்தள்; இறுதியாகப் பறித்தது செம்பூ, இதனை நினைவிற் கொள்ள வைக்க வேண்டும் என்றே, பிறவும் என முடித்துவிட்ட பின்னர்ப் புழகைத் தனித்து வாங்கிக் கூறியிருக்கின்றார்.

புள் ஆர் இயத்த இலங்குமலைச் சிலம்பின்
வள் உயிர்த் தெள்விளி இடையிடை பயிற்றி
கிள்ளை ஒப்பியும், கிளை இதழ் பரியா
பைவிரி அல்குல் கொய்தழை தைஇ, (99 – 102)

பறவைகளாலாகிய நிறைந்த இசைக் கருவிகளைப் பெற்று விளங்கும் மலைப்பக்கத்தில் கூர்மையான ஒலிகளைக் கொண்ட தெளிந்த கூப்பாடுகளை நடுநடுவே எழுப்பிக் கிளிகளை ஓட்டியும், புற இதழ்களை ஒடித்து, பாம்பின் படம்போலப் பரந்திருக்கின்ற அடி வயிற்றினிடத்தே, கத்திரிகையால் மட்டஞ் செய்யப் பெற்ற தழையுடையை உடுத்தியும்,

**இயம்:**

இசைக்கருவி. 'விலங்குமலை' எனப்பாடம் கொள்ளின் குறுக்கே அகன்ற மலை எனப்பொருள் கூறிக்கொள்க. வள் உயிர்: கூர்மையான ஒலி. பெண்குரல் மெல்லியதே எனினும், தொலை தூரம் கேட்கக் கூடியதே என்பதனை இதனால் குறிப்பிட்டார்.

பை: பாம்பின் படம். கொய்தழை என்பது கத்திரிகையாலே மட்டஞ் செய்யப் பெற்ற தழையுடை யாம் என்பது புறப்பொருள் வெண்பாமாலை தெரியப்படுத்தும் பொருள். தைஇ: உடுத்தி. 'அந்துகில் போர்வை அணிபெறத்தைஇ' (கலி65) என வந்திருத்தலைக் காண்க.

கிளைஇதழ்: புறவிதழ். புறவிதழ்களை நீக்கி விட்டு அக விதழ்களால் ஆகிய ஆடை என்றது நுசுப்பினைக் காத்தற் பொருட்டு.

'அனிச்சப்பூ கால்களையாள் பெய்தாள்
நுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை' (திரு. 1115)

முன்னர்ப் புனத்தின் கண்ணே இருக்கையில் கிளிகளை ஓட்டியதனை மட்டுமே கூறியவள், இங்கும் அக்கிளியோட்டியதனையே குறிப்பிடுகின்றாள். இவர்கள் புனத்துக்கு வெளியே பூப்பறித்துக் கொண்டு தழையுடையைச் செய்து கொண்டிருந்தமையால் வாயால் தெழித்துக் கிளிகளை ஓட்டினர். இவர்கள் குரலைக் கேட்டுக் கிளிகள் புனத்தை விட்டு நீங்கி வந்து விடும் என்பது குறிப்பு.

மறுகி, குவைஇ, பறியா, தைஇ, கட்டி என்றவை போலல்லாமல், ஒப்பியும் என உம்மை கொடுத்துக் கூறியது எமக்கு விருப்பமான தொழில்களைச் செய்து கொண்டிருந்தேமாயினும், பணிக்கப் பெற்ற தொழிலைப் புறக்கணிக்கவில்லை எனச் செவிலிக்குப் புலப்படுத்து வதற்கேயாம். செவிலி மடக்கிக் கேட்க முடியாதபடி தோழி விழிப்புடன் கதை கூறி வருவது வியந்து பாராட்டத் தக்கது.

பல்வேறு உருவின் வனப்பமை கோதைஎம்
மெல் இரும் உச்சிக் கவின் பெறக் கட்டி,

எரி அவிர் உருவின் அம் குழைச் செயலை
தாதுபடு தண்நிழல் இருந்தனம் ஆக, (103 – 106)

பல்வேறு உருவங்களையுடையன போல் (தொடுக்கப்பட்ட) அழகு பொருந்திய மாலைகளை எங்களுடைய மென்மையும், கருமையும் உடைய கூந்தல் எழில் பெறும்படிச் சூடி, நெருப்பை ஒத்திருக்கின்ற நிறத்தினைப் பெற்ற அழகிய தளிர்கள் நிறைந்த அசோக மரத்தின் தாதுகள் விழுகின்ற குளிர்ந்த நிழலிலே தங்கியிருந்தோமாக.

இச்சிலம்பு தோற்றுவிக்கும் புணர்ச்சி விருப்பத்தை வியந்து பாராட்டுபவராய்ப் பாடி, உள்ளகஞ்சிவந்த கண்களையுடையவராய்ச் செங்காந்தள் தொடங்கிச் செம்பூ இறுதியாகக் கூறப்பெற்ற பூக்களைப் பறித்து, செந்நிறமுடைய தளிர்களைக் கொண்ட அசோக மரத்தின் நிழலில் சென்று நின்றது, மேல்வரப் போகும் தலைவனை எதிர்நோக்கிச் செவ்வணி யணிந்து நின்றதே யல்லாமல் வேறென்ன? எனவே, இனித்தலைவன் வருகையையும், நாய்கள் சூழ்ந்து கொண்டமையையும், களிறு அச்சுறுத்தியதனையும் கூறும். தோழி அவற்றைப் படைத்துக் கூறியிருக்கின்றாள், என்பது புலப்படும். நச்சினார்க்கினியர் மரபு வழாமல் வந்த பாடல் இது எனக்காட்ட, முன்னர் 'இருவேம் ஆய்ந்த' என்பதனைத் தலைவனை உளப்படுத்திக் கூறியதாகக் காட்டிபெற்ற பயனை, இப்பகுதி தன் இயல்பில் அளிக்கின்றது. என இப்பயனைக் குறிப்பிட்டிருக்கின்றார்கள் என்க.

ஒப்பி வருதியர் என நீ விடுத்தலின், இதணம் எறி, ஊழ் ஊழ் வாங்கி, பறவை பதிப்படர, கொண்மூ பொழிந்தென, அருவி ஆடி, சுனை குடைவுழி பாயம் பாடி, பிழிவனம் துவரி, பரேரம் புழகுடன் காந்தளும்

பிறவும் மலிவனம் மறுகி, குவைஇ, தெள்விளி பயிற்றி ஒப்பியும், தைஇ; கட்டி, இருந்தனம் ஆக;

எண்ணெய் நீவிய சுரிவளர் நறும்காழ்
தண்நறும் தகரம் கமழ மண்ணி,
ஈரம் புலர விரல்உளர்ப்பு அவிழா
காழ்அகில் அம்புகை கொளீஇ, யாழ்இசை
அணிமிகு வரிமிஞிறு ஆர்ப்ப தேம்கலந்து
மணிநிறம் கொண்ட மாஇரும் குஞ்சியின், (107 – 112)

எண்ணெய் தடவப்பெற்றதும் கடை குழன்று வளர்ந்ததும் ஆகிய மணமுள்ள கரிய மயிரிலே குளிர்ச்சியும் மணமும் கொண்ட மயிர்ச் சாந்தினைப் பூசி, ஈரம் புலரும்படி விரலால் உலர்த்துவதற்கு அவிழ்த்து, வயிரம் பொருந்திய அகிற் கட்டையின் புகையையூட்டி, யாழ் ஓசையை ஒத்து ஒலிக்கும் அழகிய கீற்றுகளையுடைய வண்டுகள் ஒலிக்கும்படி, மணமுள்ள எண்ணெயைச் சேர்ந்து நீலமணியின் நிறத்தினைக் கொண்ட மாட்சிமையுடைய கரிய தலை மயிரினிடத்தே.

நீவுதல்:

தடவுதல். சுரிதல்: கடை குழன்று இருத்தல். ஆவது மயிர்க்கட்டையின் நுனி மெல்லியதாய் இருத்தல். தகரம்: சந்தனத்தைப் போல் மணம் பொருந்திய மரம். மண்ணுதல்: பூசுதல். காழ்: வயிரம், கருமை. வயிரம் உற்ற பின்னரே அகில் மணம் பெற்றதாய் விளங்கும். அதனுடைய புகை விரும்பத் தக்கது என்பதனைக் குறிக்க அம்புகை என்றாள். மிஞிறு, ஞிமிறு என்பன வண்டின் பெயர்; வகையுமாம்.

கொளீஇ:

கொள்ள வைத்து. எண்ணெய் தடவப்பெற்ற பின்னரே மணி நிறம் கொண்டதாக ஒளிபெறும் என்பதனை உயர்த்த

'தேம்கலந்து மணிநிறம் கொண்ட' என்றாள். குஞ்சி: ஆண்களின் தலைமயிர்.

ஒப்பனை குலைந்து, ஒளி மங்கிய நிலையில் பிறர் காணப் பெண்கள் வெளிவாரார் ஆகையால், கூந்தல் எப்பொழுதும் ஒளியுடையதாகவே கூறப்படுகின்றது. இப்பெண்கள் இருவரும் அருவியாடிச் சுனை குடைந்த பின்னர், பறவைகளைக் கடியச் செல்லாமல், பூப்பறிக்கத் தொடங்கியது அமைதியுடையதே என விளங்குகின்றது. தம் தலை ஒப்பனைகள் கலைந்து விட்டவற்றைப் பூக்களைச் சூடிமறைக்கவே இவர்கள் இத்தொழிலில் ஈடுபட்டனர்.

மலையவும், நிலத்தவும், சினையவும், சுனையவும்,
வண்ண வண்ணத்த மலர்ஆய்பு விரைஇய
தண்நறும் தொடையல் வெள்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாம்உற மிலைச்சி, (113 – 116)

மலைகளின் மீதும், (தாழ்ந்த) நிலத்தினும், (மரங்களின்) கொம்புகளினும், நீர் நிலைகளினும் பூப்பனவாகிய வெவ்வேறு நிறமும், குணமும் கொண்ட மலர்களை ஆராய்ந்து கலந்து (தொடுக்கப் பெற்ற) குளிர்ச்சியையும் மணத்தையும் தரவல்லதும், வரிசையாகக் கோக்கப் பெற்றதனால் நூல் ஊடுருவிச் செல்லப் பெற்றதும் ஆகிய கண்ணியை நன்மையைப் பெறுகின்ற தலை நிறைவினை அடையும்படி அணிந்து.

**வண்ணம்:**

நிறம். குணம். தொடையல்: வரிசை தொடுக்கப் பெறுதலின் அப்பெயர் பெற்றது. வெள்: கூர்மை. போழ்தல்: பிளத்தல். இங்கு ஊடுருவிச் செல்லுதலைக் குறிப்பிடுகின்றது. கண்ணி: நெற்றியின் மீது

பொருந்தியிருக்கும்படி தலையைச் சுற்றிஅணியப்படும் மாலை.

முன்னர், இப்பெண்கள் இருவரும் நால்வகை நிலத்திலும் காணப்படுவனவாகிய மலர்களைப் பறித்தனர் எனக் கூறியதற்கு ஏற்ப, இத்தலைவனும் நானிலப் பூக்களும் விரவித் தொடுக்கப் பெற்ற கண்ணியைச் சூடி வந்ததாகக் கூறப்பட்டது. தலைவனுடைய தோற்றத்தின் வருணனை தோழியின் சொற்களில் அமைந்திருப்பது. இதனால் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றும் முறையில் அவனுடைய தலைக் கோலம் இருந்தது எனத் தெரிகின்றது.

நாமம் என்பது நாம் எனக்குறைந்து நின்றது. நாமம்:நிறைவு. 'நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய' *(பரிபாடல்:3:92)* என்ற பகுதியின் பரிமேலழகர் உரையைக் காண்க. இச்சொல் அழகு, மணம். அச்சம் என்ற பொருள்களையும் பயக்கும் ஆற்றலுடையது. அழகு பயப்பதற்கு மட்டுமேயல்லாமல், நன்மையைத் தருவதற்காகவும் மலர் மாலைகள் அணியப்பெறும் என்பதனை உணர்த்த 'ஆய்பு விரைஇய தொடையல்' என்றாள். உடலுக்குத் தலையே சிறந்த உறுப்பாகையாலும், அதனைப் பெற்றதே உடல் எனக் கருதப்படுமாகையாலும், நலம் பெறு சென்னி எனப்பட்டது.

பைங்கால் பித்திகத்து ஆய்இதழ் அலரி
அம்தொடை ஒருகாழ் அளைஇ, செம்தீ
ஒள்பூம் பிண்டி ஒருகாது செரீஇ,
அம்தளிர் குவவுமொய்ம்பு அலைப்பச் சாந்து அருந்தி
மைந்துஇறை கொண்ட மலர்ந்து ஏந்து அகலத்து
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலிய. (117 – 126)

பசிய காம்புகளையுடைய பிச்சியின் ஆராய்ந்த இதழ்களோடு விரிந்த மலர்களால் அழகாகத்

தொடுக்கப்பெற்ற மாலையின் ஒரு வடத்தால் ஒரு காதினை வளைத்தும், நெருப்பினைப் போல் ஒளி விடும் மென்மையான அசோகந்தளிரை மற்றொரு காதினில் செருகியும், அழகிய தளிர்போலும் நிறத்தினையுடைய திரட்சி பெற்ற தோள்கள் வருந்தும்படிச் சந்தனத்தைக் கொண்டதும், வலிமை தங்குதலை உடையதும் ஆகிய விரிந்து நிமிர்ந்த மார்பினிடத்தே பழமையாகத் தோன்றிய மணமுள்ள மாலைகள் அணிகளுடனே விளங்க.

குவவு:

திரட்சி, 'ஓங்கு மணல் குவவுத் தாழை' *(புறம்:24)* மொய்ம்பு: தோள்; வலிமையும் ஆம். மைந்து: வலிமை, ஆற்றல், இறை; தங்குதல். அலைத்தல்: வருத்தஞ்செய்தல்.

ஒரு காதினில் அசோகந் தளிரினைச் செருகிக் கொண்டிருந்ததனைக் கூறவே, மற்றொன்றினில் பிச்சி மாலையை வளைத்துக் கட்டியிருந்தது கொள்ளப்பட்டது., சந்தனம், அணிகலன், மாலை இவையனைத்தும் மார்பினை விளக்கமடையச் செய்வன. இவற்றுள் பின்னிரண்டும் தோள்களில் புரண்டு அசைவன வாகையால், மொய்ம்பு அலைப்ப என்றாள்.

பொன்னாலாகிய அணிகலன்களைப் பெற்றவனாய் இருந்தும், மலர் மாலைகளையும் விரும்பிச் சூடியிருந்தது அவனுடைய பழமைப் பற்றினைக் குறிப்பிடுகின்றது. பொன்னணிகள் தோன்றுவதற்கு முன்னரே அணிகளாய் விளங்கி வருபவை யாகையால், மாலைகள் தொன்றுபடு நறுந்தார் என்றாள். இவற்றால் அவன் செல்வச் சிறப்பு, குணம் என்ற இரண்டனையும் ஒருசேர உணர்த்தி விட்டாள் என்க.

இங்கு விரிக்கப் பெற்ற தோற்றம் உடையவனாய் வரும் தலைவன் இவர்களைக் காணவே தன்னைக்

கோலஞ்செய்து கொண்டு வருகின்றான் என்பது எளிதில் விளங்குகின்றது. அப்பெண்கள் செவ்வணி காட்டியதனால் குறிப்பிடப் பெற்றதனை இப்பகுதி வற்புறுத்துகின்றது. இதனால் இத்தலைவனைத் தலைவி ஏற்கெனவே நன்கறிவாள் எனத் தெளியலாம். தோழி தான் படைத்துக் கூறும் நிகழ்ச்சிகளைப் பொருந்தித் தோன்றும் முறையில் கூறுவது செவிலியின் சினத்தைத் தனிப்பிக்கவே யாம்.

பெண்கள் பெரிதும் விரும்புவது தம் காதலரின் அழகு மாட்சியையேயாம். எனவே தலைவனுடைய தோற்றம் அழகுடையதாகத் தோழியால் விவரிக்கப் பெற்றது. கேட்டவள் தாய் ஆகையாலும், அவள் பெரிதும் விரும்புவது செல்வமே ஆகையாலும், அவன் பொன்னணிகளைப் பூண்டிருப்பவன் என்ற குறிப்பினால் அவன் செல்வச் சிறப்பினையும் உணர்த்தினாள். செவிலி வாயிலாய்த் தாயும், தந்தை, தன்னையரும் உண்மையை உணர்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டும். இவர்களுள் தந்தை, விரும்புவது கல்வியாகையால், அதன் பயனாக விளங்கும் பண்புடைமையை அவன் பெற்றிருந்ததாகக் குறிப்பாய்ப் புலப்படுத்தினாள். இனி அவன் ஆண்மை, ஆற்றல் இவற்றைக் குறிப்பிட்டுத் தந்தை, தன்னையர் விரும்பும் தகுதியும், குலத்திற் குன்றாக் குணனும் உடையவன் எனக்காட்டுவாள்.

செம்பொறிக்கு ஏற்ற வீங்குஇறைத் தடக்கையின்
வண்ண வரிவில் ஏந்தி, அம்புதெரிந்து,
நுண்வினைக் கச்சைத் துயக்கறக் கட்டி,
இயல்அணிப் பொலிந்தஈகை வான்கழல்
துயல்வருந் தோறும் திருந்துஅடிக் கலாவ. (123 – 127)

பெருமையைப் பயக்கும் சிறந்த அங்க இலக்கணங் களுக்குப் பொருந்தப் பூண் இறுகி இருக்கும் மணிக்கட்டினையுடைய நீண்ட கைகளிலே அழகிய

கோடுகள் இழைத்தவில்லை எடுத்தும், அம்புகளை ஆராய்ந்து எடுத்துக் கொண்டும், நுட்பமான வேலைப்பாட்டினைப் பெற்ற கச்சையை ஆடை நெகிழ்ந்து விழாதபடிக் கட்டிக் கொண்டும். செய்யும் அணிகலன் களுள் சிறந்து விளங்குவதான பொன்னால் ஆகிய வீரக் கழல் நடக்குந் தோறும் திருந்திய அடியினிலே ஏறி இறங்கா நிற்க.

**செம்மை:**

பெருமை. 'செம்மை சான்ற காவிதி மக்கள்' (மதுரைக் காஞ்சி: *499*) என வந்திருத்தல் காண்க.

**பொறி:**

உத்தம இலக்கணம். 'பூமியை ஆளற்குரிய பொறியினன்' (*சிந்தா:1339*) கை நீண்டிருத்தல் உத்தம இலக்கணம் எனக் கருதப் பெறுகின்றது. ஆகவே செம்பொறி தடக்கைக்கு அடையாக வந்ததாகக் கருதிக் கொள்ளப்பட்டது.

இறை: முன்கை. கச்சை: ஆடை நெகிழாமல் இருக்கக் கட்டிக்கொள்ளும் சுற்றுப்பட்டை. ஈகை: பொன், பொன்வகை. துயல்வரல்: அசைதல், கலாவல்: கலக்கமடைதல்.

கழல் தன்னை அணிந்தவருடைய வீரத்தை வெளிக்காட்டும். எனவே வான்கழல் எனப்பட்டது. பிற அணிகள் அணிந்தார் குறைகளை மறைக்க, இது அவர் நிறைவை வெளிப்படுத்துவதனை உன்னுக.

முனைபாழ் படுக்கும் துன்அரும் துப்பின்
பகைபுறம் கண்ட பல்வேல் இளைஞரின்
உரவுச்சினம் செருக்கித் துன்னுதொறும் வெகுளும்

முளைவாள் எயிற்ற வள்உகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர (128 – 132)

பகைவர் இடங்களைப் பாழ்படுத்தும் (தன்மையுடைய) நெருங்கற்கரிய வலிமையினால் மாற்றாரை முதுகு காட்டி ஓடும்படி செய்யும் பலவான வேல்களை ஏந்தும் வீரர்களைப் போல், மிகுதியான சினத்தினால் மனஞ்செருக்கி நெருங்குந் தோறும்சீறி அச்சுறுத்தும் மூங்கில் முளைகளைப் போன்ற கூர்மையான பற்களையும், கூர்மையான நகங்களையும் உடைய வேட்டை நாய்கள், இமைக்காமல் நிலைபெற்ற கண்களை உடையனவாய் எங்களை சூழ்ந்துகொண்டு (வட்டமிட்ட படி) நெருங்கி வருகையினாலே,

முனை:

பகைவர் இடம். போர் முனையுமாம். துன்னுதல்: நெருங்குதல். துப்பு: வலிமை. இளைஞர். ஈட்டி, குந்தம், வேல் போன்ற படைக் கலங்களைப் பயன்படுத்துவது போல், நாய்கள் தம் பற்களையும் நகங்களையும் பயன்படுத்தும்.

வள், வாள்: கூர்மை. மாக்களாகையால் ஒரே பொருளைப் பலமுறை சினக்கும் என்பது தோன்றத் 'துன்னுதொறும் வெகுளும்' என்றாள். ஏவியவற்றின் மீது சென்று அவற்றைத் தப்பவொட்டாமல் அகப்படுத்திக் கொள்ளும் வல்லமை மிக்கன என்பாள் திளையாக் கண்ண என்றாள்.

நடுங்குவனம் எழுந்து நல்லடி தளர்ந்துயாம்
இடும்பைகூர் மனத்தேம் மருண்டு புலம்படர,
மாறுபொருது ஓட்டிய புகல்வின் வேறுபுலத்து
ஆகாண் விடையின் அணிபெற வந்து, எம்
அலமரல் ஆயிடை வெரூஉதல் அஞ்சி (133 – 137)

நடுக்கத்தை உடையவர்களாய் (தப்பிச் செல்லத் தொடங்கி) எழுந்து, கால்கள் அச்சத்தால் தளர்ந்து விட்டமையால், நாங்கள் துன்பம் நிறைந்த மனத்தை யுடையவர்களாய் (நாய்கள் நாற்புறத்தும் சூழ்ந்து கொண்டு எம்மை நோக்கி நெருங்கி வந்தன ஆகையால், எப்படிச் சென்று தப்பலாம் எனத் துணியமாட்டாமல்) மருட்சியை யடைந்தவர்களாய், இருந்த இடத்திலேயே இடம் மாறிச் சுற்றி சுற்றிச் சுழன்று அலையவும், போட்டியாக வந்த எருதினைப் போரிட்டுத் துரத்திவிட்ட வெற்றிச் செருக்குடன் வேற்றிடத்துப் பசுவைக் கண்ட எருதினைப் போல (பெருமிதம் தோன்றும் பீடு நடையுடன்) அழகிதாக எம்மை வந்து (அணுகி) எம்முடைய சுழற்சிக்கும், நின்றவிடத்திலேயே இடம் பெயர்ந்து நடுங்கிக் கொண்டிருக்கும் நடுக்கத்திற்கும் வருந்தி,

இடும்பை: துன்பம். கூர்தல்: மிகுதல். பேரச்சம் காரணமாகத் தப்பி ஓடவும் கால் வராமல் நடுங்கிச் செயலற்று நிற்பதுவே மருட்சி எனப்பட்டது. புலம்: இடம். புலம்படர எனக்கூறிய அதனால், அவர்கள் பயந்து நடுங்கி இருந்த இடத்திலேயே இடம் பெயர்ந்து, பெயர்ந்து சுழன்றதனைக் குறிப்பிட்டாள்.

ஓடிச் செல்ல விரும்பிய காலத்தில், அதனைச் செய்ய முடியாமல் தளர்ந்து நடுங்கிய அடிகளை நல்அடி, என்றது, இத்தலைவனைக் காதலனாகப் பெற்ற பின்னர்க் கூறப்பட்ட கதையாதலின் என்க. அவனைக் காணப் புனத்திற்குக் கொண்டு சென்றனவும், அவனிடமிருந்து அகன்று சென்று விடாமல் தளர்ந்து நடுங்கித் தங்கப் பண்ணியவையும் அவையேயாம்.

மாறு: பகை. இங்குப் போட்டியாக வந்த எருதுகளைக் குறிக்கும். புகல்வு: வெற்றி. 'வேடிக்கை மிகுதி கூறுவதற்கு வேற்றுப்புலத்து ஆ என்றார்' என்றது நச்சினார்க்கினியர்

விளக்கம். தன்னை ஒத்த வல்லமையை உடையனவாய்ப் போட்டியாக வந்த எருதுகளை வெற்றி கொண்ட ஆற்றலுடையது எனக்காட்ட 'மா' பொருது ஒட்டிய' என்றாள். இதனால் இவன் ஆண்மையைக் குறிப்பாய்ப் புலப்படுத்தினாள்.

அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருந்த நிலையினும்கூட, அவன் தம்மை நெருங்கி வந்த அழகினை வியந்து பாராட்டும் மனத்திட்பம் அவர்களுக்கு இருந்ததுபோலும்! இதனால் அவனைக் கண்டதும் இவர்கள் தம் கருத்தழிந்தனர் என்பதனைத் தோழி புலப்படுத்திவிட்டாள். அவனும் அவ்வாறே இவர்களைக் கண்டதும் மயங்கி விட்டான். இதனை அவன் வெளிப்படையாகவே கூறியிருக்கின்றான்.

மெல்லிய இனிய மேவரக் கிளந்துஎம்
ஐம்பால் ஆய்கவின் ஏத்தி, 'ஒள்தொடி,
அசைமென் சாயல் அவ்வாங்கு உந்தி,
மடமதர் மழைக்கண் இளையீர், இறந்த
கெடுதியும் உடையேன்' என்றனன்; (138 – 142)

மெல்லிய குரலில், எங்கள் அச்சத்தை அகற்றும் தன்மை நிறைந்த சொற்கள் எங்கள் மன விருப்பத்தைத் தணிப்பிக்கும் முறையில் கூறி, எங்களுடைய கூந்தலின் நுணுகிய எழிலினைப் புகழ்ந்து பாராட்டிப் பின்னர், 'ஒளி பொருந்திய வளைகளையும், அசைகின்ற மெல்லிய சாயலையும், அழகாக வளைந்திருக்கும் கொப்பூழையும், மடப்பம் நிறைந்து, செழித்துக் குளிர்ச்சியை விளைவிப்பன வாகிய கண்களையும் உடைய இளையவர்களே! அளவுக்கடங்காத துன்பத்தை உடையவனாகி விட்டேன்' என்றான்.

பெண்கள் தனித்திருப்பதனைக் கண்டவனுக்கு வெற்றி உறுதியும் எளிதும் ஆம் என்ற எண்ணம் எழுந்தது. எனவே, அதனை அடைந்துவிட்டவனைப் போலவே, பெருமிதம் வெளிப்பட்டுத் தோன்றும்படி மெதுவாகவும், உவகை பொங்கும் முகத்துடனும் நடந்து வந்தான்.

அவர்களை நெருங்கிய பின்னரே, அவனுக்கு அவர்களுடைய நடுக்கமும், அதனை தோற்றுவித்த அவர்களுடைய மனச்சுழற்சியும் புலப்பட்டன. ஓர் ஆடவனைத் தனித்துக் காண நடுங்கும் நடுக்கம் போலும் என்று எண்ணி, அதனைப் போக்க மெல்லிய இனிய மேவரக் கிளந்தான். அன்புமிக்க தலைவி தலைவனுக்குக் கூறுஞ் சொற்கள் 'மெல்லிய இனிய மேவரு தகுந' ஆக இருக்கும் என்று *(குறு:306)* அம்மூவனார் கருதியிருப்பதனை நினைக.

**ஐம்பால்:** மகளிர் கூந்தல்; ஐந்து பகுதியாகப் பகுக்கப்பெற்றுக் கோலஞ் செய்யப்படும் என்றதனால் இப்பெயர் வந்தது.

**அசைமென் சாயல்:** அசைவினால் மென்மைத் தன்மை விளங்கும் சாயல். 'இறுமென் சாயல் நுடங்க நுடங்கி' *(சிலம்பு:17-23(1)* என்பதனைக் காண்க.

**மதர்த்தல்:** செழித்திருத்தல். மழைக்கண் என்பது குளிர்ச்சியைத் தான் பெற்றிருப்பதனோடு தன்னைக் கண்டார்க்கு அதனால் மகிழ்ச்சியை ஊட்டும் தன்மை சிறந்தது என்ற குறிப்பினையுடையது.

**கெடுதி:** துன்பம் இதனை அவன் வேட்டை மேல் துரத்தி வந்த விலங்காக நச்சினார்க்கினியர் கருதிக் கொண்டார். மதியுடம்படுத்தலில் இப்பாடல் நிகழ்ச்சிகள் தொடங்குவதால் தோழிக்கு அவ்வாறு பொருள்பட அவன் கூறினான் என்று கொள்வது இயைபுடையதே! ஆனால்,

அவன் கருதியது தன் மனநிலையையே யாம். இல்லையேல், அவன் குறிப்புணர்ந்து தொழில் புரியும் நாய்கள் இவர்களை வளைத்துக் கொண்டு நெருங்கி வரமாட்டா அன்றோ?

'இருநோக்கு இவள் உண்கண் உள்ளது ஒரு நோக்கு,
நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து' (திரு: 1091)

என்று விவரிக்கப் பெற்றவற்றுள் ஒரு நோக்கின் தாக்குதலால் துன்பமுற்றவன், இரண்டாவதனை வேண்டுகின்றான் என்க.

அதன் எதிர்,
சொல்லேம் ஆகலின் அல்லாந்து கலங்கி,
'கெடுதியும் விடீஇர் ஆயின், எம்மொடு
சொல்லலும் பழியோ மெல்இய லீர்' என, (142 – 145)

அவன் கூறியவற்றிற்கு நாங்கள் மறுமொழி கூறமுடியாதவர்களாய் இருந்தோம் ஆகையால், அவன் வருந்திக் கலக்கமுற்று, 'எனக்கு நேர்ந்த துன்பத்தைப் போக்கிவிட விருப்பம் இல்லாதவர்களே யாயின், அதனை எமக்குச் சொல்லிவிடுதலும் (சொல்லிப் போக்கி விடுதலும்), மென்மைத் தன்மை உடையவர்களே! உங்களுக்குப் பழி யாமோ?' என்று (இரக்கத்தைத் தோற்றுவிக்கும் முறையில்) கேட்டு,

இவர்கள் பெண்களாகையால் எதிர் சொல்லமாட்டாத வர்களாய் இருந்து விட்டனர் என்க. இதனை அவன் அவர்கள் ஒப்புதலாகக் கருதிக் கொண்டான். எனவே அவர்களை 'முடியாது' என்று சொல்லி என்னைப் போகவிடுவதும் உங்களால் முடியாதா என்று கேட்கின்றான்.

அல்லாந்து: வருத்தமுற்று, ஆற்றாது. 'நில்லாது நீங்கி நிலஞ்சேரா அல்லாந்து' (பரிபா: 12:71) என்ற பகுதியின் பரிமேலழகர் உரையைப் பார்க்க. இதனை அவன் அவர்கள் பார்வையைக் கொண்டு தன்மீது அவர்கள் அன்புடையவர் என்பதனை அறிந்து மகிழ்ந்த மகிழ்ச்சியாக நச்சினார்க்கினியர் கருதிக்கொண்டார். அடுத்துக் கலங்கி என வந்திருப்பதனை நோக்கி, இங்கு ஆற்றாமையே பொருளாகக் கொள்ளப்பட்டது.

அவன் அவர்கள் கண்களுக்கு அதிக அடைமொழிகள் தந்து பாராட்டியிருப்பதனைக் கொண்டு, அவற்றால் அவர்கள் தன்னிடம் அன்புடையவர் என்பதனை அறிந்து கொண்டான் என்பது புலப்படுகின்றது. தன் கருத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளவே அவன் அவர்களை வாய்திறந்து பேசுமாறு வற்புறுத்துகின்றான்.

'கெடுதி' என்பதனை அவன் கெட்டுப் போக்கிய பொருளாகவே கருத விருப்ப முடையவர், அதனை அவன் தன் நெஞ்சினைப் பறிகொடுத்து விட்டதனைக் குறிப்பிட்டதாகக் கொள்வது ஏற்கும். அவன் அவர்களைத் தன்னை இழக்க வைத்த பொருளைத் தன்னிடம் சேர்ப்பித்துத் தன்னைப் போக விடும்படிக் கேட்கின்றான் என இயைபு தோன்றப் பொருள் கொள்ளலாம்.

தன்னைக் கோலம்செய்து கொள்வதில் மிக்க கவனம் செலுத்தியவன், அவர்கள் கூந்தலை முற்படப் பாராட்டினான். ஓர் ஆடவனைத் தனியே கண்டதனால் தோன்றிய நாணம் காரணமாய், அவர்கள் தலை கவிழ்ந்தபடி இருக்கவே, அவனால் அவர்கள் முகங்களைக் காண முடியவில்லை. எனவே, அவர்களுடைய விறலிழையை அடுத்துப் பாராட்டினான். தம் அழகை வியக்கக் கேட்டவர், நாணத்தால் கோணிக் கொள்ளவும், அவ்வசைவினால் வெளிப்பட்ட அவர்கள் சாயலை

வியந்தான். இச் சாயலுக்குச் சிறப்பளிக்கும் இடையைக் காண முற்பட்டவன் கொப்பூழைக்கண்டு வியந்தான். இழையையும், கொப்பூழையும் குறிப்பிட்டுப் பாராட்டிய வனுடைய முகம் தாழ்ந்திருக்குமாகையால், துணிவுவரப் பெற்றவராய்த் தம்மைப் பாராட்டுபவனைப் பார்க்க விரும்பி, அவர்கள் தம் தலைகளைத் தூக்கினர். அப்பொழுது அவர்கள் முகங்களை நேரிட்டுக் கண்டவன், அவர்களுடைய கண்களை வியந்து பாராட்டினான்.

நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பின் இம்மென இமிரும்
மாதர் வண்டொடு சுரும்பு–நயந்து இறுத்த
தாதுஅவிழ் அலரித் தாசினை பிளந்து
தாறுஅடு களிற்றின் வீறுபெற ஓச்சிக்
கல்என் சுற்றக் கடுங்குரல் அவித்து, எம்
சொல்லற் பாணி நின்றனன் ஆக, (146 – 152)

நட்டராகம் என்ற பண்ணை வாசித்தலில் துறை போகிய பாலையாழ் வல்லவன் கைகளால் இழுத்துவிடப் பெற்ற நரம்பினைப் போல, இம் என்ற ஒலியைச் செய்யும் அழகிய வண்டுகளோடு, சுரும்புகளும் விரும்பித் தங்கியிருந்த, மகரந்தத் தூளைச் சிந்துகின்ற மொட்டவிழும் மலர்களையுடைய வலிய பூங் கொம்பு ஒன்றனை (செடியிலிருந்து) ஒடித்துக் கொண்டு, பரிக் கோலின் ஆட்சியை எதிர்க்கும் யானையின் வெற்றிக் களிப்பால் எழும் பிளிறலின் ஓசையை ஒத்திருக்கும்படி அக் கொம்பினை உயர்த்தி (சுழற்றி), கல் என்ற பேரொலியைப் பரப்பிக் கொண்டிருந்த நாய்க் கூட்டத்தின் கொடுமையான குரைத்தலைத் தொலைத்து, எங்கள் பேச்சாகிய இசையமுதைப் பருகும் ஆவலுடன் நின்றான் ஆக.

பழுநிய:

முற்றுப் பெற்ற. தா - வலி: 'ஒள்ளழல் தாவற விளங்கிய ஆய்பொன் அவிரிழை' (மதுரைக் காஞ்சி : 445) என்ற பகுதியில் இச் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் வலி என்ற பொருள் கூறியிருக்கின்றார். தாறு: தாற்றுக் கோல். அங்குசம்.

ஓச்சி: உயர்த்தி, செலுத்தி, 'கடிது ஓச்சி மெல்ல எறிக' (குறள் : 562) என்பதன் உரையைக் காண்க. பாணி: இசைப் பாடல், 'புறத்தொரு பாணியில் பூங்கொடி மயங்கி' (சிலம்பு : 6). செவ்வியும் ஆம்.

ஓச்சி என்பதனை வண்டுகளை ஓட்டியதாகக் கருதிக் கொண்டார் நச்சினார்க்கினியர். தன்மீது இருந்த வண்டுகளை ஓட்ட, வண்டுகள் நிறைந்திருந்த பூங்கொம்பை முறித்து எடுத்துக் கொள்ள வேண்டா. அன்றோ? அவன் கொம்பினை முறித்துக் கொண்டது நாய்களை அடக்கவேயாம், எனத் தெரிகிறது. மருந்தாகிய நோக்கத்தைப் பெற்ற பின்னரும், நாய்கள் தொடர்ந்து தம் தொழிலைச் செய்ய வேண்டா அல்லவா?

தாதவிழ் அலரித் தாசினையை வேட்கையைத் தணிப்பிக்கும் தன்மையும், அவனிடத்து உறுதியுடைய அன்பும் கொண்ட தலைவிக்கும், மாதர் வண்டோடு சுரும்பு நயந்து இருந்தமை, அவளிடத்து நற்றாயும் செவிலியும் பெரும் பற்றுக்கொண்டிருந்ததற்கும், அச்சினையைச் செடியினின்றும் ஒடித்து எடுத்துக் கொண்டது, அவளை அவளுடைய தந்தையின் பாது காவலினின்றும் நீக்கித் தன்வயத்தனாக்கிக் கொள்வதற்கும், அச்சினையை ஓசைபட ஓச்சியது அவன் நிலை பல்லோர் அறிய உயரும்படி, மணம் புணர்ந்து அளிப்பதற்கும், சொல்லற் பாணி நின்றது, இத்தலைவியின் நோக்க மறிந்து

இல்லறத்தை நடத்துவான் என்பதற்கும் உள்ளுறை உவமம் கொள்க.

இவ்வுள்ளுறை உவமத்துக்கு இரண்டு ஏனை உவமங்கள் சிறப்பு கொடுக்கின்றன.

நைவளம் பழுநிய பாலை வல்லோன் கைகவர் நரம்பினைப் போல் வண்டுகள் ஒலிக்கும் என்றது. தலைவியின் மாறுபாட்டினைக் கண்டு அதனைப் போக்க முற்படும் செவிலியும், நற்றாயும் கூறும் கடுஞ் சொற்களும், தங்கள் துன்பந் தாங்காது கூறப்பட்டனவாம் எனத் தலைவியால் ஏற்றுக் கொள்ளப்படும் என்பதனைக் குறிப்பிடுகின்றது. பாலைவல்லோன் சூழாது இழுத்து விட்ட ஒலியும் சுவை பயப்பதாகவே இருக்கும் என்பதனால், நற்றாயும், செவிலியும் தமக்கு இயல்பு அல்லாத கடுஞ் சொற்களைக் கூறுவது தலைவியைப் புண்படுத்தவில்லை.

தாறடு களிற்றின் வீறுபெற ஓச்சி, என்பது பரிக்கோல் எல்லையில் செல்ல விருப்பமில்லாத யானை அதனை எதிர்ப்பதனை தன் துதிக்கையை உயர்த்திச் சுழற்றுவதனால் தெரிவித்து, பாகன் தன் வழிச் செல்லவிட்ட வெற்றிக் களிப்பினைப் பிளிறலால் வெளிப்படுத்தியது. தலைவனும், கொடுப்பக் கொள்ளும் முறையை விரும்பாது, தனக்கு விருப்பமான களவொழுக்கத்தை மேற்கொண்டு, தன் போக்கைத் தந்தை, தன்னையர் ஏற்றுக் கொண்டு மணஞ் செய்து தரும் வெற்றியை யுடையவனாவான் என்பதாம்.

எண்ணெய் நீவிய காழ் மண்ணி, அவிழா தேம் கலந்து மணிநிறம் கொண்ட குஞ்சியின் கண்ணி மிலைச்சி வளைஇ, செரீஇ, பொலிய ஏந்தி, தெரிந்து, கட்டி, கலாவ, துன்னுதொறும் வெகுளும் ஞமலி நெரிதர, மருண்ட புலம்படர, அணிபெற வந்து, வெரூஉதல் அஞ்சி, மேவரக்

கிளந்து, ஏத்தி உடையேன் என்றனன்; அதன் எதிர் சொல்லேம் ஆகலின், அல்லாந்து கலங்கி, சொல்லலும் பழியோ என வண்டொடு சுரும்பு இறுத்த தாசினைப் பிளந்து, ஓச்சி, அவித்து, நின்றனனாக.

இருவி வேய்ந்த குறுங்கால் குரம்பை
பிணைஏர் நோக்கின் மனையோள் மடுப்ப
தேன்பிழி தேறல் மாந்தி, மகிழ்சிறந்து
சேமம் மடிந்த பொழுதின், வாய் மடுத்து
இரும்புனம் நிழத்தலின், சிறுமை நோனாது. (153 – 157)

தினைஅரி தாளால் வேயப்பட்ட கூரையையும், உயரம் இல்லாத குறுகிய கால்களையும் உடைய தாழ்ந்த குடிசையில், பெண்மானை ஒத்த பார்வையினையுடைய மனையாட்டி ஊற்றித்தர, தேன் கூட்டினைப் பிழிந்து பெற்ற கள்ளைக் குடித்து, மகிழ்ச்சி மிக்குத் தினைப் புனக் காவலை ஒழிந்திருந்த வேளையில் (யானை ஒன்று வந்து கதிர்களைத் தின்று) பெரிய தினைக் கொல்லையை அழித்து விட்டமையால் (தன் பாதுகாவலுக்கு ஏற்பட்டு விட்ட) சிறுமையைப் பொறுத்துக் கொள்ள மாட்டாமல்.

இருவி: தினையின் அரிந்த தாள். மடுத்தல்: ஊட்டுதல் செலுத்துதல். வாய் மடுப்ப: செலுத்த மடிதல்: மறத்தல், நிழத்தல்: அழித்தல்: நோன்று கொளல்: பொறுத்துக் கொள்ளுதல் கானவன் கள்ளுண்டு மயங்கிக் கிடந்த வேளையில் யானை புகுந்து காவல் இல்லாத புனத்தை அழித்து விட்டது. இத்தகைய செய்தியை அகம் 348ம் பாடலும் விவரிக்கின்றது.

அரவுஉறழ் அம்சிலை கொளீஇ நோய்மிக்கு,
உரவுச்சினம் முன்பால் உடல்சினம் செருக்கி,
கணைவிடு புடையூக்கானம் கல்என
மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிர (158 – 161)

பாம்பை ஒத்திருக்கின்ற வில்லைக் கைக் கொண்டு (தனக்கு ஏற்பட்ட குறைவையும், அழிவையும் எண்ணிப் பார்த்ததனால் உண்டாகிய) வருத்தம் மிகுந்து, அதனால் பெருகிய சினம் தூண்டவும், உடல் வலி மிக்கவனாய் அக் கானவன் மாறுபாடாகிய சினத்தினால் மயங்கி அம்புகளை எய்தும், ஓசையை உண்டாக்கும் கருவிகளை இயக்கியும், காடு முழுவதும் கல் என்ற எதிரொலி உண்டாகும்படி நாவை மடித்து அடிக்கும் சீழ்க்கை (Whistle) ஒலியைச் செய்யும் துணைவருடன் பேரோசையை உண்டாக்கி எதிர்க்கவும்.

அரவு: பாம்பு, வடிவிற்கும், தொழிலுக்கும் வந்த உவமம் என்பது நச்சினார்க்கினியர் விளக்கம் முன்பு: வன்மை சினம் காரணமாக உடலின் வலி இயல்பாய் உள்ளதினும் மிக்கது என்க. யானையைக் கொல்வதால் தன்னுடைய சிறுமை தீராததனோடு, இழவும் ஈடாகாது. என்பதை உணராமல் அதனைக் கொன்று விடுவதனைக் குறியாகக் கொண்டமையின் செருக்கிக் கணைவிடுபு என்றார். செருக்கி: மயங்கி.

காா்ப்பெயல் உருமின் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்தி
சினம்திகழ் கடாஅம் செருக்கி, மரம்கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர, (162 – 165)

கார் காலத்தே மழையைப் பெய்விக்கும் இடியேறு போல முழங்கி, அழகு விளங்கும் சருச்சரையை உடைய தன் நீண்ட துதிக்கையை பெரிய நிலத்தினிடத்தே பொருத்தி சினத்தால் நிலத்தைத் துழாவி தன் சினம் விளங்கும் படி மதநீர் பெருக மயங்கி, மரங்களை ஒடித்து எறிந்து பித்து ஏறிய யானை கூற்றத் தூதனைப் போல் எதிர்த்து வரவும்.

பிளிறல்: யானையின் ஒலி கடாஅம்: மதநீர், கானவர் தன்னைத் துரத்தியதனைப் பொறுக்காத யானை, அவரை எதிர்த்தலை விட்டு விட்டு. தன்னை ஒன்றுஞ் செய்யாத தனக்குத் தழையை உதவக் கூடிய மரத்தை ஒடித்து எறிந்ததனைச் செருக்கி மரம் கொல்பு என்றார். மேல் கானவன் கணைவிட்டதும் செருக்கியமை யாலேயே என்று குறிப்பிட்டதனை நினைக. இவற்றால் செருக்கு காரணமாக விளையும் விளைவுகள் செய்பவர்க்கு நன்மையைப் பயவா, தீமையையும் தரும் என்பவற்றை உணர்த்தினார்.

மனையோள் கானவனுக்குத் தேறலைத் தந்ததனை, தந்தை தலைவியைத் தினைப் புனக்காவலுக்கு அனுப்புமாறு ஏவல் தந்ததற்கும், தேறலைமாந்தி, மகிழ்சிறந்து கானவள் சேமம் மடிந்ததனை, தந்தையின் ஏவலை மேற்கொண்டவள், பால் ‘சிறுதினை படுபுள் ஓப்பி ஏற்பட வருதியர்’ என விடுத்தற்கும், யானை வாய் எடுத்து இரும்புனம் நிழத்தியதனை, நோய், தலைவியைக் கைப்பற்றி அவளுடைய மேனியையும், விறலிழையையும் நெகிழ்த்ததற்கும், காவலன் சிறுமை நோனாது செயல்புரியத் தொடங்கியதனைச் செவிலியும் சிறுமை நோனாது செயல்படத் தொடங்கியதற்கும், அவன் அரவுறழ் வெஞ்சிலையைக் கைக்கொண்டதனை அவள் அறியுநரை வினாயதற்கும். அவன் நோய்மிக்கு உரவுச் சின முன்பால் உடல் சினம் செருக்கியதனை அவன் துன்பம் உழந்து தலைவியின் நோயைப் போக்கிவிட வேண்டும் என்ற உறுதி உந்தவே மனவெழுச்சியுடன் பரிகாரம் தேடியதற்கும், அவன் கணை விட்டு, புடைத்து இளையருடன் வெடிபடுத்து எதிர்த்தனை அவள் பரவியும், தொழுதும், தூயும், வேலனுடன் கூடிப்பேணி ஓச்சியதற்கும், கானம் கல்லென எதிரொலித்ததனை அவள் பரவியும், தொழுதும், தூயும், வேலனுடன் கூடிப்பேணி ஓச்சியதற்கும், கானம் கல்லென

எதிரொலித்ததனைச் செவிலி செய்த முயற்சிகளைக் கண்ட அம்பற் பெண்டிர் அலரெடுத்ததற்கும், யானை பிளிறி, துழாவி, செருக்கி மரங்கொன்றதனை நோய் மிகுந்து நற்கவின் தொலையவும், நறும்தோள் நெகிழவும், புள்பிறர் அறியவும், புலம்பு வந்து அலைப்பவும் செய்ததற்கும், மையல் வேழம் மடங்கலின் எதிர்ந்ததனை புலம்பு இவளை உய்யமாட்டாத நிலைக்குச் செலுத்தியதற்கும் உள்ளுறை உவமம் கொள்க.

இவ்வுள்ளுறை உவமத்தைச் சிறப்பிக்க மூன்று ஏனையுவமங்கள் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. மனையோள் தன் பிணை ஏர் நோக்கினால் கானவனைத் தேறலை உண்பித்தாள். எனவே தந்தை தன் தலைமைப் பதவியால் செவிலியைத் தன் ஏவலை மேற்கொள்ளச் செய்தான் என்றுணரலாம். கானவன் பாம்பினை ஒத்த சிலையைக் கைக் கொண்டு அம்பு எய்தான் என்றது, செவிலியும் தப்பாமல் பரிகாரம் தேடி நோயைப் போக்கவல்ல பேரறிஞரையே நாடினாள் என்பதனை உணர்த்துகின்றது. யானை செருக்கிக் கார்ப்பெயல் உருமினைப் போல் பிளிறியது. நோய் உய்யா அரும்படர் விளைத்துப் பிறரை மறையறியச் செய்ததனைக் குறிப்பிடுகின்றது.

யானை மயங்கித் தனக்கு உணவாகக் கூடிய மரங்களின் கிளைகளையே பிளந்து எறிந்தது, தனக்குக் கேடு சூழ்ந்து கொண்டது. அவ்வாறே நோயும் தனக்குத் தங்குமிடமான தலைவியை அலைத்த காரணத்தாலேயே, செவிலி அறத்தொடு நிற்றலை ஏற்றுக் கொள்வாள். இது நோய் தொலைவதற்கு அதுவே வழி தேடிக் கொண்டதாக ஆகும்.

உய்வுஇடம் அறியேம் ஆகி ஒய் எனத்
திருந்துகோல் எல்வளை தெழிப்ப, நாணு மறந்து

விதுப்புஉறு மனத்தேம் விரைந்து அவன் பொருந்தி
சூர்உறு மஞ்ஞையின் நடுங்க. (166 –169)

தப்பிச் செல்லக் கூடிய இடத்தை அறியாதவர்களாய், புதுக்கியதனால் திரட்சியும் ஒளியும் பெற்ற வளைகள் 'போகாதே கொள்' என அதட்டிக் கூற, நாணத்தைத் துறந்து, பரபரப்பு மிக்க மனத்தை யுடையவர்களாய் விரைந்து சென்று அவளை அணுகி, தெய்வம் பற்றிக் கொண்ட மயிலினைப் போல நடுங்கி இருக்கவும்.

உய்தல்: தப்புதல் 'சார்புடையார் ஆயினும் உய்யார்' *(திரு : 900)* ஒய்தல்: போக்குதல். தெழித்தல்: உரத்துக் கூறி விலக்கல் 'ஒய்யெனத் தெழித்து *(சிலம்பு, 15:48)* என்ற சொற்களுக்கு அடியார்க்கு நல்லார். 'நெருங்கா தொழியென உரப்பி' எனப் பொருள் கூறியிருத்தல் காண்க. தந்தையால் தரப்பட்ட வளைகளாகையால், அவள் தந்தையின் பாதுகாவலைத் துறக்க எண்ணியதனைத் தடுத்தன என்க.

அவனைச் சென்று சேர்ந்த பின்னரும் தம் நடுக்கம் நீங்காமல் இருந்தது, தெழிப்ப மறந்து சென்றமையாலேயே யாம்.

வார்கோல்,
உடுஉறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலின்,
புண்உமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய, நில்லாது
அயர்ந்துபுறம் கொடுத்து பின்னர்.... (169 – 173)

நீண்டு திரண்டிருக்கும் இறகினைக் கொண்ட அம்பை எடுத்து மிகவும் வேகமாகத் தலைமையினை உடைய யானையின் அழகிய முகத்தில் அழுந்தச் செலுத்தியதால், (அம்பு உண்டாக்கியதனால் ஏற்பட்ட) புண் பெருக்கிய

இரத்தம் முகத்தில் பரவிக் கசியவும். புள்ளிகளையும் கோடுகளையும் உடைய நெற்றியின் அழகு அழியவும், (யானை அவ்விடத்தே நிற்க மாட்டாமல் சோர்வுற்று, முதுகு காட்டி ஓடிய பின்னர்,)

வார்: நீண்ட, உடு: இறகு: உடுஉறு கணை (அகம்: 292) அறத்தொடு நிற்கும் காலத்துத் தலைவிக்குப் பகையாய் அமைபவர் தந்தை, தன்னையரே யாம்.

மையல் வேழம் மடங்கலின் எதிர்தர. உய்விடம் அறியாது, வளைதெழிப்ப, நாணு மறந்து, விதுப்புறு மனத்தராய் விரைந்து அவற் பொருந்தியதனை நொதுமலர் முரசியம்பி மணம் பேச வந்த காலத்து, பிழை மணத்தைத் தானே தடுக்கும் பெற்றியறியாதவளாய், களவினை விரும்பிய தலைவன் வேண்டுகோளைப் புறக்கணித்து விட்டு, அச்சம் அகன்று, பதைபதைப்புடையவளாய் விரையச் சென்று செவிலியைச் சேர்ந்து மறை புலப்படுத்தத் தோழியைச் செலுத்தியதற்கும், அவனைச் சென்று சேர்ந்த பின்னரும் அவர்கள் நடுக்கம் நீங்காதவராய் இருந்ததனைத் தோழி செவிலியைச் சேர்ந்த பின்னரும், அவள் தம் கூற்றை ஏற்றுக்கொண்டு தாய் மூலமாகத் தந்தை தன்னையர்க்கு உணர்த்துவதற்குள் தந்தை முதலாயினோர் நொதுமலர்க்கு மணம் நேர்ந்து விடப் போகின்றனரே எனத் தலைவி நடுங்கிக் கொண்டிருந்ததற்கும், அவன் பகழி வாங்கி யானையின் முகத்தில் விசையுடன் அழுத்திய தனை, 'யாய் திறப்பட என்னையர்க்கு உய்த்துரைத் தமைக்கும்' புண்ணுமிழ் குருதி முகம் பாய்ந்து இழிதந்ததனை 'அவரும் தெரிகணை நோக்கிச் சிலை நோக்கி ஒரு பகலெல்லாம்' உருத்தெழுந்ததற்கும், புள்ளி வரிநுதல் சிதைந்தனை அவர் ஆறியதற்கும், அது நில்லாது அயர்ந்தனை 'இருவர்கண் குற்றமும் இல்லையால்' என அவர்கள் தெளிந்ததற்கும், அது புறங்கொடுத்ததனை

அவர்கள் தெருமந்து தலைசாய்த்ததற்கும் உள்ளுறை உவமம் கொள்க.

யானையை முதலில் நொதுமலராகவும், பின்னர் தந்தை தன்னையராகவும் கருதிக் கொண்டது அவ்வவ்விடத்து அவர்கள் தலைவிக்குப் பகைபோல் தோற்றுதலின் என்க. யானை முன்னரும், ஈண்டும் தலைவிக்குப் பகையாகவே இருத்தலைக் கருதுக.

குறிஞ்சிக் கலியில் 'காமர் கடும்புனல்' என்று தொடங்கும் பாடல் தோழி அறத்தொடு நிற்றலை விவரிப்பதாம். அப்பாடலின் விரிந்த தோற்றமே இக் குறிஞ்சிப் பாட்டு. அங்குப் புனல் தரு புணர்ச்சியைக் கையாண்ட கபிலர், இப்பாடலில் களிறு தரு புணர்ச்சியைப் பயன்படுத்தி யிருக்கின்றார்.

நெடுவேள்,
அணங்குறு மகளிரின் ஆடுகளம் கடுப்ப
திணிநிலைக் கடம்பின் திரள்அவை வளைஇய
துணைஅறை மாலையின் கைபிணி விடேஎம்
நுரைஉடைக் கலுழி பாய்தலின் உரவுத்திரை
அடுங்கரை வாழையின் நடுங்க........ (174 – 179)

முருகனால் தீண்டப்பட்ட மகளிருக்காக வெறி யாட்டயரும் களத்திற் போல திண்ணிய அடிமரத்தினை உடைய கடப்ப மரத்தின் திரண்ட முதலை வளைத்த இரண்டாக இணைக்கப் பெற்ற மாலையினைப் போல (நாங்கள்) இருகைகளையும் ஒன்றோடொன்று பிணைத்துக் கொண்டிருந்ததனை விடுவிக்காதவர்களாய், நுரையை உடைய புதுவெள்ளம் பெருகுவதால், (அதனின்றும் பெருகிய) வலிய அலைகள் குத்தி இடிக்கும் கரை யினிடத்தே யுள்ள வாழை மரங்களைப் போல் நடுங்கிக் கொண்டிருக்க.

துணைஅறை மாலை: ஒன்றாகப் பெருந்தும்படி இரண்டாக அறுக்கப் பெற்ற மாலை. அணங்குறு மகளிர் ஆடுகளம் என்ற விவரம் கடப்ப மரத்தை மாலை வளைத் திருந்தமையைக் கருதிக் கொள்ள வந்தது. இரண்டு மாலைகளைக் கொண்டு அதனை வளைத்துக் கட்டுதல் போல் இவர்கள் தம் இருகைளையும் இணைத்துக் கொண்டபடியே நடுங்கிக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு கருதிக் கொள்ளாமல், நச்சினார்க்கினியர் 'அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்ப' என்பதனை யானை முகத்தினின்றும் ஒழுகும் குருதியை விளக்க வந்த உவமமாகக் கருதிக் கொண்டிருக்கின்றார். வெறியாட் டயரும் காலத்தில் கடப்ப மரத்துக்கு மாலையணியும் பேறு கிடைத்தலின் ஆசிரியர், அதனை இங்கு உவமமாகக் கொண்டார். எனினும் அவர் பயன்படுத்தியிருக்கும் முறையில் இவ்வுமம் தடுமாற்றத்தையும் கலக்கத்தையும் தோற்றுவிப்பது போல் இருக்கின்றது. இதனாலேயே நச்சினார்க்கினியர் இதனை யானை புண்பாட்டுக் குருதி சொரிந்தமைக்குப் பொருத்திக் கொண்டார்.

தோழி, யானை புறங்கொடுத்த பின்னரும் தாங்கள் நடுங்கியிருந்ததனைச் செவிலி மனங்கொள்ளச் சொல்ல விரும்பினாள் பின்னர் வரும் 'அஞ்சல், ஓம்பு' எனத் தலைவன் கூறிய சொற்களுக்குச் சிறப்புத் தர வேண்டியே தோழி இங்குத் தாம் நடுங்கி இருந்தமையைக் குறிப்பிட்டாள். அதனைச் செவிலிக்கு நன்குணர்த்த, அவள் தலைவிக்காக வெறியயர்ந்த களத்தில் நடுங்கியதனைப் போலவே, அன்றும் நாங்கள் நடுங்கினோம் எனக் குறிப்பிடுகின்றாள். இதனால் வெறியாட்டயர்ந்த காலத்தில் இவர்களுக்கு இருந்த மனநிலையே, யானை புறங்கொடுத்துப் போன காலத்தும் இருந்தது என்பது தெளிவாகின்றது. இவ்விரு வேளைகளிலும் இவர்கள்

மனத்தைக் கலக்கியது 'இந்நிலையின் விளைவு எதனால் கொல்' என்றறிய முடியாததேயாம். இங்குத் தலைவன் இவர்கள் நிலையினை உணர்ந்து தேற்றுகின்றான். வெறியயர்ந்த காலத்தில் இவர்களைத் தேற்றுவார். இல்லையே!

'நுரையுடைக் கலுழி' எனவே புதுவெள்ளம் என்பது தெளிவு. ஆற்றங்கரை இடத்தே அமைந்த வாழைத் தோட்டத்தில் உள்ள மரங்கள் எதிர்பாராது மிகுந்த வெள்ளம் அலைத்தலால் நடுங்கின. இதனை இவ்வாறு கருதாமல், இவர்கள் நீரில் பாய்ந்தது போலவும், தலைவன் காத்தது போலவும், நச்சினார்க்கினியர் கருதிக் கொண்டு அதற்கேற்பப் பொருள் விரிக்கின்றார். அவர் புனல் தரு புணர்ச்சியை இங்குப் புகுத்திக் கூறுதல் சிறிதும் பொருந்ததாது. மேல் தோழி 'அருவிடர் அமைந்த களிறு தரு புணர்ச்சி' ஒன்றனையே குறிப்பிடுகின்றாள். புனல் தரு புணர்ச்சியை இவ்வாசிரியர் கையாண்டிருக்கும் கலிப்பாடல் கூறுவனவற்றுக்கும், இங்கு நச்சினார்க்கினியர் விவரிக்கும் புனல் தரு புணர்ச்சியின் விவரங்களுக்கும் இடையேயுள்ள வேற்றுமைகளைக் கருதுக. நச்சினார்க்கினியர் விளக்கும் முறையில் ஆசிரியர் தம் பாடலைப் பாடியே இருக்கமாட்டார் என்பது தேற்றம்.

யானை புறங்கொடுத்துப் போன பின்னரும் இவர்கள் நடுங்கியதனை ஏற்றுக் கொள்ள மனமில்லாத காரணத்தாலேயே ஆசிரியர் நச்சினார்க்கினியர் இப்பகுதி புனல் தரு புணர்ச்சியினைக் குறிப்பிடுவதாகக் கருதிக் கொண்டார். அவர்கள் அந்நிலையில் நடுங்கியது அவர்களுடைய உயர்ந்த பண்பாட்டினையே குறிப்பிடு கின்றது. 'அச்சமும் நாணமும் மடனுமுந் துறுதல், நிச்சலும் பெண்பாற் குரிய என்ப' (தொல். பொருள்:) எனக் குறிப்பிடப் பெற்ற அச்சமே இவர்களை 'அடுங்கரை

வாழையின் நடுங்க' வைத்தது என்க. தலைவியின் அச்சத்தை அகற்றும் முறையில், மேல் தலைவன் உறுதி கூறுவதனைக் கருத, இதுவே ஆசிரியர் கருத்து என்பது தெளிவாகும்.

பெருந்தகை,

அஞ்சில் ஓதி! அசையல்; யாவதும்
அஞ்சல்; ஓம்பு;நின் அணிநலன் காக்கு; என
மாசுஅறு சுடர்நுதல் நீவி, நீடுநினைந்து
என்முகம் நோக்கி நக்கனன்;......... (179 – 183)

மிக்க தகுதிப் பாட்டினை யுடையவன், 'அழகிய சிலவாகிய கூந்தலையுடையவளே! வருந்தாதே; எதற்கும் அஞ்சாதே; என் சொற்களை ஏற்றுக் கொள்; உன் அழகிய நலத்தை அழியாமல் காப்பேன்; என்று (உறுதியளித்து) அவளுடைய மறுவற்றதும் ஒளிவீசுவதுமான நெற்றியைத் தைவந்து, (இக்களவொழுக்கம் தடையில்லாமல் நீண்ட நாள் நிகழ வேண்டும் எனக் கருதியவனாய்) ஆழ்ந்து எண்ணி (அதனை நிறைவேற்றிக் கொள்ள என் துணையைப் பெற்று விட்டவன் போலவே) என்முகத்தைப் பார்த்துச் சிரித்தான்;

அவன் அசையல் என்றது 'யானையைக் கண்டதனால் ஏற்பட்ட அச்சத்தைத் தவிர்த்து விடு' என்ற குறிப்புடையது. 'யாவதும் அஞ்சல்' என்றது இப்பொழுது என்னுடன் இருப்பதற்கும், இனி என்னைக் களவொழுக்கத்தை மேற்கொண்டு காண்பதற்கும் அஞ்சாதே என்ற குறிப்புடையது. 'ஓம்பு' என்றது அரிமா நோக்கம் 'யாவதும் அஞ்சல்' என்பதனையும், 'நின் அணிநலன் காக்கு' என்பதையும் வற்புறுத்தக் கூறியது. அணிநலன் காக்கென' என்ற பாடம் தொல்காப்பியப் பொருளதிகாரம் உரையின்கண் மேற்கொளாகக் காட்டப் பெற்ற இப்பாடற் பகுதியில் கண்ட பாடம் (பொருளியல்

; 13) இத்துறையில் இயன்ற 'காமர் கடும்புனல்' என்று தொடங்கும் குறிஞ்சிக்கலியின் போக்குக்கு ஒப்ப தெளிவகப் படுத்தலாய் அமையும் இப்பாடமே சிறந்தது.

களவொழுக்கம் தொடர்ந்து நடக்கத் தோழியின் துணை இன்றியமையாதது. எனவே அவன் அவளை நோக்கிச் சிரித்தான். இதனை விவரிக்கும் தோழி, இங்கு மட்டும் ஒருமைப் பாலைப் பயன்படுத்தி யிருப்பதனை உன்னுக. இதனால் தெளிவகப்படுத்தியதனை உணர்ந்து தன் முகத்தால் இவனுக்குத் துணை செய்பவள் போல் இவள் குறிப்பாய்ப் புலப்படுத்தியதனைத் தான் உணர்ந்தே தலைவன் இவளுடைய முகத்தைப் பார்த்துச் சிரித்தான் என்பது தெளிவாம்.

அந்நிலை
நாணும், உட்கும் நண்ணுவழி அடைதர
ஒய்எனப் பிரியவும் விடாஅன், கவைஇ
ஆகம் அடைய முயங்கலின்,.......... (183 – 186)

அந்நிலையிலே, நாணமும் அச்சமும் நெருங்கி வந்து சேரவும், 'போய்விட' எனச் சொல்லி இவளைப் பிரிந்து செல்ல விட விருப்பம் இல்லாதவனாய்த் தன் கைகளால் இவளை அணைத்துக் கொண்டு, தன் அகன்ற மார்பின்கண் இவளுடைய மார்பு ஒடுங்கும் வண்ணம் தழுவுகையினாலே.

நண்ணுவழி: வெகு அருகில், 'கண்ணிற்காண நண்ணுவழி இரீஇ' (பொருநர் : 76) முன்னர் யானையைக் கண்டதனால் ஏற்பட்ட அச்சம் இவளை நாணைத் துறந்து அவனை நெருங்கச் செய்தது. அவ்வச்சம் அகன்றவுடன், இவளை நாணம் வந்து பற்றிக் கொண்டது. இப்பொழுது குடிப்பிறப்புக்கும், சிறந்த ஒழுக்கத்துக்கும் தக்கது செய்கின்றோமா என்ற ஐயங் காரணமாக எழுந்த அச்சம் இவளைப் பற்றிக் கொண்டது. இது அன்பு காரணமாகத்

தோன்றும் அச்சமே யாம். இதனைப் பிரிவச்சம் எனவும் கொள்ளலாம். கதையை மதியுடம் படுத்தலில் தொடங்கி இருக்கவே, ஆசிரியர் இங்கு அவன் அவளைத் தோழியின் எதிரில் தழுவியதாகக் கூறியிருக்கின்றார்.

'மெய்யறிந்து ஏற்றெழுவேன் ஆயின், மற்று ஒய்யென ஒண்குழாய் செல்க எனக் கூறிவிடும் பண்பினை' உடைய தலைவனைக் குறிஞ்சிக் கலியுள் (1ம் பாடல்) காண்கின்றோம். அங்குத் தலைவன் அவளை அணைத்தவாறு இருந்தான். அவன் அவளைப் போக விடுதலே அப்பாடலில் தெளிவகப் படுத்தலாம். அலருக் கஞ்சியே போக விடுதலான்! அங்குத் தலைவன் அணைப்பில் இருந்தவள் தன்னை விடுவித்துக் கொள்ள விருப்பம் இல்லாதவளாய் இருந்தாள். ஆனால் இங்குத் தலைவி, யானை புறங்கொடுத்த பின்னர், தன் வழியே செல்ல விரும்பும் விருப்பம் உடையவளாய்க் காணப்படுகின்றாள். இதனைப் பிரியவும் விடாஅன் என்ற சொற்கள் விளக்குகின்றன.

மனைவி மடுப்ப மாந்தி சிறந்து மடிந்த பொழுதின் நிழத்தலின் நோனாது நோய் மிக்கு செருக்கி, கணை விடுபுடையூ வெடிபடுத்து எதிர, யானை பிளிறு செருக்கி மரம் கொல்பு எதிர்தர தெழிப்ப மறந்து பொருந்தி நடுங்க, பகழி வாங்கி அழுத்தலின் குருதி இழிதர நுதல் சிதைய நில்லாது புறங்கொடுத்த பின்னர், கைபிணி விடேஎம் நடுங்க, பெருந்தகை அஞ்சல் ஓம்பு காக்கென நீவி, விடாஅன் கவைஇ முயங்கலின்;

அவ்வழி,

பழுமிளகு உக்கபாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீம்கனி உதிர்ந்தென
புள்எறி பிரசமொடு ஈண்டி பலவின்
நெகிழ்ந்துஉகு நறும்பழம் விளைந்த தேறல், (186 – 190)

அவ்விடத்து பழுத்த மிளகு உதிர்ந்த பாறையில் உள்ள பெரிய சுனையில், பருத்த அடியினை யுடைய மாமரத்தின் இனிய பழம் உதிர்ந்ததாக (அதன் தாக்குதலால் சிதைந்த) ஈக்கள் கவர்ந்து கொண்டு வந்து சேமித்து வைத்திருந்த கூட்டினின்றும் ஒழுகிய தேனோடு கலந்து, பலாமரத்தி னின்றும் தானாக விழுந்து கனிந்த இனிய சாற்றினால் உண்டாகிய கள்ளினை,

தேன், பலாப் பழச்சாறு, மாங்கனியின் சாறு இவை அனைத்தும் கலந்து முற்றிய தேறல் என்க. இவ்வாறு அகநானூற்றின் இரண்டாம் பாடலில், வாழையின் கனிந்த பழமும், பலாப்பழத்தின் சாறும் சேர்ந்து பாறையின் நெடுஞ்சுனையில் கள் உண்டாயிற்று என்றும், அதனைக் குடித்த குரங்கு மயக்கத்தால் மலையேற மாட்டாது அயர்ந்து தூங்கிற்று என்றும் இவ்வாசிரியரே குறிப்பிட்டிருக்கின்றார்.

எறிதல்: கவர்ந்து கொள்ளல். 'ஆறெறி பறையும்' *(சிலம்பு : வேட்டுவவரி)* என வந்தமை காண்க. ஈண்டுதல்: செறிதல். 'இமிழ் கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கை' *(புறம்: 19)*

நீர்செத்து அயின்ற தோகை வியல்ஊர்
சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட்டு இன்இயம் கறங்க ஆடுமகள்
கயிறுஊர் பாணியின் தளரும்;.............. (191 – 194)

(சுனையில் நீரோடு கலந்திருந்தமையால் அறியாது உண்ணும் நீர் என்று எண்ணி (வயிறும், மனமும் நிறை வெய்தும் படிக்) குடித்து மயில், அகன்ற ஊரின் கண்ணே விழா நடக்கும் இடத்தில் அக் களத்தை அடைந்து, அரிந்து எழும் இனிய ஓசையை யுடைய வங்கியங்கள் ஒலிக்க, அவற்றின் தாளத்துக்கு ஒப்ப மகளிர் கயிற்றின் மீது நடந்து ஆடும் இயல்பின் தளர்ந்து நடக்கும்.

எளிதில் கிடைத்து இன்பம் ஊட்டும் தன்மை சிறந்ததாய் விளங்கவே, மயில் சுனை நீரை விரும்பிக் குடித்தது. அந்நீரில் பழச்சாறுகளும் தேனும் கலந்து கள் உண்டாகி யிருக்கவே அதனைக் குடித்த மயில், மதி மயங்கி, நடக்க மாட்டாமல் தளர்ந்து நடக்கும்படி ஆயிற்று.

இயல்பாய் நடக்க மாட்டாமல் தளர்ந்து செல்லும் மயிலின் நடை, ஆடு மகளிர் கயிற்றின் மீது தளர்ந்து நடப்பதனை ஒத்திருந்தது. மயிலை இவ்வாறு பெண்களுக்கும், ஆடு மகளிர்க்கும் ஒப்பிடுவதனை இவர் அகத்தினும் கையாண்டிருக்கின்றார். அகநானூற்றின் 82-ஆம் பாடலில் மந்திகள் கண்டு களிக்க மயில் மலைச் சாரலின் மீது ஆடிற்று என்றும், அதனைக் காண்பவர் ஊரில் விழா நடக்கும் இடத்தில் விறலியர் ஆடும் ஆட்டத்தை நினைவு படுத்திக் கொள்வர் என்றும் இவர் விவரித்திருக்கின்றார்.

கள் கலந்திருக்கும் சுனை நீரின் தன்மையை அறியாது. அதனை விரும்பிக் குடித்து, மதிமயங்கித் தளரும் மயில்கள் வதியும் நாடன் என்றமையால், எளிதிற் கைகூடிய வேட்கையைத் தணிப்பிக்கும் தன்மை சிறந்த களவொழுக்கத்தை இடையூறுகளும், முட்டுப்பாடுகளும் நிறைந்தது என்றறியாமல் விரும்பி மேற்கொண்டு, பின்னர் மனஞ் சோர்ந்து வறிதிற் பெயரும் நிலையை உடையவனாவான் என்பதனைக் குறிப்பிட்டார்.

மதுவுண்டு மயங்கியதால் தளர்ந்த நடையே ஆயினும், அது தாளத்திற்கு ஏற்ப ஆடும் ஆடுகள மகளிர் நடையை ஒத்திருந்தது என்றது, இடையீடுகள் நிறைந்து இயல்பாய் எதிர்பார்த்த பயனைப் பயவாமற் போயினும் இக்கள வொழுக்கம் இருவரையும் ஒருவர்பால் மற்றவர் அன்பு மிக்கவராய்ச் செய்யும் என்பதனைக் குறிப்பிடும் ஆற்றலுடையது.

இவை இறைச்சி. நச்சினார்க்கினியர் இப்பகுதியை உள்ளுறை உவமமாக விரித்துப் பொருள் காட்டியிருக் கின்றார். மயிலை மடந்தையோடு ஒப்பு கூறும் இயல்பினை ஒட்டி அவர் இதனை உள்ளுறை உவமமாக விரித்தார். உள்ளுறைக்குப் பொருள் விரிக்குங்காலத்து, கருப் பொருள்களின் செயல்களைத் தலைவனுக்கோ தலைவிக்கோ ஏற்ற பெற்றி பொருத்தி உரைக்கலாம் என்பதுவே தொல்காப்பியர் கருத்தாகும். அவன் நாட்டு நிகழ்ச்சியை அவன் குணத்தைக் காட்டுவதாக இறைச்சியாற் கொண்டோம். நச்சினார்க்கினியர் மயிலை மடந்தையாகக் கருதி இதனை உள்ளுறை உவமமாக விரித்தார்.

மிளகு உக்க பாறை அந் நிலத்து மாக்கள் உறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம் பழத்தாலும் பலாப் பழத்தாலும் விளைந்த தேறல் தந்தை யாலும் தாயாலும் உளனாகிய தலைவனாகவும், பிரசம் இவரைக் கூட்டின பால்வரைத் தெய்வமாகவும், அ,தனை உண்ட மயில் உயர்ந்த தலைவனைத் தன் குலத்துக்கு ஒத்தானாகக் கருதி நுகர்ந்த தலைவியாகவும், அத்தேறலில் பிறந்த களிப்பு களவொழுக்கத்தாற் பிறந்த பேரின்ப மாகவும், மயில் ஆட ஆற்றாத தன்மை வருந்திக் குறைந்த தன்மையாகவும் உள்ளுறை உவமம் கொள்க. ஆசிரியர் நச்சினார்க்கினியர் விரிக்கும் உள்ளுறை இது.

இவ்வுள்ளுறையும், இதனை அடுத்துக் கூறப்பெற்ற உள்ளுறையும் நச்சினார்க்கினியரின் நுணுகி உணரும் பேராற்றலைப் புலப்படுத்துவனவாம். எனினும் இவற்றில் அவருடைய தற்குறிப்பேற்றமும் கலந்து காணப்படுகின்றது. எனவே இவ்வுள்ளுறையைச் சற்று மாற்றியமைத்துக் கொள்வது, கபிலருடைய கருத்தையும், இப்பாடலின் போக்கையும் உணர்ந்து அவற்றோடு இயையக் கூறுவதாக இருக்கும்.

மிளகு உக்க பாறை அந்நிலத்து மாக்கள் உறையும் ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், அச்சுனைநீர் தலைவனாகவும், பழங்களின் சாறும், தேனும் சேர்ந்து சுனை நீரைக் களிப்பு மிக உடையதாக ஆக்கியது அழகும், செல்வமும், குடிப்பிறப்பும் சேர்ந்து அவனை விரும்பத்தக்க பெருந்தகைமையை உடையவனாகச் செய்ததற்கும், அதனை அறியாது உண்ட மயில் களவொழுக்கத்தின் இயல்பை நினையாது ஏற்றுக் கொண்ட தலைவியாகவும், அதனால் ஏற்பட்ட களிப்பு மயிலைத் தளர்ந்த நடையையுடையதாகச் செய்தது. களவொழுக்கத்தாற் கிடைக்கும் எனக் கருதிய இன்பம் இல்லையாகி அவளை நோயை உடையவளாகச் செய்ததாகவும், மயிலின் மன அயர்ச்சி தலைவியின் வருந்திக் குறைந்த தன்மையாகவும் உள்ளுறை உவமம் கொள்ளக் கிடக்கின்றது.

மயிலின் மன அயர்ச்சியால் விளைந்த தளர் நடையேயாயினும், அது ஊரில் விழவு கொள்ளும் இடத்தில் கயிற்றின் மீது தாளத்திற்கு ஒப்ப ஆடும் மகளிரின் நடையை ஒத்திருந்தது என்ற ஏனையுவமம் இடையீடுகளையும் அவற்றால் நேரும் துன்பத்தையும் உடையதேனும், இக்களவொழுக்கம் தலைவனை அவளை விரைவில் மணஞ் செய்து கொள்ளச் செய்யத் தூண்டும் நற்பயனை விளைக்கும் தன்மையில் சிறந்தது என்றுணர்த்தி, உள்ளுறைக்குச் சிறப்பு தருவதனைத் தெளிக.

சாரல்,

வரையர மகளிர் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்
தண் கமழ் அலரி தாஅய், நன்பல
வம்புவிரி களத்தின் கவின்பெறப் பொலிந்த, (194 – 198)

அம்மலைச் சாரல்கள், தெய்வ மகளிரைப் போல் தலைகளைச் சாய்த்தனவாய் ஆகாயத்தை முட்டும் படியான உச்சிகளிலே விருப்பம் தரும் தகுதியுடையன வாகத் தழைத்திருந்த, காந்தட் செடிகளினுடைய. குளிர்ச்சியும் மணமும் கொண்ட மலர்கள் பரந்திருப்பதை யும், நல்ல தோற்றமுடையனவாகிய பல கச்சுகளை விரித்து வைத்தாற் போன்ற களங்களையுடையனவாய் எழில் பெற்று விளங்கின.

மாங்கனியும், பலாப்பழமும் கொள்வாரில்லாமல் சுனை நீரில் உருண்டு சென்றன என்றதனாலும், அப்பாறையின் மீது தேன் ஈக்கள் கூடு கட்டியிருந்தன என்றதனாலும், அது மக்களால் ஏறிச் செல்ல முடியாத உயர்ந்த பாறை என்பது புலனாகும். அதனை அடுத்து வளர்ந்திருந்த காந்தள் செடிகள் அழகிய பூக்களை நிறையப் பூத்திருந்தன வேனும், மக்களுக்குப் பயன்படாதனவாய் இருந்தன. எனினும் அவை தாமாக உதிர்ந்து மக்கள் நடமாடும் மலைச் சாரல்களை அழகுடையனவாக்கின. இப்பூக்கள் பரந்த சாரல்கள் மகளிர் கச்சுகளைப் போல் அழகுடையவனாய்த் தோற்றமளித்தன. **வம்பு:** கச்சு, மகளிர் அணியும் சட்டை. இக்கால Bra போல்வது.

**சாய்தல்:** தலை கவிழ்தல், 'நாணடச் சாய்ந்த நலங்கிளர் எருத்து' *(பொருநர்: 31).* பெண்களுக்கு நாணம் இயற்கை அணியாகையால், பூக்கள் நிறைந்திருந்தமையால் தலை சாய்ந்திருந்த காந்தட் செடிகளை வரையர மகளிருக்கு ஒப்பாகக் கூறினார். பூக்கள் பரந்த மலைச்சாரல்கள் பெண்கள் அணியும் கச்சுகளைப் போன்றிருந்தன எனக் கூறியதனால், ஆசிரியர் நில மடந்தையின் எழிலுருவத்தை நினைத்துப் பார்க்கத் தூண்டியிருக்கின்றார்.

அலைநீர் ஆடை மலைமுலை ஆகத்து
ஆரப் பேரியாற்று மாரிக் கூந்தல்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை' (சிலம்பு: 5)

காந்தளைத் தலைவிக்கும், அது விண்பொருஞ் சென்னியில் கிளைத்திருந்தது, தலைவி ஒருவரும் அணுக முடியாத தந்தையின் பாதுகாவலிற் கிடந்ததற்கும், அது தண்கமழ் மலர்களைப் பெற்று விளங்கியது அவள் இளமையும் எழிலும் பெற்று விளங்கியதற்கும், பிறரால் பயன்பெற முடியாத பூக்களைக் காந்தள் தானாக உதிர்த்து விட்டது. பிறர் நெருங்க மாட்டாத நிலையில் இருந்தவள் தானாகத் தந்தையின் பாதுகாவலைத் துறந்ததற்கும், உதிர்ந்த பூக்களை மலைச் சாரல்களிற் பரப்பி அவற்றை அழகுறுத்தியதனோடு காந்தளும் பிறருக்குப் பயன்பட்ட பேற்றினைப் பெற்றது தந்தையின் பாதுகாவலைத் துறந்தவள் தலைவனை அடைந்து அவனை இன்பம் எய்தச் செய்ததனோடு, அறந்தலை பிரியா ஆற்றினிற் சென்ற பேற்றினைத் தான் பெற்றதற்கும் உள்ளுறை உவமம் கொள்க.

தெய்வத் தன்மையுடைய வரையர மகளிரைக் காந்தள் ஒத்திருந்தது என்ற ஏனை யுவமம், தெய்வம் தன் அருளால் மக்களுக்கு நன்மையைச் செய்தலைப் போலவே, காந்தளும் தன் பூக்களைத் தானே யுதிர்த்து மலைச் சாரலை அழகியதாக்கிற்று என்பதனோடு. அவ்வாறே இத்தலை வியும் தன் உழுவலன்பு காரணமாகவே தன் தந்தையின் பாதுகாவலைத் துறந்து தலைவனுக்கு அருளினாளே அல்லாமல், அவன் வற்புறுத்தல் காரணமாகத் தன் நிலையில் தளர்ந்தாளல்லள் என்பதையும் குறிப்பாய்ப் புலப்படுத்தி உள்ளுறை உவமத்துக்குச் சிறப்பு தருவதனை உணர்க.

நச்சினார்க்கினியர் இப்பகுதிக்குக் கூறியிருக்கும் உள்ளுறை வேறுபட்டது. அவர் காந்தளைத் தலைவியாகக் கொள்ளாமல் தலைவனாகக் கருதியதே அவருடைய மாறுபட்ட கருத்துக்குக் காரணம் ஆம். 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' என்பதே விதி. 'மிக்கோன் ஆயினும் கடிவரையின்றே' என்பது. இந்நிலை தள்ளப் படாததாகும் எனவே குறிப்பிடுகின்றது. இடைக் காலத்தவர் தலைவன் உயர்ந்தவனாய் இருப்பதே சிறந்தது எனக் கருதியிருந்தனர். அக்கால வழக்கை ஆதாரமாய்க் கொண்டே நச்சினார்க்கினியர் உயர்ந்த இடத்தில் இருந்த காந்தளைத் தலைவனாகக் கருதிக் கொண்டார்.

உயர்ந்த நிலத்தே நின்று மணக்கின்ற காந்தள் வரையர மகளிரால் கீழ் நிலத்தே பரந்து அவ்விடத்திற் கச்சு விரித்தாற் போல அழகுறுத்தும் என்றதனால், நம்மில் உயர்ச்சியையுடைய தலைவன் நமது நல்வினையால் தனது பெருமை தானும் ஒழிந்து, இவ்விடத்தே வந்து கூடி, நமக்கும் உயர்ச்சி யுளதாக்கி நம்மை அழகுறுத்துகின்றான் என்று உள்ளுறை உவமம் எய்திற்று என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

குன்றுகெழு நாடன், எம் விழைதரு பெருவிறல்
உள்ளத் தன்மை உள்ளினன் கொண்டு
'சாறுஅயர்ந்து அன்ன மிடாச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருண, (199 – 203)

(அவ்வாறு விளங்கிய) குன்றுகள் நிறைந்த நாட்டையுடையவனும், எமக்கு விருப்பத்தை ஊட்டிய பெரிய வெற்றியை உடையவனும் ஆகிய தலைவன், எங்கள் உள்ளக் கிடக்கையை ஊன்றி உணர்ந்து உட்கொண்டு, 'விழாக் கொண்டாடும் காலத்திற் போலவே' (நாள் தோறும்) மிடா நிறைய ஆக்கிய சோற்றை வருபவர்

அனைவருக்கும் கூறுபடுத்திக் கொடுத்து, வளப்பம் மிக்க மாளிகை பொலிவு பெறும்படி, அதன் அகலத் திறந்த வாயிலினிடத்தே வந்தவர் பலரும் மகிழ்ச்சியோடு உண்ணவும்,

விழைதகு பெருவிறல்: இவர்கள் அவனை விரும்பும் வண்ணம் நல்லொழுக்கம் உடையவனாய் இருந்தவன், இவர்களுடைய அன்பைப் பெற்ற பெரிய வெற்றியை யுடையவனாயினான்.

வரைதல்: கூறுபடுத்திக் கொடுத்தல்.

பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்
வசையில் வான்திணை புரையோர் கடும்பொடு
விருந்துண்டு எஞ்சிய மிச்சில், பெருந்தகை!
நின்னோடு உண்டலும் புரைவது; என்று... (204 –208)

(மனையின் உள்ளே) பசுமையான நிணம் நிறைந்து நெய் மிக்க உணவைக் குற்றமற்ற உயர்குடிப் பிறந்த பெரியோர்கள் தம் சுற்றத்துடனே விருந்தினராய் வந்து உண்டு மிஞ்சிய எச்சத்தை, பெரிய தகுதிப்பாட்டை யுடையவளே! நின்னோடு சேர்ந்து நான் உண்பது நமக்குப் பெருமை தருவதாகும்' என்று கூறி,

திணை: இங்குக் குலம் என்ற பொருளில் வந்தது.

தலைவன் தன் மனத்திற்கு இனியாளை இங்குப் பெருந்தகை என விளித்தமை கவனிக்கத் தக்கது. நச்சினார்க்கினியர் இச் சொல்லைத் தலைவனைக் குறிப்பிடுவதாகக் கொண்டே பொருள் காட்டியிருக் கின்றார். முன்னர்த் தோழி தலவனைப் பெருந்தகை என்றும், எம் விழைதகு பெருவிறல் என்றும் பாராட்டிக் குறிப்பிட்டதும், அவனோடு தலவிக்கு நேர்ந்த தொடர்பினை அருவினை என்றதும், அவன் இவ்வாறு

தலவியைத் தன்னை ஒத்தவளாகக் கருதிச் சிறப்பு தந்தமையாலேயே யாம்.

அறம் புணையாகத் தேற்றி, பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது,
ஏம்உறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி,
அம்தீம் தெள்நீர் குடித்தலின், (208 – 211)

அப்பொழுதே, இல்லறமே (வீடு பேற்றினுக்குத்) தெப்பமாக அமையும் என விளக்கி, (இவ்வுறவு எப்படி முடியுமோ இதனால் என்ன விளையுமோ என்று மனத்தால் கருதிய என் ஐயங்களைப் போக்கித் தெளிவித்து, சிறந்த மலையின் மிக உயரத்திலே உள்ள முருகக் கடவுளை வாழ்த்தி வணங்கி, (இவளுக்குப்) பாதுகாவலாக இருக்கத் தக்க கடிய சூளுறுதலை வெளிப்படுத்திச் சொல்லித் தெளிவித்து, அழகும், இனிமையும், தெளிவும் கொண்டிருந்த அருவி நீரைக் குடிக்கையினாலே.

பிறங்குதல்: சிறத்தல். 'பெருமை பிறங்கிற்று உலகு' (குறள்: 23) 'பிறங்கு மலை மீமிசைக் கடவுள்' என்றது குன்று தோறாடும் குணத்தை அடிப்படையாகக் கொண்ட உண்மை. இங்கு இம்மலையே முருகக் கடவுளாம் என்றாள் என்பதும் ஆம்.

முன்னர், 'ஏமஞ்சால் அருவினை' என்றது. இங்கு 'ஏம்உறு வஞ்சினம்' செய்ததனை எதிர் நோக்கி உரைத்ததுவேயாம்.

முருகன் உவந்து தங்கி யிருக்கும் மலையுச்சியிருந்து அவனருளைப் போல் பெருகிவரும் அருவி நீரைக் குடித்தான் என்றாளாம். அவ் வருவி நீரை அம் தீம் தெள் நீர் என்றது அவன் கருதிய இல்லறமாகிய நல்லறத்தின் இயல்புகளை உணர்த்தும் ஆற்றலுடைய குறிப்பினை யுடையது.

அழகிது என்றது உலகினரால் போற்றப்படும் தன்மையையும், இனியது என்றது இவ்விருவருக்கும் இவ்வாழ்க்கை இன்பம் மலிந்ததாய் இருக்கும் என்றதனையும், தெளிந்தது என்றது இவ்வில்லறப் பயனாய்ப் பெறும் நற்பேற்றினையும் குறிப்பிடும்.

'மிடாச் சொன்றி பலருண' என்று கூறி அறத்தையும், 'நெய்ம்மலி அடிசிலால்' விருந்தினரை உண்பிக்கலாம் என்றதனால் பொருளையும், 'நின்னொடு உண்டல்' என்றதனால் இன்பத்தையும், அறம் புணையாகத் தேற்றி என்றதனால், இவ்வில்லறத்தை ஆறாகக் கொண்டே வீட்டினை எய்தலாம் என வீட்டினையும் இத்தலைவன் தன் வாழ்க்கையின் பண்பும் பயனுமாக அவளுக்குக் குறிப்பிட்டான் என்க.

நெஞ்சுஅமர்ந்து
அருவிடர் அமைந்த களிறுதரு புணர்ச்சி
வான்உரி உறையுள் வயங்கியோர் அவாவும்
பூமலி சோலை அப்பகல் கழிப்பி..... (211 –214)

இவன் மனம் பொருந்தி, அரிய மலைப் பிளவின்கண் உடன்பட்ட யானையால் தரப்பட்ட கூட்டத்தை, வானத்தை உரிமையையுடைய உறையுளாகப் பெற்று விளங்கியவர்களாய் விண்ணவரும் (விரும்பித் தங்கி இருக்க) விழையும் பூக்கள் நிறைந்த அச்சோலையில், அன்றைப் பகல் முழுவதும் கழித்து,

இவர்களுடைய இன்ப வாழ்க்கை வானவர் விரும்பித் தங்க வரும் பூமலி சோலையில் தொடங்கிற்று; எனவே, மணமும் நிலைபேறும் உடையதாக இருக்கும். மண முடைமையாவது தமக்கு இன்பமும், பிறர்க்குப் பயனும் உடைய நல்வாழ்க்கையாம். நிலைபேறுடைமையாவது

பிரிவுத் துன்பமோ, பிணக்கோ இல்லாத இன்பம் மாறாத வாழ்க்கையாம்.

அமிழ்தம் உண்டு இறவாப் பதம் பெற்ற இமையவர்களும் அச்சோலையில் வந்து தங்கி இருக்க விரும்புவர் என்றது முருகன். அக்குன்றினை விரும்பித் தங்கியிருக்கும் சிறப்புப் பற்றியே யாம். இத்தகைய சோலை இவர்கள் வாழ்க்கையைத் தொடங்க இவர்க்கு எளிதிற் கிடைத்தது. இவர்கள் தம் அற வாழ்க்கையின் பயனாய் வானவரும் விரும்பும் உயர்பதவியை, அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினை, எய்துவர் என்பதனைக் குறிக்கும். இதனால்

‘வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்’

என்பதனை ஆசிரியர் வற்புறுத்தி விளக்கியிருக்கின்றார்.

‘ஏமஞ்சால் அருவினை நிகழ்ந்த வண்ணம் நீநனியுணரச் செப்பல் ஆன்றிசின்’ என்று தொடங்கிய தோழியின் நோக்கம், தலைவி நெஞ்சமர்ந்ததனைக் கூறியதால் முடிவு பெறுகின்றது. எனினும் இப்பாடல் கூறும் கதை முடிவு பெறவில்லை.

அவ்வழி, உதிர்ந்தென ஈண்டி விளைந்த தேறல் அயின்ற தோகை தளருஞ் சாரல் தாஅய்ப் பொலிந்த குன்றுகெழு நாடன் உள்ளினன் கொண்டு பலருண மிச்சில் உண்டலும் புரைவது என்றாங்கு தேற்றி வாழ்த்தி, தொழுது, குடித்தலின் நெஞ்சமர்ந்து, பகல் கழிப்பி.

எல்லை செல்ல, ஏழ்ஊர்பு இறைஞ்சிப்
பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய,
மான்கணம் மரம்முதல் தெவிட்ட, ஆன்கணம்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர, (215 –218)

(பகற் காலத்தின்) அளவு முடியவும், ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரினை ஊர்ந்து சென்று, தாழ்ந்து, பல கதிர்களையுடைய ஞாயிறு மேற்கு மலையைச் சேர்ந்து மறையவும், மான் கூட்டங்கள் மரங்களின் அடிகளிலே வந்து தங்கி அசைபோடவும், பசுக் கூட்டங்கள் தம் கன்றுகளை அழைக்கும் ஓலம் உடையனவாய்க் கொட்டில்களைப் பொலிவுடையனவாக ஆக்க உள்ளே செல்லவும்,

ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்
ஓங்குஇரும் பெண்ணை அகமடல் அகவ,
பாம்புமணி உமிழ, பல்வயின் கோவலர்
ஆம்பல்அம் தீம்குழல் தெள்விளி பயிற்ற. (219 – 222)

ஒலிக்கின்ற கொம்புகளின் ஒலியை ஒத்த குரலினையுடைய வளைந்த வாய்களைக் கொண்ட அன்றில் பறவைகள் உயர்ந்து பெரியதாக வளர்ந்த பனைமரத்தின் மடலில் தங்கித் தம் துணையைக் கூப்பிடவும், பாம்புகள் (மேய்தலுக்கு வெளிச்சம் கிடைத்தற்கு) மாணிக்கங்களை உமிழவும், பல திசைகளினின்றும், ஊர்னை நோக்கி வரும் இடையர் ஆம்பல் பண்ணைத் தம் இனிய குழல்களில் தெளிந்த ஒலியுடையதாக ஊதவும்,

வயிர்: கொம்பு; ஏங்குதல்: ஒலித்தல். இரவில் பாம்புகள் தம் மாணிக்கங்களை உமிழ்ந்து அவற்றின் வெளிச்சத்தில் மேயும் என்பதனை அகநானூற்றின் 72-ஆம் பாடல் குறிப்பிடுகின்றது.

ஆம்பல் ஆய் இதழ் கூம்புவிட, வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
அந்தி அந்தணர் அயர, கானவர்
விண்தோய் பணவை மிசைஞெகிழி பொத்த, (223 – 226)

ஆம்பல் மலர்கள் தம் அழகிய இதழ்களின் பிணிப்பை விட்டு மலரவும், வளப்பம் மிக்க மனைகளிலே பூத்தொழில் நிறைந்த வளைகளை யணிந்த மங்கையர் விளக்குகளின் திரி நுனிகளைக் கொளுத்தி அந்திக் காலக் கடன்களை அந்தணர்களுடன் கழிக்கவும், இரவில் புனம் காக்கும் கானவன் ஆகாயத்தைப் படிந்துள்ளன போல் விளங்கும் பரண்களின் மீது நெருப்பை மூட்டவும்,

அந்தி அயர்தல் மகளிர், அந்தணர் என்ற இருவராலும் கடனென உணர்ந்து செய்யப்படும் தொழில். எனவே இவற்றைச் சேர்த்துக் கூறினார். மகளிர் 'இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது' (நெடுநல்: 42, 43) மாலை அயர்வர் எனத் தெரிகின்றது. கானவன் தொழில் இதனோடு மாறுபட்டது. எனவே அது ஞெகிழி பொத்தல்' எனப் பிரித்துக் கூறப்பட்டது.

வானம் மாமலை வாய்சூழ்பு கறுப்ப கானம்
கல் என்று இரட்டப் புள்இனம் ஒலிப்ப,
சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்ப
துனைஇய மாலை துன்னுதல் காணூஉ, (227 – 230)

மேகம் பெரிய மலையை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டு இருளைக் கவிக்கவும், பறவைக் கூட்டங்கள் இரவின் வரவைத் தம் இனங்களுக்கு அறிவிக்கக் காடு முழுவதும் கல் என்று ஒலிக்கும்படிக் கத்தவும், சினம் மிகுதியும் உடைய வேந்தன் பகைமேல் விரைந்து சென்று வளைத்துக் கொள்ளுதலை ஒப்ப விரைவினையுடைய மழைக்காலம் (உலகினை வளைத்துக் கொள்ள) நெருங்குதலைக் கண்டு,

கதிரவன் ஆட்சி செய்து வந்த உலகினை மாலை எனும் குறும்பு பற்றிக் கொள்ளும் விவரத்தை சிலப்பதிகாரத்தின் அந்தி மாலை சிறப்பு செய்காதையால் அறியலாம்.

இம்மாலை உலகை வளைத்துக் கொள்ளுவதற்கு முன்னர், தலைவன் அவர்களை அழைத்து வந்து ஊரின் எல்லையில் இருந்த ஊருணிக் கரையில் நிறுத்தித் தேற்றிப் பிரிந்து சென்றான். இக்கதையின் தொடக்கத்தில் தாம் பூப் பறித்ததனை விவரமாகக் கூறியவள், இங்குக் கதை முடிவில் மாலை வருணனையை விவரமாகக் கூறியிருக்கின்றாள்.

'நேர்இறை முன்கை பற்றி, நுமர்தர
நாடுஅறி நன்மணம் அயர்கம் சில்நாள்;
கலங்கல் ஓம்புமின், இலங்குஇழை யீர்!' என
ஈர நன்மொழி தீரக் கூறி
துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்;... (231 – 237)

'பொருத்தமான விரற் சந்துகளை யுடைய முன் கையினைப் பற்றி, நும் சுற்றத்தார் என்கையில் தர, உலகறியும் நம் திருமணத்தை இன்னும் சில நாட்களில் நடத்திக் கொள்வேன்; அதுவரை மனக்கலக்கம் கொள்ளாதீர், விளங்கும் வளைகளை யுடையவர்களே' என்று அன்பு நிறைந்த சொற்களை எங்கள் ஐயம் தீரக் கூறி, பசுவினைப் புணர்ந்த எருதினைப் போல எங்களைப் பிரிய மனம் இல்லாதவனாய் எங்களுடனேயே வந்து, எப்பொழுதும் ஓய்வு சிறிதும் இல்லாமல் முழவோசை நிறைந்திருக்கின்ற நம் பழமையான ஊரின் வாயிலிலே உள்ள கரைக்கண் எங்களைக் கொண்டு விட்டுச் சென்றான்.

களவொழுக்கம் நெடுங்காலம் நிகழ வேண்டும் என முன்னர்க் குறிப்பாய் வேண்டிக் கொண்டவன், அவர்கள் அயராது ஏற்க, சில நாட்கள் சென்று உலகறிய மணஞ் செய்து கொள்வதாக உறுதி கூறுகின்றான். அவன்

இரண்டாம் முறையாக, (மணஞ்செய்து கொள்வதனை வற்புறுத்திக்) கூறியதனை வியந்த தோழி அவன் சொற்களை 'ஈரநன்மொழி' என்றாள்.

முன்னர் 'ஆகாண் விடையின் அணிபெற வந்தான்' எனக் குறிப்பிட்ட வாறே, இங்கு 'துணைபுணர் ஏற்றினைப் போலவே தொடர்ந்து வந்தான் என்றாள்.

துஞ்சா முழவின் மூதூர்: எப்பொழுதும் கேளிக்கை நீங்குதலையறியாத ஊர் என்பதாம். இதனால் இவர்கள் களவொழுக்கமும் இன்பம் நிறைந்ததாக இருக்கும் என அவர்கள் தம் மனத்தால் கருதியதனைப் புலப்படுத்தினாள்.

எல்லை செல்ல, மறைய, தெவிட்ட, புலம்பு, அகல, உமிழ, பயிற்ற, கூம்புவிட, அயர, பொத்த, கறுப்ப, இரட்ட ஒலிப்ப, மாலை துன்னுதல் காணூஉ, முன்கை பற்றித்தர மணம் அயர்கம், கலங்கல் ஓம்புமின் என நன்மொழி கூறி நிறுத்துப் பெயர்ந்தனன்.

அதற்கொண்டு,
அன்றை அன்ன விருப்போடு என்றும்
இரவு வரல் மாலைய னே;வருதொறும்
காவலர் கடுகினும், கதநாய் குரைப்பினும்,
நீதுயில் எழினும், நிலவுவெளிப் படினும்,
வேய்புரை மென்தோள் இன்துயில் என்றும்
பெறாஅன் பெயரினும், முனியல் உறாஅன்;
இளமையின் இகந்தன்றும் இலனே; வளமையில்
தன்நிலை தீர்ந்தன்றும் இலனே; (237 –245)

அதுமுதல், அம்முதல் நாளிற் போலவே, என்றும் இரவுக் காலங்களில் வரும் இயல்புடையவன். அவன் அவ்வாறு வரும் வேளைகளில், காவலர் நெருங்கி வந்தாலும், சினம் மிக்க நாய் குரைத்தாலும், நீ விழித்துக் கொண்டாலும், நிலவு தோன்றி விட்டாலும், மூங்கிலை ஒத்த (இவளுடைய)

மெல்லிய தோள்களில் துயிலும் இன்பத்தை எப்பொழுதும் பெறாமலேயே திரும்பிப் போக நேர்ந்தாலும், சிறிதும் சினத்தலைப் பொருந்தாதவன்; அவன்தான், தன் இளமைப் பருவத்தினைக் கடந்தவன் அல்லன்; செல்வச் செருக்கு காரணமாகத் தன் உயர்ந்த குணங்களின்றும் நீங்குவதனையும் செய்தறியாதவன்.

'வேற்று வரவு மாற்றியது' என்ற துறையுடையதாகக் கபிலர் குறுந்தொகையில் இயற்றியுள்ள பாடல் ஒன்றினில் (385) தலைவன் என்றும் ஒரே தன்மையான அன்புடையவன் என்பதனை 'அன்றை அன்ன நட்பினன்' என்று குறிப்பிட்டிருக்கும் ஒப்புமையைக் கருதுக.

அகநானூற்றின் 122-ஆம் பாடலில் இரவுக் குறியில் ஏற்படும் முட்டுப்பாடுகளைப் பரணர் விவரித்திருப்ப தனைப் பார்க்க. இங்கு அவற்றுள் சிலவே கூறப்பட்டிருக் கின்றன.

இம்முட்டுப்பாடுகள் காரணமாகத் தலைவன் என்றும் தலைவியைக் காணாமலேயே திரும்ப நேருகின்றது. எனினும் அவன் இதனால் சினம் கொள்ளுவதில்லை. அவனுடைய பெருந்தன்மையை வலியுறுத்தவே தோழி இதனை விவரித்திருக்கின்றாள்.

சினங் கொள்ளுவதில்லை என்ற குறிப்பினால் அவனை வயது மிக்கவனாகச் செவிலி கருதிவிடப் போகிறாளே என்று எண்ணியே தோழி அவன் இளமையின் இகந்தவன் அல்லன் என்கின்றாள். இளமை, செல்வம் என்ற இரண்டும் நிரம்பப் பெற்றும் அவன் நல்லொழுக்க முடையவனாகவே இருக்கின்றான். இதனால் இவனைக் காட்டிலும் சிறந்த தலைவனைக் காண முடியாது என்று செவிலி கருதிக் கொள்ளும் முறையில் தோழி அவன் குணச் சிறப்பைப் பாராட்டிக் கூறுகின்றாள். முன்னர்

அருவினை என்று அவள் குறிப்பிட்டதனை விளக்கிக் காட்டுகின்றாள் என்றும் கூறலாம்.

கொன்ஊர்,
மாய வரவின் இயல்பு நினைஇதேற்றி
நீர்எறி மலரின் சாஅய் இதழ் சோரா
ஈரிய கலுழும்இவள் பெருமதர் மழைக்கண்; (245 – 248)

வறுமையை உடைய இவ்வூரின் கண் அவனுடைய பொய் வரவின் தன்மையை எண்ணி, அதன் பயனின்மையைத் துணிந்து, மழையால் தாக்கப்பட்ட மலர்கள் சோர்வுற்று இதழ்கள் மடங்கி நீரை யுகுத்தல் போல இவளுடைய பெரிய ஒளியினையுடைய குளிர்ச்சியை ஊட்டும் கண்கள், இமைகள் கவிழ்ந்து ஈரமுடையனவாய்க் கலங்கியிருக்கும்.

கொன்: பயனின்மை, வறுமை. இதனை இவர் இப்பொருளிலேயே 'கொன்னாளன் நாட்டு மலை' என்ற கலியுள் (குறிஞ்சி: 6) ஆள்வதனைக் காண்க. முன்னர் இடையீடுகளை எதிர்பாராத நிலையில் 'துஞ்சா முழவின் மூதூராய்' இருந்தது; இப்பொழுது இடையீடுகள் நிறைந்து இன்பத்தைச் சிறிதும் பயவாமையின் 'கொன் ஊராய்' மாறிவிட்டது.

மாயவரவு: பொய் வருகை. அவன் வரவு உண்மையே! அதன் பயனின்மையை அவ்வரவின் மேல் ஏற்றி அதனை 'மாய வரவு' என்றாள்.

கண்ணீர் பெருகிக் கொண்டே இருத்தலின் 'ஈரிய கலுழும்' என்றாள். மழைக்கண் என்றது தலைவியின் பழைய நிலை. இன்றும் அது மழைக்கண்ணாக- கணணீரைச் சொரியும் கண்ணாக- இருக்கின்றது. இமை தீய்ப்பன்ன கண்ணீர் சொரியும் கண்களை ஈரிய என்றது, அது இடையறாது ஒழுகுவதனைக் குறிப்பிடுவதற்கு மட்டுமேயாம்.

ஆகத்து அரிப்பனி உரைப்ப நாளும்
வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய்
நினைத்தொறும் கலுழுமால் இவளே; (249 –251)

மார்பினிடத்தே இடைவிட்டுத் தெறித்து விழும் கண்ணீர்த் துளிகள் தேய்த்து வருத்தவும், என்றும் (இரவுக் குறியில் வருபவனுக்கு நேரக்கூடிய ஏதங்களை) நினைக்கும் தொறும் வலையில் அகப்பட்ட மயிலினைப் போல் இவள் அழுவாள்.

'நலஞ் செலச்சாஅய்': அவள் நலம் முற்றிலும் தொலைந்து விட்டமையை உணர்த்துகின்றது. அரிப்ப: இடைப்பட்டு விழும் நீர்த்துளிகள். நினைக்குந்தோறும் விழுவன. மேல் கலிழ்ந்தது அவன் வந்த காலத்தும், அதன் அணிமையிலும், அவன் வரவின் பயனின்மையைக் குறித்து அழுதது. இங்குக் குறிப்பிடப் பெறுவது, அவன் வரும் வழியில் உள்ள ஏதங்களை எண்ணிக் கொள்ளும் வேளைகளில் நிகழ்வது.

தலைவி ஒருத்தியே தலைவன் வரும் வழியின் ஏதங்களை எண்ணிக் கலங்குபவள். தோழி, செவிலி போன்றோர் கலங்குவது தலைவியின் நிலையைக் குறித்தேயாகும்.

கங்குல்,
அளைச்செறி உழுவையும், ஆளியும், உளியமும்,
புழற்கோட்டு ஆமான் புகல்வியும், களிறும்,
வலியின் தப்பும் வன்கண் வெஞ்சினத்து
உருமும், சூரும் இரைதேர் அரவமும்,
ஒடுங்குஇரும் குட்டத்து அருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையும், இடங்கரும், கராமும்,
நூழிலும், இழுக்கும், ஊழ்அடி முட்டமும்,
பழுவும், பாந்தளும், உளப்படப் பிறவும்,

வழுவின் வழாஅ விழுமம் அவர்
குழுமலை விடர்அகம் உடையவால் எனவே. (252 – 261)

இரவில் தாம் சேரும் இடங்களிலே பதுங்கியிருக்கும் புலியும், யாளியும், கரடியும், உள்ளே துளையுள்ள கொம்புகளையுடைய காட்டு மான்களின் ஆண்களும், யானையும், தன் வல்லமையால் பிறரைக் கொல்லும் இரக்கமின்மையையும் சினத்தையும் பண்புகளாகப் பெற்ற இடியேறும், கொடுந் தெய்வமும், இரைதேடித் திரியும் பாம்பும், குகைபோன்ற இருண்ட ஆழத்திடத்தே அகப்படுவோர் தப்புதற்கரிய சுழிகளிலே போக்கு வரவு செய்யும் வளைந்த கால்களை யுடைய முதலையும், இடங்கரும், கராமும், வழிப்பறி செய்வார் வருவோரைக் கொன்று குவிக்கும் இடங்களும், வழுக்குப் பாறையும், வழி இருப்பதனைப் போலக் காட்டி முட்டில் முடியும் இடங்களும், பிசாசும், பெரும் பாம்பும், இவை போல அகப்பட்டோரைத் தப்பவிடாமல் துன்பப்படுத்தும் பிறவற்றையும் தலைவருடைய குன்றுகள் நிறைந்த மலையின் பிளவிடங்கள் உடையனவாய் இருக்கும் என்று (இவள் கலுழும்)

முதலை, இடங்கர், கராம் இவை மூன்றும் முதலையினத்தின் வகைகள். இவைகளுள் இரண்டு வகைகள் கங்கையாற்றினும் மூன்றாம் வகை தென்னாட்டிலும் இருக்கின்றன என அறிந்தோர் கூறுகின்றனர்.

# வெண்பா

நின்குற்றம் இல்லை; நிரைதொடியும் பண்புடையள்;
என்குற்றம் யானும் உணர்கலேன்–பொன்குற்(று)

அருவிகொழிக்கும் அணிமலை நாடன்
தெரியுங்கால் தீய(து) இலன்.

பொன்குற்று அருவிகொழிக்கும் நாடன் என்றது அவன் செல்வப் பெருக்கைக் கருதியது. 'மலைநாடன்' என்றமையால் ஒத்த குலத்தினன் என்று தெரிகின்றது. 'தீயது இலன்' என்றதனால் பிறர் ஆராய்ந்து உணரும் வகையில் செயலாற்றும் வல்லமையுடையவன் எனக் குறிப்பிட்டு அவன் அறிவை வியந்து கூறினாளாம். 'அணிமலை நாடன்' என்றது அவன் அழகும் உடையவன் என்பதனை ஏற்றுக் கொண்டு கூறியது.

இது செவிலி கூற்று; தான் மகிழ்ச்சியுடன் தலைவியின் செயலை ஏற்றக்கொண்டதனைப் போலவே, தாயும் சுற்றத்தாரும் தந்தையும் எற்றுக்கொள்வர் என்று செவிலி தோழிக்குக் கூறுகின்றாள். செல்வம் உடைமையால் தாயும், குலம் ஒத்திருப்பதனால் சுற்றத்தாரும், அறிவுடையவனாய் இருப்பதானால் தந்தையும் ஒப்புவர் என்று அவள் கருதினாள் என்பதனை உணர்க.

ஆற்றல்சால் கேள்வி அறம்பொரு ளின்பத்தை
போற்றிப் புனைந்த பொருளிற்றே—தேற்ற
மறையோர் மணமெட்டின் ஐந்தாம் மணத்திற்
குறையாக் குறிஞ்சிக் குணம்.

இவ்வெண்பா கபிலருடைய குறிஞ்சிப்பாட்டு தொல்காப்பியர் வகுத்தமைத்துள்ள களவுப் புணர்ச்சியின் இலக்கணத்தைப் பெரிதும் போற்றி நடப்பது எனக் குறிப்பிடுகின்றது.

இவர் களவுக் கட்டம் கந்தருவ மணத்தைப் போன்றது என்று கூற வந்தாரேனும், அதனைக் குறிஞ்சி என்ற பெயரால் குறிப்பிட்டிருப்பது, இப்பாடலுக்குச் சிறப்புத் தரவேண்டும் என்றேயாம்! கபிலர் இப்பாடலில் அறம்,

பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பொருள்களையும் களவு மணம் பயக்கும் எனக்காட்டியிருக்கின்றார். எனினும் இவ்வெண்பாவினை இயற்றிய புலவர், இப்பாடல் முதல் மூன்று பொருள்களை விளக்குவதனை நோக்கமாகக் கொண்டுள்ளது என்று கூறியிருப்பது தொல்காப்பியக் களவியலின் தலைமைச் சூத்திரத்துக்கு இது இலக்கியமாய்த் திகழ்கின்றது என்பதனை வற்புறுத்தவேயாம்! வீட்டினையும் பயக்கும் ஆற்றலுடைய களவின் பண்பினைக் கபிலரே முதன் முதலாகத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கின்றார் எனலாம். தொல்காப்பியர் இலக்கிய மரபுகளைத் தொகுத்துரைக்கும் எல்லையோடு நிற்கவும், கபிலர் வாழ்வியலையும் இணைத்துத் தம்பாடலைப் புனைந்திருப்பது உணர்ந்து மகிழத் தக்கது. □

# பொருளடக்கம்

# அறிமுகவுரை

திரு மார்க்கபந்து தம்முடைய பெயருக்கு ஏற்பத் தமிழாராய்ச்சித் துறைக்கு உற்ற உறவினராய் உதவுகின்றார். மேல்நாட்டு ஆராய்ச்சி வழியே சிலப்பதிகாரத்தின் திறன் ஆய்ந்து தெளிய ஒரு நூல் வெளியிட்டார். இப்போது குறிஞ்சிக்கலியினை உணர்ந்து துய்க்க இந்தப் புத்தம் புத்துரையைத் தமிழுலகிற்கு உதவுகின்றார். 'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்பது பழம்பாடல்; அந்தப் பாடலினும் பழையது கலி. ஆதலின் அதனை உணர்ந்துகொள்ள உரையின் உதவி வேண்டும்.

நச்சினார்க்கினியர் உரை இருந்தாலும் அதுதானும் இந்த இருபதாம் நூற்றாண்டுக்குப் பழந் தமிழாகவே அச்சுறுத்துகிறது; அது ஓடும்போதே ஓதுகின்ற உரையுமன்று. நச்சினார்க்கினியர் வடமொழியிற்போலத் தமிழிலும் நினைத்தபடி கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுதல் கூடும் என்ற கொள்கையை விடாப்பிடியாகக் கொண்டு உரை எழுதி உள்ளார். வடமொழியில் பெயரைப் போலப் பெயரடைகளும் ஒரே வடிவில் மாறி மாறி வருவதால் எந்தப் பெயர் எந்தப் பெயரோடு சேரும் என்பதனை அறிய வழியுண்டு. தமிழில் அவ்வாறு இல்லை என்பதனை நச்சினார்க்கினியர் தம்முள்ளத்து உறுதியால் காணாது போயினார். அவரவ்வளவு அறிவில்லாத என் போன்றாருக்கு அவருடைய உரை விளங்குவது அரிதாகிறது.

ஆதலின் எளியதோர் உரை இன்றியமையாது வேண்டும். இந்தக் குறையைத் தீர்க்க நண்பர் தமது உரையை வெளியிடுகின்றார். அவரோடு ஒத்துச் செல்லாதவருக்கும் இந்த உரை வழித்துணையாம் என்பதில் ஐயம் இல்லை.

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்

# முகவுரை

நண்பர்கள் பலர் உலாவி வருகையில், ஒருவர் தடுக்கி விழுந்துவிட்டால், உடனே எல்லோரும் கை தட்டிச் சிரிப்பதைக் காண்கிறோம்; விழுந்தவர், 'ஐயோ! அப்பா!' என்று எழுப்பும் கூக்குரல் நம்மை மேலும் சிரிக்கவே தூண்டும். அவர் எழுந்தபின், அவருடைய கால் விரலினின்றும் இரத்தம் கசிவதைக் கண்ட பின்னரே நம் சிரிப்பு அடங்கும். 'அடி பலமோ?' என்று கேட்போம்.

இந்நிகழ்ச்சி இரவில், இருளில் நிகழ்ந்திருந்தால், விழுந்தவர், 'ஐயோ!' என்று அலறத் தொடங்கு முன்னரே, நாம் 'என்ன நடந்தது? அடிபட்டு விட்டதா?' என்று பரிவுடன் கேட்போம். விளக்கு வெளிச்சத்தில் விழுந்தவர்க்கு அடிபடவில்லை என்று அறிந்த பின்புகூட நம்மில் ஒருவரும் சிரிப்பதில்லை.

இரக்கப்பட வேண்டிய இடத்தில் சிரித்தோம்; சிரிக்கக்கூடிய இடத்தில் பரிவு காட்டினோம். இப்பொருத்தக் குறைவான பண்பு நம் எல்லோருக்கும் உண்டு. இது மனித இயற்கை. வாழ்க்கையை இன்பமாகக் கழிக்க வேண்டும் என்ற அடிப்படைப் பண்பே பிறர் விழுகையில் நம்மைச் சிரிக்க வைக்கிறது; ஏன், துன்பம் தருவனவேனும், நமக்கே நேரும் சில இன்னல்களைக் கண்டு நாமே சிரிப்பதும் உண்டு; பிறர் பெரிதும் துன்பப்படுவதைக் கண்டு, அவர்களுக்கு நேர்ந்த இன்னல்

இவ்வாறு துன்பப்படத்தக்கது அன்று என நாம் கருதுவதும் இப்பண்பு காரணமாகவே.

நண்பர் தடுக்கி விழுந்த காட்சி நம் கண்களை மட்டுமே கவர்ந்தது. அவர் கால் விரலில் கசிந்த இரத்தம் நம் கண்களை ஊடுருவிக் கொண்டு, கருத்தைத் தாக்கும் வல்லமை பெற்றிருந்தது; ஆகவேதான் அது நம்மை இளக வைத்தது. இருளில் விழுந்தவரைப் பார்க்கமுடியவில்லை. அவர் அலறல் நம் கருத்தை நேரடியாகச் சென்று தாக்கிற்று. ஆகவே தான், அவர் நிலைக்குத் தேவைக்கதிகமான பரிவு காட்டினோம்.

குறிஞ்சிக்கலியின் சித்திரங்கள் அனைத்தும், தடுக்கி விழுந்தவர் தோற்றத்தைப் போல, நம் கண்களைக் கவர்வனவாகவே இருக்கின்றன. ஆனால் பாலைக் கலியின் செய்திகளோ, இருளில் நேர்ந்த இன்னலைப்போல, நம் கருத்தை நேரடியாகச் சென்று பற்றுகின்றன. கலிகளுள் பாலைக்கலியே சிறந்தது எனப் பண்டிதர்களுள் பெரும்பாலோர் கருதுவது ஏன் என்று இப்பொழுது விளங்குகின்றது; அவர்கள் கூற்றில் உண்மை இல்லை என்பதும் துலங்குகின்றது.

கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையில், குறிஞ்சிப் பாடல்களைப் பெரும்பாலோர் படித்து மகிழும்படி செய்யவேண்டும் என்ற நோக்கமே இவ்வுரை எழக் காரணம்; அவர்கள் ஆர்வத்துக்கு அணைபோடாமல் இருக்கவே, பழைய உரைகளிற்போல, இதனுள் இலக்கணக் குறிப்புகளும், கடா விடைகளும், எடுத்துக்காட்டுகளும் இடம் பெறாமல் இருக்கின்றன.

‘இன்னும் சற்று எளிய நடையில் இவ்விளக்கம் இயன்றிருந்தால், இன்னும் பலர் கபிலர் கவிதைகளின் மாட்சியை அறிந்து மகிழ்ந்திருக்கலாமே.’ –இந்நோக்கம் என்றும், எவராலும் நிறைவேற்ற முடியாததாகவே நின்றுவிடும் என்பதே என் எண்ணம்.

எளிமைக்கு எல்லை கற்பிக்க யாரால் கூடும்?

'குறிஞ்சிக்கலியை முதன் முதலாகப் படிக்க முற்படுபவர்களை ஊக்க எழுந்த விளக்கம் நமக்கு ஏன்?' என்று பண்டிதர்கள் இதனைப் புறக்கணிக்காதிருக்க வேண்டுகிறேன். அவர்கள் சிந்தனையைத் தூண்டும் பகுதிகளுக்கு இவ்விளக்கத்தில் காணப்படும், தலைவன் நாட்டு மலைக் காட்சிகள் அவன் ஒழுக்கத்தைக் குறிப்பனவாகவே கொள்ளப்படவேண்டும் என்ற குறிக்கோளுடன், உள்ளுறை உவமைகள் அனைத்தும் இவ்விளக்கத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. நான் உள்ளுறை கூறாத இடங்களில் நச்சினார்க்கினியர் கூறியவை எனக்கு உடன்பாடே.

சங்க காலத்தில் அரசர்களாலும், தம்மைப் போன்ற கவிஞர்களாலும் பெரிதும் பாராட்டப்பட்டவர் கபிலர் இவரே, நமக்கு இப்பொழுது கிடைக்கும் சங்கச் செய்யுள்களுள், அதிகமானவற்றை இயற்றியவர். பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க் கணக்கு என்ற மூன்று தொகுதிகளிலும் இவர் இயற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. ஆகவே, சங்க நூல்களைப் பயிலத் தொடங்குபவர்களை, அவற்றுள் சிறந்த ஒன்றை 'முதலில் அறிந்து கொள்ளச் செய்வதே நல்லது என்ற நோக்கத்துடன், குறிஞ்சிக்கலிக்கு உரை இயற்றினேன்.

சங்க செய்யுட்களை நாம் இப்பொழுது படித்து அறிந்துகொள்ள நமக்குப் பேருதவி அளிப்பவை பழைய உரையாசிரியர்களுடைய உரைகளே. அவை அச்செய்யுட்களைப் போலவே நம்மால் மதிக்கப்பட வேண்டியவை.

நச்சினார்க்கினியர் உரையை ஓதாதவர், குறிஞ்சிக் கலியை நன்றாகப் படித்துவிட்டோம் என்று கூறிக் கொள்ள முடியாதவர்களாகவே நின்று விடுவர்.

பழைய உரையாசியரோடு நான் பல இடங்களில் வேறுபட்டிருக்கிறேன். சில இடங்களில் மாறுபட்டிருக்கி றேன். இவ்விடங்களைச் சுட்டி விளக்காமல் சென்றது, இவ்விளக்கத்துக்கு ஒரு குறையே என என் அரிய நண்பர் திரு.வரதாச்சாரியார் கருதுகிறார். இவ்விளக்கம் எளிய நடையில் அமையக் காரணமாய் இருந்தவர் அவரே. உள்ளுறை உவமங்களைப் பற்றி ஒன்றும் கூறாமற் சென்ற என்னைத் தூண்டி, அவற்றையும் விளக்கவேண்டும் என்று வற்புறுத்தியவரும் அவரே. சுருங்கக் கூறின் கூட்டாசிரியராகக் கருதவேண்டிய அளவுக்கு இவ்விளக்கம் அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறது. அவரே இவ்வாறு கூறிய போதிலும், நச்சினார்க்கினியரோடு நான் எங்கு, ஏன் மாறுபட்டிருக்கிறேன் என்பவற்றை இவ்விளக்கத்தைப் படிப்பவரையே கண்டு கொள்ளும்படி விட்டுவிட்டதே இந்நூலுக்கு ஒரு அணி என்று நான் கருதினேன். இவ்வாறு நாங்கள் இருவரும் நேர்மாறான நோக்கமுடையவர்களாய் இருந்திராமல் இருந்தால், இந்நூலை 'விளக்கம்'. எனக்கூற நான் முன்வந்திருக்க மாட்டேன். அவருக்கு என் மனமார்ந்த நன்றி.

முன்னுரையில் குறிபபிடப்பட்டுள்ள எட்டு கலிகளை மட்டுமே விளக்க முன் வந்த என்னை, குறிஞ்சிக்கலி முழுவதற்கும் உரைகாணத் தூண்டியும், பெரியார் ஒருவரை என் உரையைத் தமிழருருக்கு அறிமுகப்படுத்த இசையச் செய்தும் உதவிய என் கல்லூரித் தோழர் அ.ச.ஞானசம்பந்தன்* அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன.

தமிழன்பர்க்கு இவ் வுரையை அறிமுகப் படுத்த அன்போடு இசைந்து அறிமுக உரை அளித்து உதவிய பன்மொழிப் புலவர் உயர்திரு தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் அவர்கட்கு என் வணக்கம் உரித்து.

---

★ பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்

இச்சிறுநூலை, என் ஆசிரியரும், தமிழ் வடமொழி என்ற இரண்டினும் பெரும் பயிற்சி உடையவரும், நூல்களைத் தாம் துய்ப்பதோடு பிறரைத் துய்க்கவைப்பதில் பேராற்றல் படைத்தவரும், நயங்காணும் நோக்கை என்னிடத்தே தூண்டியவரும் ஆகிய மகாமகோபாத்தியாய பண்டித மணி கதிரேசன் செட்டியாரவர்களுக்கு குருகாணிக்கை யாக அளிக்க விரும்புகின்றேன்.*

மார்க்கபந்து சர்மா

வேலூர்
15.08.51

---

★ நூலாசிரியர் முதன் முதலாகத் தம் பொறுப்பில் வெளியிட்ட போது அமைந்த முகவுரை இது.

# முன்னுரை

## கவிதை

நமக்குத் தெரியாமல் அப்பூங்காவில் என்ன இருக்கக்கூடும்? இன்றா, நேற்றா, பத்து வருடங்களாக, அந்திக்காலத்தை அதனுள்ளேயே கழித்திருக்கிறோமே! அகன்ற மணற்பரப்பு; அதனைச் சுற்றி அமைந்த கம்பிவேலி; இங்கொன்றும், அங்கொன்றுமாய் இருந்த சில செடிகள். இவையே அக்காலத்தில் 'பூங்கா' என்ற அழகிய பெயருடன் விளங்கின. இப்பொழுதோ? பாதைகள் என்ன! அவற்றின் இருபக்கங்களிலும் அடர்ந்து இருக்கும் செடி வரிசைகள் என்ன! மணல் பரப்பு எங்கே? அது அடர்ந்த பசும்புல் தரையாக அல்லவோ மாறி விட்டது! நாம் வளர்ச்சிபெற்றதைப்போல, அப்பூங்காவும் வளர்ச்சி அடைந்திருக்கிறது.

நமக்கும் அதற்கும் உள்ள தொடர்பு எவ்வளவு நெருங்கியது! இருந்தும், அதன் படங்களைப் பார்க்கும்பொழுது, பத்து வருங்களாக நாம் பழகிப் பயின்ற பூங்கர்வா இது என்ற எண்ணம் தோன்றுகிறதே! நாம் நேரில் பழகியும் அறியாத பல புதுமைகளை இப்படங்கள் எவ்வாறு விளக்குகின்றன? இவை, நம்மையே, நம் பார்வையில் ஐயங்கொள்ளச் செய்கின்றனவே! நாம் படத்தில் காணும் இத்தோற்றங்கள் மாயமா? அல்லது நமக்கு மயக்கமா? உண்மையே என்றால், நாம் இத்தனை நாட்களாக அப்பூங்காவை நன்கு பார்க்கவில்லையா?

முதன் முதலில் அப்பூங்காவின் புகைப்படத்தைப் பார்ப்போம். அதோ தெரிகிறது அப்பெரியமரம்; பூங்காவின் பக்கத்தில், அதன் எல்லைக்கு வெளியே, ஓங்கி வளர்ந்திருக்கும் அம்முதியமரம், நம் தகப்பனாருக்கும் மூத்ததாய் இருக்கவேண்டும்! அந்த மிக உயர்ந்த மரமும் படத்தில் முற்றிலும் விழுந்திருக்கிறது. வற்றி உலர்ந்த கிளைகளைக் கொண்ட அம்மரத்தின் தோற்றம், பூங்காவின் பசுமையை மிகுத்துக் காட்டுவதாக நாம் பலமுறை கருதி இருக்கிறோம். இப்பொழுதோ! பட்டை கழன்ற அப்பழைய மரத்தையும், செழித்து வளர்ந்திருக்கும் சின்னஞ் சிறு செடிகளையும் ஒரு சேரக்காணும் நம்மை, 'இளமை நில்லாது; முதுமை தவிர்க்க முடியாதது' என்ற எண்ணம் பற்றுகின்றதே! போதும்! வரப்போகும் முதுமையை இப்பொழுதே எண்ணி ஏங்குவானேன்? அப்புகைப்படத்தின் அருகே உள்ளே பூங்காவின் சித்திரத்தில் கருத்தைச் செலுத்துவோம்.

அட! இது என்ன புதுமை! நம் உடல் பூரிப்பானேன்? மனத்தில் மகிழ்ச்சி பொங்கக் காரணமென்ன? அந்தக் கிழட்டு மரத்தின் கிளைகளில் தளிர்கள் காணப்படுகின்றனவே! அது, புன்முறுவல் பூத்தபடி, 'தம்பிகளே! என்னைக் கிழவன் என்று கூறிக் கேலி செய்கிறீர்களே, உங்களில் யாருக்காவது என் அனுபவ முதிர்ச்சி இருக்குமா? இளமையும், அழகும் எத்தனை நாட்கள் இருக்கும்? இவை மட்டும் போதுமா? அறிவுடையவனன்றோ, அவனியில் இருக்கப் பிறந்தவன்! பல்லாண்டுகளாக நான் பெற்ற அனுபவம் எப்படி என் வற்றி உலர்ந்த கிளைகளையும் உரமுடையனவாகச் செய்திருக்கின்றது பாருங்கள்! அக்கிளைகளில் உள்ள தளிர்களை உங்களுக்குத் தெரியுமா? என் மகிழ்ச்சியின் மிகுதியே—உடலின் பூரிப்பே—அவை!' என்று சின்னஞ்சிறு

செடிகளைப் பார்த்துப் பேசுவதுபோல், இச்சித்திரம் நம்மைச் சிந்திக்கத் தூண்டுகின்றதே!

படங்களைப் பார்த்தது போதும். மீண்டும் அப்பூங்காவையே நேரில் சென்று காண்போம். நேற்றுமாலை இருந்த தோற்றத்துக்கும், அதனுடைய இன்றைய தோற்றத்துக்கும் என்ன வேற்றுமை இருக்கிறது? இன்று காற்று பலமாய் வீசுகிறது; சின்னஞ் சிறு செடிகள் பேயாட்டம் ஆடுகின்றன; கிழட்டு மரம் கம்பீரமாக அசைந்து கொடுக்கிறது அது ஏன் இப்பொழுது நம்மோடு பேசவில்லை? அதன் புகைப்படத் தோற்றம் நம்மை வருங்காலத்தைப்பற்றி நினைக்கச் செய்தது. சித்திரத்தில் அதன் தோற்றம், ஆம், 'கவலைப் படாதே! முதுமை தான் இன்பம் பயக்கும்; இளமையை இன்பமாய்க் கழிப்பதாக நினைப்பது உன் அறியாமையே என்பதனை முதுமை எய்தியதும் அறிவாய். இவ்வறிவே உன்னைத் துன்பங்கலவாத இன்பத்தை அடையச் செய்யும். ஆகவே முதுமையை முக மலர்ச்சியுடன் ஏற்றுக்கொள்! என்று நம்மை நினைக்கச் செய்தது. ஒரு வற்றல் மரம்—இறந்த மரம்—நம்மை வாழ்க்கையில் பற்றுகொள்ளத் தூண்டும் விந்தையே விந்தை!

நாம் நேரில் காணும் அப்பூங்காவின் தோற்றம் ஓர் இயற்கைக் காட்சி; இப் பௌதிக உலக நியதிகளுக்கு உட்பட்ட ஓர் உண்மைத் தோற்றம். அப் பூங்காவின் புகைப்படத் தோற்றம் ஒரு கவிதை; அதன் சித்திரத் தோற்றம் ஓர் உயர்ந்த கவிதை. பின்னவை இரண்டினும் நாம் கண்ட தோற்றங்கள் மன உலகத் தோற்றங்கள். ஆகவேதான், அவை நம் கண்களைக் கவர்ந்ததனோடு, அவற்றை ஊடுருவிச் சென்று, நம் மனத்தையும் பற்றின; வாழ்க்கையின் தன்மையை-உண்மையை—நமக்கு உணர்த்தின.

இவற்றால் இப்பௌதிக உலகின் உண்மைகளை-இயற்கைக் காட்சிகளை அல்லது நிகழ்ச்சிகளை-மன உலகத் தோற்றங்களாக மாற்றி அமைப்பதே கவிதை என அறிகிறோம். இதனோடு நின்றுவிடவில்லை. நாம் இதுவரை பார்த்தவை கவிதையின் இன்னொரு பண்பையும் நமக்குப் புலப்படுத்துகின்றன. இவ்வுலக உண்மைகள் இருப்பவற்றை மட்டும், ஏன், ஓரளவு இருந்தவைகளையுங்கூட— ஆவது, இறப்பு—நிகழ்வுகளை மட்டுமே—நமக்கு உணர்த்துகின்றன; கவிதையோ இறப்பு நிகழ்வுகளைச் சித்தரிக்கும் வாயிலாய், நமக்கு எதிர்வையும் உணர்த்துகின்றது என்பதே அது. இச்சிறப்புப்பற்றியே உலகப் பேரறிஞர்கள் கவிதைக்கு உயர்வு தந்திருக்கின்றனர்.



நாம் பார்த்த புகைப்படம். நம்மால் ஒரே பார்வையில் கண்டு அளவிட முடியாத—நம் கண் கொள்ளாத—அப் பெரிய பூங்காவை முற்றிலும் காட்டியதோடு, அதன் அருகே இருந்த உயர்ந்த மரத்தையும் நம் கண் கொண்டதாகச் செய்துவிட்டது. இக்காரணம் பற்றியே அது நம் மனத்தைத் தொட்டது; ஓர் உண்மையை நம்மை உணரவைத்தது. பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தில், பாண்டவர் ஆண்ட நாட்டின் வருணனையில் ஒரு பகுதியைப் பார்ப்போம்.

நீல முடி தரித்த பல மலை சேர் நாடு
    நீரமுத மெனப் பாய்ந்து நிரம்பு நாடு,
கோல முறு பயன் மரங்கள் செறிந்து வாழும்
    குளிர் காவுஞ் சோலைகளுங் குலவு நாடு,
ஞால மெலாம் பசியின்றிக் காத்தல் வல்ல
    நன் செய்யும் புன் செய்யும் நலமிக் கோங்கப்
பா லடையு நறு நெய்யுந் தேனு முண்டு
    பண்ணவர் போல் மக்க ளெல்லாம் பயிலு நாடு.

(1–17;116)

இங்கு நம்மால் ஒரே பார்வையில் கண்டறிந்து கொள்ள முடியாத மலை, காடு, சோலை,வயல், நகரம் முதலிய பல பொருள்களைக் கவிஞர் நம்மை ஒருசேரக் காணச் செய்கிறார். அப் பெரும் பரப்பின் இச் சிறு சித்திரம், அந் நாட்டின் எல்லையற்ற பெருமையையும் ஈடில்லாத சிறப்பையும் நமக்கு உணர்த்துகின்றது.

'இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்தமிழ்ப் பாவை செய்ததவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற்(கு) ஓங்கிய
திருமா மணி' எனத் தெய்வமுற்(று) உரைப்பப்
'பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டி' என்(று)
அரும்பெறல் கணவன் பெரும்புறத் தொடுங்கி
விருந்தின் மூரல் அரும்பினள் நிற்ப..........'

[2-12-(47-53)]

சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரியின் பகுதி இது. காளி கோயிலில் இருந்தவருள் எவரேனும், கோவலன் முதுகுப் புறத்தே ஒளிந்துகொண்டு, புன்முறுவல் பூத்த கண்ணகியைப் பார்த்திருக்கக் கூடுமா? பார்ப்பவர் கண்களுக்குப் புலப்படாதது ஒன்றனையும், இங்குக் கவிஞர் தம் சித்திரத்தில் புலப்படுத்தியிருக்கிறார். நெடுநல்வாடை யின் பனிக்கால வருணனையைப் படிக்கும்பொழுது மலை, வயல், பசு, கோவலர், மரத்தின் மீதிருந்த குரங்குகள், மரத்தினின்றும் கீழே விழுந்து விட்ட பறவைகள், நீரோடை, அதன் கரையில் மீனைப் பார்த்துக் கொண்டிருந்த நாரை, வீட்டின் கூட்டில் அடைபட்டிருந்த கோழி இவை அனைத்தையும் ஒருங்கே காண்கிறோம். பல்வேறு இடங்களில் இருந்த உயிர்களையும் அவை குளிரால் பட்ட வருத்தத்தையும் நக்கீரர் தம் சித்திரத்தில் சேரத் தீட்டியிருப்பதால், வாடையின் கொடுமையை நாம் நன்கு உணர முடிகிறது.

இவை மட்டுமா? நாம் 'இவையும் பயன் படுமா?' என்று இகழ்ந்து புறக்கணித்துவிடும் பொருள்களையும், கவிஞர் தம் சித்திரங்களில் சேர்த்துக் கொள்ளுவர். அவற்றைக் கொண்டே அரிய பொருள்களைப் புலப்படுத்தி விடுவர். இவ்வாறு உள்ளதை உள்ளவாறும், நிகழ்ந்ததை நிகழ்ந்தபடியும் சித்தரிப்பதில் என்ன புதுமை இருக்கும்? இவற்றைக் கவிதை என்றும்', இச்சித்திரங்களைத் தீட்டுபவரைக் கவிஞர் என்றும் எப்படிக் கூறலாம்? உள்ளவற்றை அவை உள்ளபடியேயும், நிகழ்ந்தவற்றை அவை நிகழ்ந்தபடியேயும், சித்தரிப்பனவேனும், நமக்குப் புலனாகாத பொருள்களைப் புலப்படுத்தும் பெருமை காரணமாகவும், நம்மைச் சிந்திக்கத் தூண்டும் பெற்றியுடையவை ஆகையாலும், உண்மையின் சித்திரங்களும் கவிதைகளே!



வற்றல் மரம் ஒன்று தளிர்த்திருந்த விந்தையைப் பூங்காவின் சித்திரத்தில் கண்டோமல்லவா? இயற்கையில் இருக்க முடியாத இப் புதுமையை, அச்சித்திரத்தைத் தீட்டியவனுடைய கற்பனை தோற்றுவித்தது. நான் முகனைப் போலவே படைக்கும் தொழிலில் கை வந்தவன் கவிஞன். இவனுடைய ஆற்றலைக் கண்டு, அந் நான்முகனும் நாணவேண்டும்.

பத்து தலைகளைப் பெற்றிருந்த இராவணனையும், மனித உடலின் மீது சிங்கத்தின் தலையைக் கொண்டிருந்த நரசிம்மமூர்த்தியையும் நான்முகன் படைத்திருக்கக் கூடுமா? எழுதவொண்ணாத எழிலையுடைய மங்கையின் மேனியும், காமனையும் வென்ற காளையின் கவினும் கவிஞனுக்கே கடமைப்பட்டிருக்கின்றன. இவை மட்டுமா? நான்முகன் நினைத்தறியாப் பொருள்களையும் கவிஞன் படைத்துவிடுகின்றான். இரண்டறக் கலந்த பாலையும்,

நீரையும் பிரித்துவிடும் பேராற்றல் பெற்ற அன்னப் பறவையைப் படைத்தவன் கவிஞனே!

போதும்! போதும்! இயற்கையில் இல்லாத, இருக்க முடியாத—உண்மைக்கு மாறான—பொருள்களையும், காரணங்காட்ட முடியாத நிகழ்ச்சிகளையும் சித்தரிப் பதைக் கற்பனை என்றும், அச்சித்திரங்களைத் தீட்டிய வனைக் கவிஞன் என்றும் எப்படிக் கூறலாம்? உண்மையைத் திரித்துக் கூறும் ஒருவனை மக்களின் பகைவன் என்று பழிப்பதை விட்டு, பொய்யைப் புனைபவனைக் கவிஞன் எனப் போற்றுவதா?

அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தவன், திடீரென்று அலறிப்புடைத்துக் கொண்டு 'ஐயோ! பாம்பு கடித்து விட்டதே!' என்று ஆரவாரஞ் செய்கிறானே, அவனை நல்ல பாம்பா கடித்துவிட்டது? இல்லை, கனவில், அவனே கற்பித்துக் கொண்டதே அது. விழித்துக் கொண்ட பின்பும், நாம் சிரிப்பதையும் பொருட்படுத்தாமல், மிரள மிரளப் பார்த்துக் கொண்டிருக்கிறானே! நனவு உலகத்துக்கு வந்த பின்பே, தான் கண்டது பொய்த்தோற்றம் எனத்தெளிந்து, அவன் ஓரளவு ஆறுதல் அடைகிறான். அப்பொழுதுங்கூட, 'அப்பா! கனவானாலும் எப்படிப் பயமுறுத்திவிட்டது!' என்று ஏங்குகின்றான். பல நாட்கள் கழிந்த பின்பும், முன்னர்க் கனவில் கண்ட நிகழ்ச்சியை நினைத்துக் கொண்ட மாத்திரத்தில், அவனையும் அறியாமல், அவன் உடல் நடுங்குகின்றது; நெஞ்சம் துணுக்குறுகின்றது.

இவனுடைய கனவு அனுபவத்தைப் பொய் என்று கூறிப் புறக்கணித்து விடலாமா? பொய்யே என்றால், அவன் அஞ்சியதேன்? பல நாட்கள் சென்ற பின்னும், அவ்வச்சம் அவனைவிட்டு அகலாதிருக்கக் காரணமென்ன? கற்பனைப் பாம்பு உண்மையான அச்சத்தைத் தந்ததோடு, அதனை நெடுநாட்கள் நிலைத்திருக்கவும் செய்துவிட்டது!

விழித்துக் கொள்ளாதவரை, கனவில் நிகழ்வனவற்றை நாம் உண்மையாகவே ஏற்றுக்கொள்ளுகிறோம்; நனவு வந்தபின்னரே, அது மாயத்தோற்றமாகத் தெளியப் படுகின்றது. ஒருமுறை கனவு பொய் என்று தெரிந்து கொண்ட நாம், மீண்டும் கனவு காணும்போது, இது பொய்த்தோற்றம்; இதனை உண்மையாக ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று அதனைப் புறக்கணிப்பதில்லை. ஆகவே, நனவில் நிகழ்ச்சிகள் எவ்வாறு உண்மையாகத் தோன்றுகின்றனவோ, அவ்வாறே கனவிலும் அக்காலத்து நிகழும் நிகழ்ச்சிகள் உண்மையாகவே தோன்றுகின்றன.

நனவு நிலைக்கு வந்த பின்னர், கனவில் கண்டவை பொய் என்ற எண்ணம் தோன்றுவதைப் போலவே, கனவிலும் சில நனவுக்கால நிகழ்ச்சிகள் நம்பத்தகாதன போலத் தோன்றுகின்றன. இதனால் நனவு அனுபவத்தைக் கொண்டு கனவைப் பொய் என்று புறக்கணித்தால், கனவு அனுபவத்தைக் கொண்டு நனவைப் பொய் என்று சொல்லவேண்டியது நேர்மையானது என்று ஏற்படுகிறது. இவ்வாறு வெவ்வேறு நியதிகளுக்குக் கட்டுப்பட்ட இருவேறு அனுபவங்களை, ஒன்றை ஆதாரமாகக் கொண்டு மற்றொன்றைப் புறக்கணிப்பதினும், இரண்டனையும் நம்முடைய உண்மையான அனுபவங்களாகக் கருதுவதே சிறந்தது.

நாம் இப்பௌதிக உலக நியதிகளுக்கு உட்பட்டு வாழ்கின்றோமாயினும், உண்மையில் மன உலகிலேயே இயங்குகிறோம். இம்மனஉலகே கனவுக்காட்சிகளைத் தோற்றுவிக்கின்றது. உலகத்துப் பொருள்கள் நமக்கு இன்பதுன்பங்களைத் தோற்றுவிப்பனபோல் தோன்று கின்றனவேயொழிய, நாம் இன்பதுன்பங்களைத் துய்ப்பது பொருள்களைப் பற்றியதன்று; இல்லையேல், ஒருவர் அமுது வேறொருவருக்கு எவ்வாறு நஞ்சாய் இருக்கக்கூடும்?

இவற்றால் நம் அனுபவங்களுக்கு நம்முடைய மனமே நிலைக்களன் என்றும், உலகப் பொருள்கள் அனுபவங்களைத் தோற்றுவிக்கும் கருவிகளாய் இருக்குமே ஒழிய அவற்றுக்குப் பொருள்களாகிய கருவிகள் இல்லாமலும்கூட நமக்கு அனுபவங்கள் ஏற்படக்கூடும் என்றும் உணருகிறோம். இவற்றை நன்குணர்ந்தே, கவிஞர், உலகப் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் தீட்டும் பொழுதும், அவற்றை மனஉலகத் தோற்றங்களாக மாற்றிச் சித்தரிக்கின்றனர். ஆகவே கவிதை மனித மனத்தை ஆதாரமாகக் கொண்டு அமைகிறது; அது படிப்பவர் மனத்தைப் பிணைக்கும் பண்பு சிறந்ததாய் இருப்பதில் வியப்பு என்ன?



பூங்காவின் படங்கள் எவ்வளவு நன்றாய் இருந்த போதிலும், இவை அப்பூங்காவுக்கு இணையாகுமா? மெல்லிய காற்றில் பச்சிளஞ் செடிகள் அசைந்து ஆடும் அழகைப் படங்கள் எவ்வாறு புலப்படுத்தும்? சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தின் படிகளுக்குப் பக்கத்தில், சிற்பி ஓடும் யானை ஒன்றின் உருவத்தைச் செதுக்கி இருக்கிறான். இச்சிற்பம் ஓடுகின்ற யானையின் தோற்றத்தைத் தெளிவாய்க் காட்டுகிறது; யானையின் ஓட்டத்தை இதனைக்கொண்டு அறிந்துகொள்ளக் கூடுமா? சிற்பக் கலையைப் போலவே, ஓவியமும் பொருள்களின் நிலையை-இருப்பை-மட்டுமே புலப்படுத்தும்; அவற்றின் அசைவை-இயக்கத்தை-புலப்படுத்தும் ஆற்றல் இக்கலைகளுக்கு இல்லை.

சொல்லால் இயன்ற சித்திரங்கள்-கவிதைகள்-பேராற்றல் படைத்தவை. சிற்பத்தையும், ஓவியத்தையும் போலப் பொருள்களின் நிலையை-இருப்பைப்-புலப்படுத்துவதோடு நின்று விடாமல், கவிதை அவற்றின்

அசைவையும்-இயக்கத்தையும்-சித்தரிக்கும் வல்லமை வாய்ந்தது. இச்சிறப்புப் பற்றியே கவிதை, கலைகளுள் உயர்ந்ததாய்க் கருதப்படுகிறது.

சிற்பக்கலையும், ஓவியக்கலையும் பொருள்களின் நிலைச் சித்திரங்களைத் தீட்டும் எனக் கண்டோம். இவற்றைப் போலவே பொருள்களின் நிலைச் சித்திரங்களைத் தீட்டுவதோடு நின்றுவிடும் கவிதையை வர்ணனைக் கவிதை (Descriptive Poetry) என்று கூறலாம். நிலைத்திருக்கும். ஒரு பொருளின் உண்மைத் தோற்றத்தையோ, அல்லது அசையும் பொருள் ஒன்றின் இயக்கத்தில் குறிப்பிட்ட ஒரு நிலையையோ இவை தமக்குப் பொருளாகக் கொள்ளுகின்றன. இத்தகைய கவிதைப் பொருள்களின் இருப்புக்கு நிலைக் களனாய் அமையும் இடம் (Space) என்ற ஒரு மூலப் பொருளையே தமக்கு ஆதாரமாக அமைத்துக் கொள்ளுகின்றன.

நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு போன்றவை வர்ணனைக் கவிதையின் வகையைச் சேர்ந்தவை. இவை ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் திரட்டிக் கூறுகின்றன. காலக் கழிவால் தோன்றும் மாறுதல்களைப் பற்றிய கவலை இவைகளுக்கு இல்லை; ஏனெனில் இயற்கையிலேயே இவை காலப்போக்கை பொருளாகக் கருதாமல் இருக்கும் பண்புடையவை. சிலப்பதிகார ஊர்காண்காதையில், மதுரை நகர மாண்புகள் வர்ணிக்கப்படுகின்றனவேனும், கவிஞர் காலமாறுதலுக்கு ஏற்ப மதுரை நகரத்தோற்றம் வேறுபடுவதை விவரிக்கிறார். ஆகையால், இப்பகுதி வர்ணனைக் கவிதை என்ற பகுப்பில் அடங்காது.

வர்ணனைக் கவிதைகளுக்கு நிலைக்களனாய் இருக்கும் இடம் எல்லாக் கவிதைகளுக்கும் ஆதாரமாக அமையும் பொதுவான மூலப்பொருள். இதனோடு காலம் (Time)

என்ற மூலப்பொருளையும் ஆதாரமாகக் கொண்டு, இவ்விரண்டன் சேர்க்கை காரணமாக நிகழும் நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கும் கவிதையை விவரணக் கவிதை (Narrative Poetry) எனக் கூறலாம். இன்ன இடத்தில் இவை, இவை நிகழ்ந்தன என்று விவரிக்கும் முறையில் அமைந்தவை விவரணக்கவிதை.

சங்கச் செய்யுட்களில் புறப்பாடல்கள் அனைத்தும் விவரணக் கவிதை என்ற பகுப்பில் அடங்கும். இவைகளில் விவரிக்கப்படும் நிகழ்ச்சி, நிகழ்ந்த காலம். அது நிகழும் இடத்தைப் போலவே இன்றியமையாதது ஆகின்றது. சீவகசிந்தாமணி என்ற பெருங் காப்பியமும் இப்பாகு பாட்டில் அடங்கும். சீவகன் வாழ்க்கையில் நேர்ந்தவை அனைத்தையும், அவை நிகழ்ந்த முறையில் விவரிக்கிறது இக்காப்பியம்.

இடம், காலம் என்ற இரு மூலப்பொருள்களின் சேர்க்கையே இவ்வுலகம் அனைத்தும் என்பது ஆராய்ச்சி வல்லாரின் முடிந்த முடிவு. இவ்வுலகத்தின் இருப்புக்கு இடமும், அதன் இயக்கத்துக்குக் காலமும் ஆதாரங்களாய் அமைகின்றன. மேனாட்டார் சித்தாந்தப்படி, இவ்வுலகையும் அதன் இயக்கத்தையும் விளக்குவதற்கு, இரண்டு மூலப்பொருள்கள் போதும்; ஆனால் இவைகளோடு மூன்றாவதொரு மூலப்பொருளும் இன்றியமையாதது என நம்மவர் கூறுகின்றனர்.

இடமும் காலமும் இன்றியமையாத அடிப்படை மூலப்பொருள்கள் என எவ்வாறு தெரிந்துகொண்டோம்? இவ்வுலகத்தையும் அதன்கண் நிகழும் நிகழ்ச்சிகளையும் அலசி ஆராய்ந்து 'இவை அனைத்திற்கும் நிலைக்களன் எது? இவை இவ்வாறு நிகழக் காரணமென்ன?' எனச் சிந்தித்து, அதன் பயனாய் இரு மூலப் பொருள்களின் இருப்பைக் கண்டுகொண்டோம். இவற்றைக் கண்டு

கொள்ள உதவிய ஆராய்ச்சியைத் தூண்டியது எது? பொருள்களை இருக்கும்முறையில் ஏற்றுக்கொள்ளாமல், இவை எப்படித் தோன்றின? இவற்றின் மூலம் எது? என்று சிந்திக்கத்தூண்டிய-மனத்தின்-பண்பே அது! எப் பொருளுக்கும் காரணம் காணும் பண்பு மனித மனத்தின் இயற்கை, இதனையே நம்மவர் மூன்றாவதான மூலப்பொருளாகக் கொள்ளுகின்றனர். இதற்கு அவர்கள் **ஏது (causation)** எனப் பெயரிடுகின்றனர். பௌதிக நிலையில் உள்ள—மக்கள் இல்லாத—உலகுக்கு இரு மூலப்பொருள்கள் போதும். மக்களும் தோன்றி, அவர்கள் சிந்திக்கும் சக்தியையும் பெற்றிருப்பதால், 'ஏது' என்ற மூன்றாம் மூலப்பொருளும் இன்றிமையாததாகிறது. இது மனித மனத்தை அடிப்படையாகக் கொண்டது. இடத்தையும், காலத்தையும் போலப். பொருள்களின் தோற்றத்துக்கும், மாறுபாட்டுக்கும் இது இன்றியமையாத தன்று. ஆகவே தான் மேனாட்டார் இதனை ஒரு மூலப் பொருளாகக் கொள்ளவில்லை. பொருள்களின் தோற்ற ஒடுக்கங்களுக்கு ஆதாரமாய் அமையாவிடினும், அத்தோற்ற ஒடுக்கங்களை அறிவதற்கு ஆதாரமாய் இருப்பதால், 'ஏது'வை நம்மவர் அடிப்படை மூலப்பொருளாக மதிக்கின்றனர். இல்லையேல், இவ்வுலகையும், இதன் இயக்கத்தையும், இவை இடம், காலம் என்ற இரு மூலப் பொருள்களின் சேர்க்கையால் தோன்றும் தோற்றமே என்று எவர் அறிவார்?

மனித மனத்தின் இப்பண்பை உணர்ந்தே, கவிஞர் தாம் கண்ட பொருள்களையும், நிகழ்ச்சிகளையும் மன உலகத்தோற்றங்களாக மாற்றிச் சித்தரிக்கின்றனர். காலக்கழிவால் நிகழும் பல நிகழ்ச்சிகளிடையே உள்ள தொடர்பைப் புலப்படுத்தி, இவையனைத்தும் ஒரு பிண்டத்தின் பகுதிகளே என உணரவைக்கும் கவிதைகளை—தொடர்புள்ள பல நிகழ்ச்சிகளையும்,

அவற்றின் விளைவையும் சித்திரிக்கும் கவிதைகளை— நாடகக் கவிதை (Dramatic Poetry) எனக் கூறலாம். சங்கச் செய்யுட்களில் அகப்பாடல்கள் இப்பிரிவில் அடங்கும்.

நாடகக் கவிதையைப் போலவே, விவரணக் கவிதையும், நிகழ்ச்சிகளைச் சித்தரிப்பதுதானே! இவற்றுள் வேற்றுமை கற்பிப்பானேன்? நிகழ்ச்சிகளைச் சித்தரித்தல் இரண்டுக்கும் பொதுப் பண்பே; ஆனால் அவற்றைச் சித்தரிக்கும் முறையில் இவை மாறுபடுகின்றன. 'அவன் என்னை மணந்துகொண்ட பொழுது, ஓடுகின்ற நீரை எதிர்த்து வரும் மீனைப் பார்த்துக் கொண்டிருந்த நாரை தவிர, வேறு எவரும் அங்கு இல்லை; இப்பொழுது அவன் தன் செயலை, மறுத்து விட்டானானால், என் கதி என்ன?' இச் செய்தியை நாடகக் கவிதை எப்படிச் சித்தரிக்கிறது என்று பார்ப்போம்!

யாரும் இல்லை! தானே கள்வன்!<br>
தானது பொய்ப்பின், யானெவன் செய்கோ!<br>
ஒழுகு நீராரல் பார்க்கும்<br>
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே. (குறுச25)

நிகழ்ந்ததை நமக்குக் கூறுமுன், இது நிகழ்ச்சியின் சூழ் நிலையை விவரிக்கிறது; உடனே விளைவை வற்புறுத்துகிறது; பின்னரே, இறுதியாக, நிகழ்ச்சியைக் கூறுகிறது. இவ்வாறு, செய்வதால் அப் பெண்ணின் மனநிலையையும், கலக்கத்தையும், வருத்தத்தின் எல்லையையும் நம்மை உணரவைக்கிறது. விவரணக் கவிதையோ, இவற்றை நமக்குத் தெரிவிக்கும்.

நாடகக் கவிதையில் பல்வேறு வகைகளைக் காணலாம். ஒரு முடிவை வற்புறுத்தச் சில நிகழ்ச்சிகளை விவரிப்பவை; பல நிகழ்ச்சிகளைக் கோவைப்படுத்தி ஒரு கதையாகக் கூறுபவை; கற்பனை நிகழ்ச்சிகளைப் படைத்துக் கூறுபவை;

என, இவை ஒவ்வொன்றும் தனித்தனி அமைப்பிலக் கணத்தைத் தழுவி நடக்கும். இவை அனைத்திற்கும் இலக்கியங்கள் குறிஞ்சிக்கலியில் காணப்படுகின்றன.

அகப் பாடல்கள் பெரும்பாலும் நிகழ்ந்த ஒன்றை ஒருவர் மற்றொருவருக்குக் கூறுவதுபோல் அமைந்திருக்கின்றன. இவற்றுள் சில, நிகழ்ச்சிகளை நமக்குத் தெரிவிக்கும் முறையைக் கையாளாமல், அவற்றின் நிகழ்வை நம்மையே நேரில் காணச் செய்கின்றன. இதனால் இவை நாடகங்களின் அமைப்பு முறையைத் தழுவி இயன்ற சின்னஞ் சிறு நாடகங்களாகவே ஆகி விடுகின்றன. இத்தகைய எட்டு சிறு நாடகங்கள் குறிஞ்சிக்கலியில் இருக்கின்றன.

## 1. எல்லா இஃதொத்தன் *(25)*

'ஏடி! இவன் ஒருத்தன்; என் சம்மதியைப் பெறாதவன்; இவன் இன்னலைப் பார்! செல்வச் செழிப்புடன் நல்வாழ்வு வாழ்ந்த பெரியோர், தம் பொருள் தொலைந்து வறுமையின் வலையில் பட்டு, உய்யும் வகை அறியாது, மயங்கி, தம் துன்பத்தைத் தவிர்க்கும் குணமும், செல்வமும் உடைய தம்முடைய சுற்றத்தாரிடம் சென்று, அவருக்குத் தம் நிலையைக் கூறத் தொடங்கி, வாய்வாராமல் திகைத்து நிற்பவரைப் போல, இவனும் தன் குறையைக் கூற என்னைப் பல முறை வந்து பார்த்தான்; அவன் நிலைக்கு இரங்கி, அவன் தன் குறை கூற ஊக்கப்படுத்துவதற்காக அவனை நான் பார்க்கும் பொழுது நாணத்தால் தலை குனிவான்.' வாயிலாய தோழி, தன்னிடம் குறை நயந்த தலைவனைத் தலைவிக்கு இவ்வாறு அறிமுகப்படுத்திக் கொண்டிருந்தாள்.

'யான் நோக்கின் மெல்ல இறைஞ்சும் தலை' என்று தோழி கூறி முடித்ததும், தலைவன் அவர்களை நெருங்கி வந்து வணங்கி நின்றதும் ஒன்றாய் நிகழ்ந்தன. தலைவனும் தலைவியும் ஒருவரோடொருவர் பழகிப் பயின்றவர்களே. இவர்கள் நட்பைப் பற்றித் தலைவன் கூறித் தோழி தெரிந்துகொண்டிருந்தாள். ஆனால் தலைவி இதுவரை தோழிக்கு ஒன்றும் சொல்லவில்லை ஆகையால், தலைவனோடு அவளுக்குள்ள தொடர்பை அறியாதவள் போலவே, தோழி நடந்து கொள்ளவேண்டும்; தான் அதனை அறிந்துகொண்ட போதிலும் தலைவி அதற்காகக் கூசி நாணவேண்டா என்று அவள் உணரும்படியும் செய்யவேண்டும்; தலைவன் விருப்பப்படி தலைவி களவு ஒழுக்கத்தை நீட்டிக்க விரும்புகிறாளா-பிறர் அறியாமல் அவனைக் கூடி மகிழும் நிலையைத் தொடர்ந்து நடக்கச் செய்வாளா-என்று அறிந்து கொள்ளவும் வேண்டும். இவ் அனைத்தையும் சாதிக்கும் நோக்கத்துடன், தோழி தலைவனோடு சூழ்ந்து, தலைவியை அவன் விருப்பத்துக்கு இணங்க வைக்க, ஒரு திட்டம் தயாரித்தாள். அதன் முதல் பகுதியை இப்பொழுது நாம் கண்டோம்.

அறிமுக உரையில் தோழி, தலைவனைப் பொருள் சுருங்கிய சான்றோருக்கு ஒப்பிட்டதன் வாயிலாய், அவன் நல்லொழுக்கமுடையவன் என்றும், அவன் நிலை இரங்கத் தக்கது என்றும், அவனுக்கு உதவி புரிவது நல்ல செயல் என்றும் வற்புறுத்தி விட்டாள். அவன் தன் குறை இன்னது என்று இது வரையில் கூறவில்லை என்று குறிப்பிட்டதன் வாயிலாய், அவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பைத் தான் அறிந்து கொள்ளவில்லை என்றும் குறிப்பாகச் சொல்லி விட்டாள். இவ்வாறு தான் தெரிந்து கொண்டிருந்த ஒன்றைத் தோழி மறைத்துக் கூறியது, தலைவி தன்னெதிரில் அவனைச் சந்திக்க நாணக் கூடாது

என்றே. அவள் திட்டப்படியே, அதன் முதற் பகுதி, நன்கு நடந்து முடிந்தது.

தொடக்க நிகழ்ச்சி, தான் சூழ்ந்தபடியே நடந்து முடிந்ததைக் கண்ட தோழி, தன் திட்டத்தின் மற்றைப் பகுதிகளும் இவ்வாறே நன்கு நடந்தேறும் என்று மகிழ்ந்தாள். தன்னோடும் நன்றாகப் பழகிய தலைவன், தோழியின் எதிரில் தன்னை முதன் முதலாகச் சந்திக்க வந்தபொழுது, தன் நிலையை உணர்ந்து, தங்கள் நட்பு முறையைச் சிறிதும் வெளிக்காட்டாமல், இதற்கு முன் கண்டறியாத பெண்ணைக் காண வந்தவனைப் போலவே நடந்து கொண்டது, தலைவிக்கு மகிழ்ச்சி தந்தது. இவ்வாறு இருவரையும் உவப்பித்ததை உணர்ந்த தலைவன், தன் நோக்கம் முற்றுப் பெறும் என்று மகிழ்ச்சியடைந்தான்.

இந்நிலையில், 'ஏடா! நீ எதனையோ கேட்க வந்தவனைப் போல் உன் முகக்குறிப்பால் உணர்த்துகிறாய், உன்னைவிட்டு நீங்காத உன் நிழலைப் போலவே, நீ என்னைத் தொடர்ந்து திரிகிறாய்; நீ பெறாதது என்ன என்று வாய் விட்டுச் சொல்! எனக் கூறித் தோழி தலைவனைப் பேசத் தூண்டினாள். பேச நாணுபவனை, 'நீ கேட்டதைப் பெறுவாய்; ஆகவே தயங்காமல் சொல்லு' என்று தோழி ஊக்கம் அளித்த பின், தலைவன் பேசத் தொடங்கினான். அப்பொழுதும் அவன் தயக்கம் முற்றிலும் நீங்கவில்லை. இவ்வாறு தலைவன் நடித்தது, தோழியின் சூழ்ச்சியைத் தலைவி தெரிந்து கொள்ளாமல் இருக்கவே.

'சொன்னால் மறுக்காமல் கொடுப்பாளா?' என்று தலைவியைச் சுட்டி, ஆனால் தோழியை நோக்கித் தலைவன் கேட்டவுடன், காலந் தாழ்த்தாமல், கலக்கம் இல்லாமல் தலைவி, 'சினம் காட்டாமல், கேட்டவர்களுக்குக் கொடுக்காமல் வாழ்வதினும் சாகவும் செய்யலாம்' என்று விடை அளித்தாள். தோழியின் சூழ்ச்சியின் இரண்டாம் பகுதியும் நன்கு நிறைவேறிற்று.

சும்மா இருப்பவரைத் தம்மோடு கலந்து கொள்ளச் செய்யவும், விருப்பமில்லாதவரையும் வலுச் சண்டைக்கு வற்புறுத்தி இழுக்கவும் மக்கள் கையாளும் பண்பட்ட முறையையே தோழியும், தலைவனும் கையாண்டனர். அவர்கள் எதிர்பார்த்திருந்தபடியே, பார்வையாளர் நிலையில் இருந்த தலைவி வெடுக்கென்று விடை தந்தது, இருவரையும் 'வெற்றி கொண்டோம்' என்று தொடர்ந்து பேசிய முறையில் வெளிப்படையாய்க் காணப்படுகிறது.

'இவள் தகப்பன் மிக்க விருப்பத்துடன் கேட்டவர் எல்லோருக்கும் அவர்கள் கேட்டவற்றைக் கொடுக்கும் குணமுடையவன் நீ வேண்டுவது எது?' என்று தோழி தலைவனைக் கேட்டாள். கொடுக்க வேண்டியவள் தலைவியே; இருந்தும், அவளுக்காகக் கேட்டதைத் தயங்காமல் தருவதாகத் தோழி வாக்களித்ததும், தலைவியின் தகப்பன் குணத்தைக் கூறி, அவன் கொடுக்கும் விழுப் பொருள்களில் உனக்கு எது வேண்டும் என்று கேட்டதும், தோழி, வெற்றிக் களிப்பில் மயங்கிச் சிந்திக்காமல் பேசியதைத் தெரிவிக்கின்றன.

'பேதையே! பணம் கேட்கும்படியான ஏழ்மை நிலை என்னிடத்தில் இல்லை' அட! வேறு என்ன வேண்டுமாம்! வெற்றி உவகையில் தலைவன் சொன்ன இச் சொற்களைக் கேட்டுத் திகைப்படைந்தவளைப் போல் நடித்தாள் தோழி. தலைவிக்கு இவர்கள் பேச்சின் போக்கு இப்பொழுதுதான் விளங்கிற்று. இவர்கள் தன்னை எதிர்பாராத விதத்தில் தங்கள் விருப்பத்திற்கு இணங்க வைக்கச் சூழ்ச்சி செய்துகொண்டு, அதன்படி தன்னெதிரே நடிக்கிறார்கள் என்று உணர்ந்து கொண்டாள். எதிர்பாராத முறையில் இவர்களைத் தோல்வியடையச் செய்ய வேண்டும் என்ற உறுதி கொண்டாள்.

'மடப்பம் பொருந்திய பார்வையினையுடைய உன் தோழியை எனக்கு அருள் செய்யும்படிக் கேட்கவே விரும்பி வந்தேன்.' இங்கு தலைவன், தலைவியினுடைய மட நோக்கைக் குறிப்பிட்டது, இத்தகைய கள்ளங் கடபமடற்றவள் தன் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளுவாள் என்று தான் நம்பியதை அவளுக்கு அறிவிக்க விரும்பியே. இவ்வாறு தலைவன் கூறி முடித்ததும், தோழி பாம்பை மிதித்தவளைப் போலவே பாசாங்கு செய்து, 'அப்படிப் பட்டவனா நீ!' என்றாள். தனக்குத் 'தலைவன் என்ன கேட்பான்' என்று தெரியாது எனத் தலைவி கருத வேண்டும் என்றே இப்படிச் சொன்னாள். உண்மையில், தலைவன் திடீரென்று தலைவியே தனக்கு வேண்டும் என்று கேட்டதாக இருந்தால், தோழி, 'அப்படிப்பட்டவனா நீ!' என்று சொல்லியதைத் தொடர்ந்து, 'நீ உடனே சென்று விடு; இங்கே நிற்காதே' என்றல்லவா கூறியிருந்திருப்பாள்! அவள் அப்படிச் சொல்லவில்லை; தலைவன் பெருமையைப் புகழ்கிறாள்.

'போரிலே வென்ற யானையைப் போன்றிருக்கும் இவன், தன்னை ஒரு பெண் அருள் செய்து காத்தல் வேண்டும் என்று கேட்கும் நிலை எத்தகையது!' என்று தோழி தலைவியை நோக்கிக் கூறினாள். அவன் பொருட் குறைவு இல்லாதவன் என்று அவன் சொற்களாலேயே அறிந்து கொண்டோம்; அவன் வீரம், பெருமை, அடக்கம் முதலிய நற் குணங்கள் நிறைந்தவன் என்று தோழி சொற்கள் அறிவிக்கின்றன. யானையைப் போன்ற வல்லமையுடையவன், வலிமை காரணமாய்த் தோன்றும் முரட்டுத்தனம் இல்லாதவனாய் இருக்கிறானாம். இல்லையேல், அவன் ஒரு பெண்ணை மதித்து, அவளுக்கு உயர்வு தந்து, அவளைத் தனக்கு அருளுமாறு வேண்டிக் கொள்வானா? பொருள், பெருமை, வலிமை, அறிவு, கோபமின்மை, அடக்கம் முதலிய நற்குணங்கள்

நிறைந்தவனாக தானே வந்து அருளுமாறு கேட்ட பின்னரும், அவனைப் புறக்கணிப்பது அறிவுடைமை யாகுமா? தோழியின் சூழ்த்திறனின் எல்லையை இப்பகுதி விளக்குகிறது.

தலைவி நாணத்தால் பேச முடியாமல் இருப்பாள், அது தங்கள் வெற்றிக்கு அறிகுறியாகும் என்றே தோழியும் தலைவனும் எதிர்பார்த்தனர். ஆனால், தலைவி, தான் முன்னர் இவர்கள் சூழ்ச்சியைத் தகர்த்தெறிய வேண்டும் என்று கொண்ட உறுதிக்கிணங்க, தலைவனைப் பாராமலேயே, தோழியை நோக்கி, 'இவன் நிச்சயமாக நாணம் சிறிதும் இல்லாதவன்' என்று சொல்லிவிட்டாள்.

வெற்றிக் கனவையே கண்டு கொண்டிருந்தவனும், தன் கனவு நனவாவதற்கு நல்ல அறிகுறிகள் காணப்படுவதாகக் கருதி வந்தவனுமாகிய தலைவன், தலைவியின் சொற்களைக் கேட்டுத் திகைப்புற்றான். 'நான் நாண மற்றவன் என்பது உன் உறுதியான கொள்கையானால், இவ்வூரார் பலரும் சிரித்து ஏளனம் செய்யும்படி, ஊர் நடுவே மடலேறுவேன்' என்று கூறி அகன்றான்.

தலைவன் கூறியவை தலைவியை அவனுக்கு அருளுமாறு வற்புறுத்தும் முறையில் அமைந்திருக்கின்றன. தான் மடலேறும்படி நிகழ்ந்தால், அதன் பொறுப்பு முற்றிலும் தலைவியைச் சார்ந்ததே என அவன் தெரிவித்துவிட்டான். மடலேறி இறந்துபடும் 'நிலைக்கு ஒருவனை உட்படச் செய்வது, காதலியின் கல்நெஞ்சைக் காட்டுவதாகுமன்றே! தலைவன் சென்றபின், தோழி மீண்டும் அவனுடைய குறையை ஏற்றுக்கொள்ளும்படியே தலைவியை வற்புறுத்துகிறாள். இதுவரை பலமுறைகள் அவன் தன்னிடம் வந்து சென்றான் என்றும், அக்காலங்களில் தான் மறுத்து உரைத்தவைகளையும் பரிக சித்ததையும் பேசும்பொழுது, தலைவி இருக்கும்

இடங்களிலேயே கண்ணோட்டம் உடையவனாய் இருந்தும் அவன் அவளிடத்துக் கொண்டிருந்த அன்பு மிகுதியைப் புலப்படுத்துவன என்றும் கூறினாள். இவைகளுக்கெல்லாம் மேலாக, நாம் பிறரை ஒன்றை வற்புறுத்திச் செய்யச் சொல்லும்பொழுது, அவர் மதிப்பு தருபவரைச் சுட்டி, அவருக்கும் இவ்வாறு செய்வது இசைவுடையதாய் இருக்கும் எனக்கூறி வற்புறுத்தும் பண்பட்ட முறையையே, தோழியும், 'எந்தை தன் உள்ளம் குறைபடாவாறு' என்று கூறும்பொழுது கடைப்பிடித்ததைக் காண்கிறோம். தோழி மனித மனப்பாங்கை நன்குணர்ந்தவள் என்பதில் ஐயம் என்ன? அவளையும் தோல்வியுறச் செய்த தலைவியின் திறமைதான் அளவிடத் தகுந்ததா?

'இது என்ன! ஒழியாத தொல்லையாகி விட்டதே! 'பிறர்பார்த்தால் என்ன நினைப்பார்கள்! என்ற எண்ணம் சிறிதும் இல்லாமல், கண்ட இடத்தில் நம்மை நோக்கித் தொழத் தலைப்பட்டுவிட்டான்! பழிக்குப் பயந்து, அவனை அகலும்படிக் கைச்சாடை காட்டிப் பணித்தால், 'இவள் ஏன் இப்படி நம்மைப் புறக்கணிக்கிறாள்? நம்மீது சிறிதும் இரக்கமில்லாதவளாய் இருக்கிறாளே!' என்று எண்ணு பவனாய்க் கலங்கிய மனத்துடன், போகாமல் நின்று கொண்டிருப்பான்! இவனிடமிருந்து நம்மை இனிக் காத்துக் கொள்ளுவது இயலாத தொன்றாக ஆகிவிட்டதே!' இவ்வாறு தலைவன் செயல்களையும், அவற்றிற்குக் காரணமான அவன் மன நிலையையும் தோழி தலைவிக்கு விவரித்தாள்.

'ஏடி! இதற்கு என்ன செய்வோம் சொல்!' என்று தலைவி கேட்ட குறிப்பே, 'நீ சொல்லுகிறபடியே நான் கேட்கிறேன்' என்று அவள் தன் சம்மதத்தைத் தெரிவிப்பதுபோல் இருந்தது. இனித் தோழி தயங்குவாளா? என்ன செய்யவேண்டும் என்று தலைவிக்குத் தோழி விவரிக்கத் தொடங்கிவிட்டாள்.

'நீ கவலைப்படாதே! அவனிடம் பலமுறை விருப்பத்தோடு உன்னைக் கொண்டு விட்டவளைப் போலவே நான் நடந்துகொள்ளுவேன். நீ என் தோள்களின் மீது கரும்பும் வில்லும் எழுதத் தொய்யிற் குழம்பு கொண்டுவரச் சென்றவளைப் போல் காட்டிக்கொண்டு, நான் அவனிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். 'என்னடீ! இதுவே இடமாக இருந்துவிட்டாய்!' என்று என்னைக் கூப்பிட வந்தவளைப் போல் நீ அங்கு வா. அவன் உன் அடிகளில் விழுந்து வணங்குவான்; தன் நோயைத் தீர்த்தருளுமாறு வேண்டுவான்.

முதன் முறையாகத் தன்னெதிரில் தலைவனைச் சந்திக்கத் தலைவி நாணுவாள் என்றே, அவளுக்குத் தோழி, பலமுறை அவளை அழைத்துச் சென்றவளைப் போலவே இருப்பதாக உறுதி கூறினாள். தன்னுடன் வர அஞ்சுவாள் என்று எண்ணியே, தான் முன்னால் போய் விடுவதாகக் கூறினாள்; நன்கு பழகியவனானாலும், அவனைத் தோழிக்குத் தெரிந்து சந்திக்க நாணமடைதல் இயற்கையே. ஆகவே தான், தன்னைத் தேடிவந்தவள் அவனைக் கண்டதாக முடியவேண்டும் என்றும் பேசிக்கொண்டிருக்கையில், அவனும் எதிர்பாராமல் தலைவியைச் சந்திக்க நேருமன்றோ! இவ்வாறு இருவரும் எதிர்பாராதவிதமாக ஒருவரை ஒருவர் சந்திப்பது நாணத்தை நீக்க உதவும்.

தோழி கூறியவை தலைவிக்கு உடன்பாடே. அவள் இந்த உதவியைச் செய்யமாட்டாளா என்று தலைவி ஏங்கிக் கொண்டிருந்தாள். இருந்தும், தோழி எதிர்பார்க்கும் அளவுக்கு, தன் நாணத்தைப் போக்கிக் கொள்ள அவளால் முடியவில்லை. 'நீ மறுபடியும் அவனிடம் சென்று என் தோழி உன் துயரத்தைப் போக்க உடன்பட்டாள் என்று சொல்லாமலிருப்பதாக எனக்கு வாக்குக்கொடு' என்று சொல்லி மறைமுகமாய்த் தன் உடன்பாட்டைத் தெரிவித்தாள்.

தலைவியின் நிலையை நன்குணர்ந்த தோழி, அவளுக்கு அளித்த புத்திமதி மிகவும் பாராட்டத்தக்கது. 'நீ நாணுவதை நான் தடுக்கவில்லை. இப்பொழுது என் எதிரில், இப்பேச்சு வளர்ந்ததனால், நீ கால் விரலால் நிலத்தைக் கிறியபடி நிற்கவில்லையா. இப்படியே அவன் எதிரிலும் நடந்துகொள்!' ஏற்கனவே செய்து பழகிய செயலையே, தோழி மீண்டும் செய்யச் சொன்னாளாகையால் தலைவிக்குத் தலைவனைச் சந்திக்க வேண்டும் என்ற அவா மிகுந்ததோடு, நாணத்தை அடக்கிக்கொள்ளும் ஆற்றலும், அதற்கு வேண்டிய மன உறுதியும் ஏற்பட்டன.

இவ்விரண்டு கவிதைகளும் *(25, 27)* அமைப்பு முறையில் ஓரினத்தைச் சேர்ந்தவை. இரண்டிலும் தோழியர் சூழ்ச்சித் திறன் உடையவராய்க் காணப்படுகின்றனர். சூழ்ச்சியின் சித்திரங்களாய்க் காணப்படும் கதைகள் இருபகுதிகளாய் இயங்குவதைக் காணலாம். அவற்றை அடைகாத்தல், குஞ்சுபொரித்தல் என டாக்டர் பிராட்லி அழைக்கிறார். இவ்விரு கவிதைகளிலும் முறையே 'யாழ', 'வந்தை' என்ற அசைச் சொல்லும், மரபுச் சொல்லும், கவிதைகளின் இரு பகுதிகளையும் பிரித்துக் காட்டுகின்றன.

## 2. ஏஎ இஃதொத்தன் *(26)*

'சே! இவனும் ஒரு மனிதன்; நாணமற்றவன்; தன்னிடம் விருப்பமில்லாதவரையும் வலிதிற் பிடித்திழுக்கிறான்!' சினங்கொண்ட ஒரு பெண்ணின் சொற்கள் இவை. தன் வழியே போய்க் கொண்டிருந்த பெண்ணைப் பிடித்திழுத்தால் அவள் சும்மா இருப்பாளா? இவ்வளவோடு அவனை விட்டாளா என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா? இதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவர்கள் பழைய நண்பர்கள்; சில நாட்களாகத்

தலைவன் அவளைக் காணச் செல்லாமல் இருந்து விட்டான். அவள் அவனிடத்துக் கோபம் கொண்டிருந் தாள். அவளை எதிர்பாராமல் சந்தித்தவன், பின்புறமாகச் சென்று திடீரென்று பிடித்து நிறுத்தினான். அவள் சீறி விழுந்ததை அவன் பொருட்படுத்தினானா? கருமத்தில் கண்ணாயிருப்பவன், பிறர் கோபத்தைப் பொருட் படுத்தினால் எப்படி வெற்றி பெற முடியும்? 'நீ என்னை விரும்புவதையும், விரும்பாததையும் நான் எப்படி அறிவேன்? அது உனக்கல்லவா தெரியும். மெல்லிய பூங்கொடி போன்றவளே! உன்னை அனைத்துக் கொள்வது இன்பம் தருகிறதாகையால் நான் உன்னைப் பிடித்திழுத் தேன்!' இவை தலைவன் சொற்கள்.

வலியப் பிடித்திழுத்ததனோடு, தன் செயல் சரியானதே என்று கூற முன் வருபவன் எத்தகைய சாகசக்காரனா யிருக்க வேண்டும்! அவன் தன் திறமை காரணமாக அவளை வெற்றி கொள்ளுகிறான். 'எனக்கு இன்பம் தரும் காரணத்தால் பிடித்திழுத்தேன்' என்று கூறிய குறிப்பு, 'அது உனக்கு துன்பம் தரும் என்று தெரிந்திருந்தால் அவ்வாறு செய்திருக்க மாட்டேன்' என்று கூறியதைப் போல் தோன்றவில்லையா? அவன் தன் இன்பத்தையே கருத வில்லை, அவளுக்காகவும் வாழ விரும்பினான் என்றும் காட்டிக். கொண்டான்.

அவன் பசப்புப் பேச்சில் அவள் மயங்கிவிடவில்லை, அவள் சினம் சற்றுத் தணிந்தது உண்மையே. முன்னர் அவனைத் திரும்பிப் பாராமல் பேசியவள், இப்பொழுது அவனைப் பார்த்து, 'தமக்கு இன்பம் தருவது என்று, வலியப் பிறர்க்குத் துன்பஞ் சூழ்வது நேர்மையானதோ?' என்று கேட்டாள். அவன் செயலை விரும்பாமல் கூறிய சொற்கள் அல்ல இவை. அவனிடத்து அன்புடையவளே. ஆயினும் அவனிச்சைப்படி அடங்கி நடக்க அவள் விரும்ப

வில்லை. தன்னையும் அவன் பொருட்படுத்த வேண்டும் என்றே அவள் வற்புறுத்தினாள். வேறு திசையைப் பார்த்துத் தன்னைப் பழித்தவள், இப்பொழுது முகங்கொண்டு தன்னைப் பார்த்துப் பேசவே, வெற்றி உவகையால் தலைவன் அவள் கேட்ட கேள்விக்குக் கேலியாய் விடையளித்தான். 'உன் அறிவைக் கைவிடு. நான் கூறுவதைக் கேள். தண்ணீர் குடிப்பவர், தம் விடாயைத் தீர்த்துக்கொள்ளக் குடிக்கிறார்களா அல்லது தண்ணீருக்கு அதனால் இன்பம் உண்டு என்று குடிக்கிறார்களா?' தலைவன் வாதத்தை அவள் பொருட்படுத்தவே இல்லை. பேசாமல் இருந்தாள். அவள் சினத்தைத் தணிக்கத் தாழ்ந்து போவது ஒன்றே வழி என்று தெரிந்து கொண்டான்.

ஐந்தலை நாகத்தின் பிடிக்குள் பட்டவனைப்போல் அவன் அவளிடம் சிக்கிக் கொண்டானாம்; விடுவித்துக் கொள்ள வழி தெரியாமல் திண்டாடுகிறானாம். குளிர்ச்சியைத் தந்து மக்களை மகிழ்விக்கும் மதிபோன்ற முகமுடையவளுக்கா அருள் இருக்காது? அவள் அருளினால் அவன் பிழைப்பானாம்; இல்லையேல் அவன் சாகவேண்டி நேருமாம். அவள் அருளாதிருக்க அவன் என்ன குற்றஞ் செய்து விட்டான்? அவன் செயலை அறநூல்களும் ஒருவகை மணமே என ஒப்புகின்றன அன்றோ? சும்மா சென்றவளை வலியப் பிடித்திழுத்த செருக்கெங்கே? இப்பொழுது பணிந்து தொழும் நிலை எங்கே?

தலைவன் தன் செயலுக்கு வருந்துவதாகக் கூறி அவளை வேண்டிக்கொண்ட பின்னரும் அவனை அவள் ஏற்றுக் கொள்ளாவிடின் அவனை இரக்கமற்றவளாக, பிசாசாகக் கருதுவோம் அன்றோ? அவன் செயல் அறிக்கழிவுடைய தன்று என்று தெளிவான பின்பும், அவனை மறுக்கலாமா? தலைவி இவற்றை நன்குணர்ந்திருந்தாள். இருந்தும் அவள்

நாம் எதிர்பார்க்கும் முறையில் அவனோடு சந்து செய்து கொள்ளவில்லை.

அவன் செய்தது குற்றம் என்று வாதாடிவிட்டு இப்பொழுது அவன் கூறியவற்றை ஏற்றுக்கொள்வது, அவனுக்கு அவள் பணிந்து போவதாகக் கருதப்படு மன்றோ? இதனை அவள் எவ்வாறு பொறுப்பாள்? அவள் பெருமையை இது சிதைத்துவிடாதா? அவன் செயல் அறநெறி பிறழாதது என அவள் ஏற்றுக்கொண்டாள். இருந்தும், இக்காரணம் பற்றி அவனோடு நட்புக் கொள்ளாமல், 'பண்டு நாம் வேறல்லம்' என்ற வழக்கிற்காக அவனோடு தனக்கு மாறுபாடு ஒன்றும் இல்லை என்று தெரிவித்தாள். தற்பெருமை சிதையாமல், தோல்வியை ஏற்றுக்கொண்ட தலைவியின் நடத்தை பாராட்டத் தக்கதே யன்றோ?

# 3. அணிமுக மதி ஏய்ப்ப *(28)*

**ப**ல நாட்கள் கழித்துத் தலைவியைப் பார்க்கச் சென்றான் அவன். பிரிவால் கலங்கி, தன் அழகு குன்றிக் காணப்பட்டாள் அவள். இவ்வளவு காலம், அவள் மெலிந்து போகும்படி பிரிந்து வாழ்ந்ததற்காகத் தன்னைக் கடிந்து கொள்வாள் என்று அறிந்த தலைவன், அவள் பேசத் தொடங்குவதற்குமுன் அவளைச் சண்டைக்கு இழுக்கிறான்.

வீண் போராட்டத்தில் உரக்கப் பேசுபவரே வெற்றி காண்பார் அன்றோ.

'நான் உன்னோடு கூடியிருந்த பொழுது நீ எவ்வளவு அழகாய் இருந்தாய்? இப்பொழுது அவ்வழகைத் தொலைத்துவிட்டு நிற்கிறாயே! அவற்றை நீ எனக்குத் திருப்பித்தரக் கடமைப்பட்டவள்' என்று தொடங்கினான்

தலைவன். அவனுக்கு எள்ளளவும் சளைத்தவளல்லள். அவள் 'அட! போ! ஏதோ நாலு நாள் என்னோடு இருந்த வனைப் போல் போக்குக் காட்டிச் சென்றதால், நான் அழகுடையவளாகி விட்டேனாம்! அப்படி என்ன இவன் என்னுடனேயே இருந்து, என்னைப் பொலிவு பெறச் செய்து விட்டான்?' என்று சுடச்சுடத் திருப்பிக் கொடுத்தாள் அவள்.

'இது என்ன? முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கிறாயே! உன் கண்கள் குவளை மலர்களைப் போல் இருந்ததும், உன் தோள்கள் பருத்துத் திரண்டு இருந்ததும், என்னுடன் இருந்ததால் அன்றோ? சரி அவை போகட்டும்! இப்பொழுது என்ன அழகைப் பெற என்னை அணையப் போகிறாய்' இவை தலைவன் சொற்கள். 'இப்பொழுது என் கண்கள் இருக்கும் நிலையைப் பார்; கத்தியால் கீறிய மாவடுக்களைப் போல் காணப்படும் இக்கண்கள் இப்படி இருப்பதற்காக நான் உனக்குக் கடமைப் பட்டிருக்கிறேன் என்று சொல்லுவாயோ?' இவை தலைவியின் சொற்கள்.

இந்த வாதம் முடிவடைவதாகக் காணோம். 'ஏன் அவளைச் சற்றுக் கடிந்து கொள்ளக்கூடாது' என்று எண்ணினான் தலைவன். 'என்னை என்னவென்று எண்ணிக் கொண்டாய்; தன் பொருளைக் கொண்ட வனைக் கண்டால், எப்படி அரசன் ஒருவன் தன்னிட மிருந்து அபகரித்தவைகளோடு, வேறு வகையில் சேர்த்த பொருளையும் அவனிடமிருந்து பிடுங்கிக் கொள்ளு வானோ, அப்படியே, இப்பொழுதே, இங்கேயே, நீ கடமைப் பட்டிருப்பதற்கு மேலும், உன்னிடமிருந்து திரும்பப் பெறும் ஆற்றல் எனக்கு உண்டு' என்று கூறியபடி தன் மீசையை முறுக்கிவிட்டான் அவன்.

'நிறுத்து உன் பேச்சை. என்னைக் கலியாணஞ் செய்து கொண்டு, உன் வீட்டில் கொண்டு வைத்து கொண்டபின்,

நீ என்னை மிரட்டிப் பார்க்கலாம். இப்பொழுது மீசையை விட்டுக் கையை எடு' என்று கூறிவிட்டாள் அவள்.

இனிவேறு என்ன செய்வது? நயத்தால் அவளை வெற்றி கொண்டான். 'நீ பட்ட கடன் முழுவதையும் அடைத்துவிட, பொய்யாகவானாலும் என்னை ஒரு முறை அணைத்துக் கொள்' என்று வேண்டிக் கொண்டதை அவள் மறுத்திருக்கக் கூடுமா?

இவ்விரண்டு கவிதைகளும் அமைப்பு முறையில் ஓரினத்தைச் சேர்ந்தவை. இரண்டும், இப்ஸன் நாடகங் களைப் போலக் கதையை நடுவில் தொடங்குகின்றன. (RUSI MEDI)

## 4. கயமலர் உண்கண்ணாய் *(1)*

"அழகான மாலையை அணிந்தவன்; வில்லை ஏந்தியவனாய் விலங்குகளின் அடிச்சுவடுகளை ஆராய்ந்தவனாய் வருவான்; தினமும் நாம் பாதுகாக்கும் புனத்தருகே வருவான்!' இவ்வாறு தோழி தான் கண்ட ஆடவன் அடையாளங்களை விவரிக்கத் தொடங்கிய பொழுதே, தலைவிக்கு அவன் தன் காதலனே என்று தெரிந்து கொள்ள முடிந்தது. 'என்னைப் பார்த்து, தனக்கு ஏதோ ஒரு குறை இருப்பது போல் தன்முகக் குறிப்பால் உணர வைப்பானே ஒழிய ஒன்றும் கூறாமல் சென்று விடுவான். இதனைத் தோழி கூறி முடிக்கும் பொழுதே, தலைவிக்கு மனத்தை அடைப்பது போல் இருந்தது. 'அவன் நிலையைக் கண்டு, அவனோடு ஒரு தொடர்பும் இல்லாத நானே மிகவும் துன்பப்படுவேன்.' தலைவியின் மனம்பட்ட பாட்டை யார் அறியக்கூடும்? 'ஆடவனாகிய அவனே, வாய் விட்டுத் தான் வேண்டியதைத் தெரிவிக்கத் துணிவு இல்லாமல் சென்று விட்டானேயானால், உன் நிலையைக்

கண்டு நான் மிகவும் வருந்துகிறேன்.' என்று என் மனநிலையை அவனுக்கு உரைத்தல் நம் பெண் தன்மைக்கு ஏற்றதாகுமோ?'

தலைவிக்கு இன்னது செய்வது என்று விளங்கவில்லை. இனி, தலைவனைக் காண்பது எப்படி? அவனைத் தோழி இடம் கூறுமாறு பணிப்பதைக் காட்டிலும், தானே அவனிடத்தில் சொல்லி விட்டிருக்கலாமே! இவ்வாறு தலைவி எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், தோழி தன் கதையைத் தொடர்ந்தாள். 'இப்படியே பல நாட்களும் 'அவனுக்கு என்ன குறை' என்று ஆராய்வதிலேயே நான் தூங்காமல் கழிக்கிறேன் என்பதனை அவன் உணராமற் போய்விடுதலும் கூடும் என்று எண்ணி, ஒரு நாள், நான் ஒரு நாணமற்ற செயலைச் செய்தேன்! தலைவியின் மனக்கலக்கத்தை இச் சொற்கள் போக்கின. அவள், தோழி என்ன செய்தாள்? தலைவன் என்ன சொன்னான்? என்று அறியும் ஆவலுடையவளாய் மாறினாள்.

'கிளிகள் வந்து விழாமல் நாம் பாதுகாக்கும் கொல்லைக்கு அருகே உள்ள ஊஞ்சலில் ஒரு நாள் ஆடிக்கொண்டிருந்த பொழுது, அவன் வந்தான். 'ஐயா! என்னைச் சற்று ஆட்டிவிடும்' என்றேன். 'நல்லது ஆட்டுகிறேன் என்று சொல்லி அவனும் ஊஞ்சலை ஆட்டினான். தலைவிக்குத் தானும் தலைவனும் காதல் கொண்ட வரலாற்றையே தோழி கூறத்தொடங்கியிருக் கிறாள் என்று ஐயம் ஏற்பட்டது. பொய் சொல்லுகிறாய் என்றோ 'கேலி செய்கிறாள்' என்றோ கூற அவள் நாணம் இடமளிக்கவில்லை. வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு மேலே என்ன சொல்லப் போகிறாள் என்று எதிர்பார்த்தபடி இருந்தாள்.

'என் கைகள் சோர்வடைந்து நழுவி விழுந்தவளைப் போலவே நடித்து, அவன் மார்பில் வீழ்ந்தேன். அவன்,

நான் உண்மையாகவே தவறிவிழுந்தேன் என்று எண்ணியவனாய், என்னைக்கீழே விழாமல் அணைத்துக் கொண்டான். அவன் மார்பின் மீது உணர்வற்றவளைப் போல் கிடந்தேன்'. தலைவி கொல்லென்று சிரித்து விட்டாள். தன் தலைவனைச் சந்தித்த விதத்தையும், தைரிய மற்றவனாய் இருந்தவனுக்குத் தைரியமூட்டித் தன்னைக் காதலிக்கச் செய்ததையும், அப்படியே தன் வாழ்க்கையில் நடந்தவற்றைப் போல் தோழி மாற்றிக் கூறியதைக் கண்டு சிரிக்காமல் என் செய்வாள்?

தலைவியின் நடத்தை, அவ்ள் இரவுக் குறியில் தலைவனைக் காணவும், களவொழுக்கத்தை நீட்டிக்கவும் உடன் படுவாள் என்று தோழிக்கு உணர்த்திற்று. தலைவன் எத்தகைய அன்புடையவன் என்பதைக் கூறி அவள் தன் கதையை முடித்தாள். 'என் நிலையை உணர்ந்து நான் எழுந்திருந்தேனானால், உடனே 'போய் விடு, யாராவது பார்த்தால் அலராகும்' என்று சொல்லி விரைவில் போக்கி விடுவானாகையால், அவன் நம்மிடத்து மிக்க அன்புடையவன்.' களவொழுக்கத்தை நீட்டிப்பதில் அபாயம் இல்லை என்று தலைவிக்கு அறிவிக்கும் முறையில் அமைந்திருக்கின்றன தோழியின் இறுதிச் சொற்கள். பிறர் நம் உறவை அறிந்து கொள்ளாதபடி பாதுகாப்பதில் ஆர்வங் காட்டுபவன், அலரெழும்படி நடந்து கொள்வானா?

## 5. சுணங்கணி வனமுலை *(24)*

'கண்ணுக்கு நிறைந்த அழகுடையவர், தம்மைக் கண்டவர்க்கு அவர் மனத்தே உள்ள நோயைத் தூண்டிப் பெரிதாக்கி, அதனைப் போக்க முயலாததோடு, உயிர் நீங்காமல், ஆனால் அதனை வாங்கும் எல்லைக்குத் துன்பத்தைத் தருவது பெண் தன்மைக்கு ஏற்றதாகுமா?

இவ்வாறு கூறி, போரில் வல்ல யானையைப் போன்றவன் என்னைத் தொழுது, தன் கண்களே நீராகிவிடுமோ என்று நான் அஞ்சும்படி கண்ணீர் சொரிந்தான். உன் அருளைப் பெறாததற்கு அவன் என்ன பாவம் செய்தானோ!' தலைவன் நிலையை மனமுருகக் கூறுவதால் தலைவி களவொழுக்கத்தை மேற்கொள்ள ஒப்புவாள் என்று தோழி நினைத்தாள். அவள் எதிர்பார்த்தற்கு மாறாக, 'தோழி தலைவன் நிலையை மிகைப்படுத்திக் கூறுகிறாளோ? என்று ஐயப்பட்டாள் தலைவி.

'தெருவில் கலங்கி அழும் எவனோ ஒருவனைக் கண்டு, அவன் படும் துன்பத்தை நீ படுவதாக நினைத்துக் கொண்டு நீ கலங்குவானேன்? உன்னால் நேராத துன்பங்களைப் போக்க நீ முற்படுவது எதற்கு' என்றாள் தலைவி. அவள் அலருக்குப் பெரிதும் அஞ்சினாள். ஆகவேதான், தலைவன் தோழியை வற்புறுத்தியிருக்க வேண்டும் என உணர்ந்தும், இவ்வாறு விடை அளித்தாள்.

'கண்டவன் துயரத்தை என்னுடையதாக நான் ஏறட்டுக்கொள்ளவில்லை. உன்னுடைய காட்சியே அவன் உயிரை வாங்குவதாக அவன் சொன்னான். அவன் படும் இன்னலுக்கு நல்ல மருந்து உன்னை மீண்டும் காண்பதே என்றும் சொன்னான். அவன் வருந்துவது உண்மை; அதனைத் தீர்க்கவேண்டும் என்ற எண்ணமும் எனக்கு இருக்கிறது. உன் முகத்தை அவனுக்குக் காட்டுவதல்லாமல், என்ன மருந்து என்னிடம் இருக்கிறது? நாம் என்ன செய்யலாம்?' அவன் துயரம் அளவற்றது என்றும் அதனைப் போக்குவது தலைவியின் பொறுப்பு என்றும் தோழி வற்புறுத்தியும் தலைவிக்கு, அவள் வேண்டுமென்றே, எடுத்த காரியத்தில் வெற்றிகாணத் தலைவன் நிலையை மிகைப்படுத்திக் கூறுகிறாளோ என்ற ஐயமே மிக்கது.

'பொன்னைப் பண்ணுவோம்! நடுத்தெருவில் நின்றபடி ஒருவன் கூறுவனவற்றை உண்மையாகக் கருதி, அதனை ஆராயாமலேயே, அவன் வருத்தத்தைப் போக்க முற்படுவது எளிதான காரியமா?' 'என்ன செய்யலாம்' என்று தலைவனிடத்தில் மிக்க பரிவைக் காட்டியவளாய்த் தோழி கேட்டதற்குப் பொன் செய்வாம்* என்று மிகவும் அசட்டையாக விடை அளித்தாள் தலைவி. அவன் பேச்சை நம்பி, களவொழுக்கத்தை மேற்கொண்டு, 'பின்னர் மணஞ்செய்து கொள் என்று அவனை யாசித்துக் கொண்டிருப்பதினும், அவனை இப்பொழுதே மணந்து கொள்ளத் தூண்டி அதுவரை அவன் பிரிவால் பசலை பரப்பதைப் பொறுத்துக் கொண்டிருப்பதே சிறந்தது என்பது தலைவியின் உட்கோள்.

தான் எவ்வளவுக்கெவ்வளவு தலைவன் வருத்தத்தை பெருக்கிக் கூறினாளோ, அவ்வளவுக்கவ்வளவு தன்கூற்றை நம்பாததனைக் காணத் தோழிக்குச் சினம் மூண்டது. 'அப்படியானால் ஒருவனை இறந்துபோக விடுவது எளிது!' என்று தன் கோபத்தைக் கொட்டிப் பேசினாள். தோழி தொடர்ந்து தலைவன் நிலை இரங்கத்தக்கது என்று கூறி வந்ததும், இப்பொழுது அவன் தன்னைக் காணாவிடில் இறந்துவிடுவான் என்று கூறியதும், தலைவியின் அலரச்சத்தைப் போக்கப் பயன்பட்டன. அலர் எழுந்தாலும் எழட்டும், அவனை மகிழ்விப்பதே நம் கடமை' என்ற உறுதியுடன் அவள் தலைவனைக் காணச் சம்மதித்தாள்.

இவ்விரு கவிதைகளும் ஒரே விதமான அமைப்பு முறையை உடையவை. இவை இரண்டிலும், தோழியர், நிகழ்ந்தவைகளாகச் சிலவற்றைக் கூறி, தலைவியரை வெற்றி கொண்டனர்.

---

★ பொன்-பொலிவு; கூட்டம் மேவுதல் என்பார் இளவழகனார்.

# 6. சுடர்த்தொடீஇ கேளாய் *(15)**

'**நா**ம் மணலால் கட்டும் சிறிய வீடுகளைத்தன் காலால் உதைத்தும், தலையில் சூடிய பூச்சரங்களை அறுத்து எறிந்தும், விளையாட வைத்திருக்கும் கீற்றிழைத்த பந்தை எடுத்துக்கொண்டு ஓடியும், நம்மை அழவைத்து வேடிக்கை பார்ப்பானே, சிறு போக்கிரி(லி), அவனைத் தெரியாது உனக்கு?' தலைவி தன் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைத் தோழிக்குக் கூறத் தொடங்கினாள்.

தலைவனை அறிமுகப்படுத்திய விதத்திலிருந்தே அவன் குறும்பு செய்வதில் விருப்பமுடையவன் என்றும், அவன் செய்த குறும்புச்செயல் ஒன்றை நாம் அறிந்து கொள்ளப் போகிறோம் என்றும் உணர்ந்து கொள்ளலாம். அவன் தலைவியைப் பார்க்க வந்தான். சற்றுப் பெரியவளாகி விட்டதால், முன்போல, தெருவில் விளையாடுமிடங்களில் அவளைச் சந்திக்க முடியவில்லை. ஆகவே, அவள் வீட்டிற்கே வந்தான்.

வந்த இடத்தில் தலைவியோடு அவள் தாயும் உடனிருப்பதைக் கண்டான். ஆகவே, 'குடிக்க நீர் வேண்டும்' என்று கேட்டு, தான் வந்த நோக்கத்தைத் தலைவியின் தாய்க்கு மறைத்தான். தாயும், அவன்கூறியதை உண்மையாகக் கருதி, மகளைத் தண்ணீர் கொடுக்கச் சொல்லிவிட்டுத் தன் வேலையைச் செய்யச் சென்றாள்.

அவள் தனியே வருவாள் எனத் தெரிந்து கொண்டவன் சும்மா இருப்பானா? அவள் முன் கையைப் பிடித்து இழுத்தான். அவன் குறும்புக்காரன் என்பதை அவள் நன்கறிவாள். இருந்தும் அவன் இவ்வாறு செய்வான் என்று எதிர் பார்க்கவில்லலை. ஆகவே, என்ன செய்தோம் என்று உணராமலேயே, 'அம்மா, இவன் செய்ததைப் பார்' என்று கத்திக் கூப்பிட்டாள்.

---

* இந்நூலின் மேலுறைப்பட விளக்கம்

தாய் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடோடி வந்தாள். அவள் வருவதற்குள் தலைவியின் கலக்கம் தெளிந்து விட்டிருந்தது; அன்னைக்குத் தெரிந்தால் அவன் அடிபடுவானே என்று அஞ்சினாள். 'என்னை இப்படிக் காட்டி கொடுத்துவிட்டாயே' என்று கெஞ்சுவது போல் இருந்தது அவன் முகக்குறி. அன்னையிடம் அவன் உண்ணுநீர் விக்கி வருந்தியதாகப் பொய் கூறினாள்.

தாய், விபரீத நிகழ்ச்சி ஒன்றும் நேர்ந்து விடவில்லை என்று தெளிந்து, தன் வேலையைச் செய்யத் திரும்பிப் போய்விட்டாள். அப் போக்கிரி கொன்று விடுபவனைப் போலவே தலைவியை முறைத்துப் பார்த்து விட்டு, சிரித்துக் கொண்டே வெளியேறினான்.

இக் கவிதையில் இடையிடையே உள்ள அசைச்சொற் களையும், எழுத்துக்களையும் ஆராய, இது ஓர் அழகான சிறு நாடகம் என்றும், நாடகங்களில் காட்சிகளை எண்ணிட்டுக் காட்டுவது போலவே, கபிலரும் இக்கவிதை யில் அசைகளை அமைத்துக் காட்டியிருக்கிறார் என்றும் அறிந்து கொள்ளுகிறோம்.

## 7. திருந்திழாய் கேளாய் *(29)*

'நேற்றிரவு நடந்த வேடிக்கை நம் ஊர் முழுவதும் சிரிக்கப் போதுமானது. நம்முடைய தலைவன் வருகையை எதிர்பார்த்தபடி, ஊர் அடங்கிய பின், ஒரு துணியைப் போர்த்துக் கொண்டு, நான் அவன் வருமிடத்துக்குச் சென்று காத்துக் கொண்டிருந்தேன்!' -தோழி நடந்தது போல ஒரு நிகழ்ச்சியைக் கற்பித்துக் கூறத் தொடங்கினாள். நல்ல இருளில் ஒரு பெண் தன்னந் தனியே நின்றிருக்கும் பொழுது, நம் மனத்தைக் கவரத் தக்க நிகழ்ச்சி நிகழலாமன்றோ? அது வேடிக்கையான நிகழ்ச்சி என்றும்

முதலிலேயே கூறிவிட்டதால், நாம் என்ன நடந்தது என்ற ஆவலுடன் கவிதையைப் படிக்க விரும்புகிறோம்.

'நீ கூட அடிக்கடி அவன் விஷயத்தில் எச்சரிக்கையாய் இரு என்று சொல்லுவாயே, அந்த வழுக்கைத் தலையும், கருங்குட்டத்தால் காலும் கையும் குறைந்து முடமாயும் உள்ள 'நம் சேரியை விட்டு நீங்காத' பார்ப்பான், தலையை முக்காடிட்டுக் கொண்டவனாய் வந்தான். நான் தனியே இருப்பதைக் கண்டு, அருகே வந்து, சற்றுக் குனிந்து பார்த்து, பெண் என்று தெரிந்து கொண்டு 'யார் அது?' என்று கேட்டான். நான் பேசாமல் இருக்கவே, 'வெற்றிலைப் பையை அவிழ்த்து நீட்டினான்!'

நடுநிசியில், தனியே ஒரு பெண் அகப்பட்டுக் கொள்ளவே கிழப்பார்ப்பான், அவளைத் தன் இச்சைக்கு இணங்க வைக்கலாம் என்று எண்ணிக் கொண்டான். 'காலமல்லாத காலத்தில் இங்கு நிற்பது யார்?' என்று அவன் கேட்டதே அவளை அச்சுறுத்துவதற்காக. அவள் மறைக்க விரும்பிய செய்தி அவனுக்குத் தெரிந்து விட்டது. இனி அவள் அலர் எழாமலிருக்க, அவன் உதவியை நாடவேண்டும். விருப்பமில்லாதிருந்தாலும், அவனுக்குப் பயந்து, அவன் சொன்னபடி கேட்கவேண்டுமல்லவா? பார்ப்பானுக்கு வெற்றி நிச்சயம் என்ற உறுதி ஏற்பட்டது. அவளைப் பயப்படுத்தாமல் நயத்தால் வயப்படுத்த வேண்டும் என்று எண்ணினான். 'வெற்றிலை தின்கிறாயா?' எனக்கேட்டு, எடுத்துக்கொள் என்று அவன் பையை அவிழ்த்து நீட்டினான், 'இனி நான் உன் விருப்பப்படியே நடந்து கொள்வேன். என்னை நம்பலாம்' என்று அவளுக்கு உணர்த்தவே. இவ்வளவுக்கும் அவள் பேசாமல் இருக்கவே, பார்ப்பானைப் பயம் பற்றியது. அது பிசாசாக இருக்குமோ என்று எண்ணினான்.

தான் பார்ப்பது பிசாசோ என்ற எண்ணம் எழுந்த வுடனே, பார்ப்பான் பெரிதும் பயந்து, அதனிடமிருந்து எப்படியாவது தப்பித்துக் கொள்ளவேண்டும் என்று முடிவு கட்டிவிட்டான். தன் அச்சத்தை வெளிக்காட்டாமல் ஓரடி பின்னால் சென்று, 'பெண்ணே! நீ என்னிடம் நன்கு அகப்பட்டுக்கொண்டாய்! நீ பெண்ணாயில்லாமல், பிசாசாக இருப்பின், நான் ஆண் பிசாசு; இவ்வூரில் உனக்குத் தரும் பலிச்சோறு முழுவதையும் உண்டு உன்னைப் பட்டினியால் சாகவைப்பேன்' என்று கூறினான். இப்பயமுறுத்தலைக்கண்டு பெண்ணாயிருந் தால், பயந்துவிடுவாள் என்பதே அவன் எண்ணம். ஓரடி பின்னுக்குப் போனதோடு, தன்னைப் பிசாசு என்று தவறாக எண்ணிக்கொண்டான் என்பதை அறிந்து தோழி தைரியம் கொண்டாள்; பேசாமல் நின்றாள்.

பார்ப்பான் பதை பதைத்தான். அது பிசாசே என்று நிச்சயமாய்க் கருதிவிட்டான். தான் நின்ற இடத்திலேயே பயத்தால் நடுநடுங்கினான். அவன் ஏன் ஓடித்தப்ப முயலவில்லை? இதற்கும் பயமே காரணம் முடவனான தால் வேகமாக ஓட அவனால் முடியாது. 'நான் உன்னை ஒன்றுஞ் செய்யவில்லை; போய்விடு' என்று அது உறுதி அளித்திருந்தால், அவன் விலகிப் போயிருப்பான். உறுதியளிக்காத பிசாசு பின்புறத்தில் இருக்கையில் ஓடமுடியாத பார்ப்பான், தட்டுத்தடுமாறி நடந்து செல்ல முயலாதது இயற்கை யேயன்றோ? வாய் திறந்து பேசினால் அவன் தன்னை யாரென்று கண்டு கொள்வானோ எனத்தோழி அஞ்சினாள். மேலும் அவன் அச்சப்படுவது தனக்கு உதவியளிக்கும் பொழுது அவள் அதனைப் போக்க முற்படுவானேன்?

அவன் அகன்றாலொழிய, தோழி அவ்விடத்தை விட்டு நீங்குவதற்கில்லை. அவன் பார்த்துக் கொண்டிருக்கையில், அவள் ஓடித் தப்பித்தாள். அவன் அச்சம் நீங்கி அக்கம்

பக்கத்தாரைக் கூவி எழுப்பித் துரத்துவான் அன்றோ? தன்னை யார் என்றும் தெரிந்து கொண்டு விடுவானே! ஆகவே அவள் ஒரு கை மணலை எடுத்து அவன் முகத்தின் மேல் குறிப்பாகக் கண்களின் மேல் படுமாறு தூவினாள். அவன் அலறிப்புடைத்துக் கொண்டு 'ஐயோ! பிசாசு' என்று கூச்சலிடத்தொடங்கினான். அவன் பார்வை தன்னைவிட்டு அகன்ற சமயம் பார்த்துத் தோழி ஓடித் தப்பினாள்.

இதுவும் சுடர்த்தொடீஇ கேளாய் (15) என்ற கவிதையும் அமைப்பு முறையில் ஓரினத்தைச் சேர்ந்தவை. இவை இரண்டும் தாம் கூறும் கதையை முதலிலிருந்து முடிவுவரை கூறுகின்றன.



# 1. கயமலர் உண்க(ண்)ணாய்...

அவர்கள் இருவரும் காதலர்களாம்; அன்பு நிறைந்த காதலர்களாம். இன்று, நேற்று அல்ல; மிகப் பலநாட் களாகச் சிறுகச் சிறுக அவர்களிடையே வளர்ந்து வந்த அன்பு, இப்பொழுது முற்றிக் காதலாக மாறிவிட்டிருக் கிறதாம்; ஒரு நாள்கூட ஒருவரை ஒருவர் பாராமல் பிரிந் திருக்க முடியாத அளவுக்கு முற்றிவிட்டிருக்கிறதாம். யாருக்குத் தெரியும் இவர்கள் உறவும், மனநிலையும்? இதுவரைத் தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியராய் இருந்தனர். இனி...? தினைக்கதிர்கள் முற்றிவிட்டன; அறுவடை நாள் நெருங்கிவிட்டது; தலைவி வீட்டிலேயே அடைப்பட்டுக் கிடக்க வேண்டும்- இச்செறிக்கப்படுவாள்.

அவளைத் தலைவன் காண்பது எப்படி? அவள் அவனைக் காண வழி உண்டா? இதுவரை தங்கள் கள வொழுக்கம் பிறருக்குப் புலப்படாமல் பார்த்துக்கொண் டனர்; அவ்வாறு கூடி இன்புறுவதில் மகிழ்ச்சி மிகுவதாக வும் கருதினர். அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தந்த 'மறை' இப்பொழுது துன்பத்தைத் தோற்றுவிப்பதாய் மாறி விட்டது. இதனை யாரிடம் சொல்லி ஆறுதல் பெறலாம்! தோழியின் துணை தங்கள் கூட்டுறவுக்கு எவ்வளவு இன்றி யமையாதது என இருவரும் ஒப்ப உணர்ந்தனர். தலைவி யைக் கலந்துகொண்டு- அவள் குறிப்புணர்ந்து- தலைவன் தோழியைச் சந்தித்தான். தனக்கும் தலைவிக்கும் உள்ள உறவை விளக்கினான். தங்களுக்குள் அன்பு தோன்றி

வளர்ந்து முதிர்ந்த கதையை விவரமாக உரைத்தான். தங்கள் மகிழ்ச்சிக்குத் தடை ஏற்படாமல் வழிகண்டு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்- குறை இரந்தான்.

முன் அறிமுகமில்லாதவன் மிக உருக்கமாகக் கூறிய கதையை உண்மை எனத் தோழி ஏற்றுக் கொள்ளலாமா? அவனுக்குப் பிறரறியாத வண்ணம் தலைவியைச் சந்திக்கக் கூடிய இடமொன்றை- குறியிடத்தைக் குறிப்பிட்டு விடலாமா? அவன் கதை உண்மையே எனத் தலைவியை ஒப்புக்கொள்ளச் செய்வது எப்படி? அவன் விரும்பும் வண்ணம், பிறரறியாமல், இரவுக்காலங்களில்- இரவுக்குறியில்- தலைவி அவனைச் சந்தித்துக்கூடி மகிழ- களவொழுக்கத்தை நீட்டிக்க- விருப்பமுடையவளாக இருப்பாளா? இச்சிக்கல்கள் அனைத்தையும் தோழி தீர்த்து நல்முடிவு கண்டதைச் சித்திரிக்கிறது இக்கவிதை.

கயமலர் உண்க(ண்)ணாய்! காணாய்! ஒருவன்
வயமான் அடித்தேர்வான் போலத் தொடைமாண்ட
கண்ணியன், வில்லன் வரும்; என்னை நோக்குபு
முன்னத்தின் காட்டுதல் அல்லது, தான் உற்ற
நோய் உரைக் கல்லான் பெயருமன்... (1–5)

குளத்திலுள்ள நீல் மலரைப்போன்ற ஆளை விழுங்கும் கண்களை உடையவளே! (நான் கூறுவனவற்றை ஆராய்ந்து, பார். ஒப்பற்ற ஒருவன் வலிமை மிக்க விலங்குகளின் கால் சுவடுகளை ஆராய்ந்து வருபவனைப் போல, கட்டுதல் சிறந்த வலையை உடையவனாய், வில்லை ஏந்தியவனாய் வருவான். அவன் என்னைப் பார்த்து, குறிப்பாக உணர்த்து வானே அல்லாமல், தான் அடைந்த துன்பத்தை வாய் விட்டுக் கூறமுடியாதவனாய்த் திரும்பிவிடுவான்.

ஒப்புயர்வற்றவனாய் இருந்தான். ஒன்றை அறிவிக்க விரும்பி வந்தான். ஆகவே தோழி அவனைக் கவனிக்கத் தொடங்கினாள்.

அவன் என்ன கூற விரும்புகிறான் என்று அறிய ஆவல் கொண்டாள். ஒவ்வொரு நாளும், 'இன்று சொல்லிவிட்டே வரவேண்டும்' என்று துணிவு கொண்டு வந்தவன், அவளைக் கண்டதும் பேசமுடியாத வனாகிச் சொல்லாமலேயே திரும்பிவிட்டான். அவள் ஆவல் அதிகரித்தது; அவன் நிலைக்கு இரங்கினாள். அன்பு அரும்பத் தொடங்கிற்று.

...பலநாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந்து, அவன்வயின்
சேயேன்மன் யானும் துயர்உழப்பேன்; ஆயிடைக்
கண்நின்று கூறுதல் ஆற்றான் அவன்ஆயின்
பெண்அன்று உரைத்தல் நமக்கு ஆயின்: இன்னதூஉம்
காணான் கழிதலும் உண்டுஎன்று ஒருநாள்என்
தோள்நெகிழ்பு உற்ற துயரால் துணிதந்து, ஓர்
நாண்இன்மை செய்தேன் நறுநுதால்! (6–12)

(அவன் வந்து சென்ற) பல நாட்களும் தூக்கம் பிடியாமல், (அவன் அடைந்த துன்பம் எது என்ற) எண்ணம் மிகுந்து, அவனிடத்துத் தொடர்பில்லாத நானும் துன்பப்படுவேன். அவ்விடத்து (ஆண்மகனாகிய அவனே என்) எதிர் நின்று (தன் மனத்திலுள்ளதைக்) கூறமுடியாத வனாய் இருப்பான் ஆனால், (உன் துன்பத்துக்கு நான் மிகவும் வருந்துகிறேன் என்று நான் அவனுக்குக் கூறுதல்) நம் பெண் இயல்புக்குப் பொருந்தாதது. ஆனால், இவ்வாறு நான் இரங்குவதை ஆராய்ந்து உணராதவனாய், (என்னை இரக்கமற்றவள் என்று எண்ணி, அவன் மனங்கலங்கித் தன் மனநிலையைக் கூறமுடியாத துன்பத்தாலேயே) இறந்து விடுதலும் கூடும் என்று எண்ணி, ஒருநாள் என் தோள் களின் நெகிழ்ச்சிகாரணமாய் நான் அடைந்த துன்பத்தைப் (பொறுக்கமாட்டாமல்), இனிய முகத்தை உடையவளே! துணிந்து ஓர் நாணமற்ற செயலைச் செய்தேன்.

அவன் நிலைக்கு இரங்கத் தொடங்கியவள், தன் நிலையினின்றும் இறங்கி அவனை நேசிக்கத் தொடங்கிவிட்டாள். இப்பொழுது அவளும் அவனிடம் ஒன்றைக்கூற விரும்பினாள். அவளுக்கும் நாவெழவில்லை. இருப்பினும், தான் அவனைக் காதலிப்பதை, தன் செயலால் அவனுக்கு உணர்த்தி விட்டாள். நாண் இன்மையைச் செய்தது காதலினாலேயே; அதனைத் தலைவி தெரிந்து கொள்ளாமலிருப்பதற்காகத் "தோள் நெகிழ்ச்சியைக்" கற்பித்துக்கொண்டதோடு, அந்நாணமற்ற செயலை விவரிக்கத் தொடங்குமுன், அவளை 'நறுநுதால்' எனப்பாராட்டி, அவள் கவனத்தை மாற்ற முயல்கிறாள்.

"என் கண்நின்று" என இருக்கவேண்டியதொடர், 'கண் நின்று' எனக் குறைந்து நின்றது; சொல் தொக, உருபு நின்றது.

...ஏனல்
இனக்கிளி யாம் கடிந்து ஓம்பும் புனத்துஅயல்
ஊசல்ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை,
'ஐய! சிறிது, என்னை ஊக்கி,' எனக்கூற,
'தையால்! நன்று,' என்று அவன்ஊக்க, கைநெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின்... (13–17)

தினைப்புனங்களிலே வந்து விழும் கூட்டமான கிளிகளைத் துரத்தி நாம் பாதுகாக்கும் கொல்லைக்கு அருகே உள்ள ஊஞ்சலில் ஒரு நாள் நான் ஆடிக்கொண்டு இருக்கையில் வந்தவனை (நோக்கி) 'ஐயா! என்னைச்சற்று ஆட்டிவிடு' என்று கேட்கவும், (அவன் மிகமகிழ்ந்து) 'பெண்ணே! நல்லது!' என்று கூறி ஆட்ட, கைகள் சோர்ந்து (விழுந்து விட்டவளைப்போல்) நடித்து அவன் மார்பின் மீது விழுந்து விட்டேன்.

'கைநெகிழ்ந்தமையை' மீண்டும் வற்புறுத்துகிறாள். வீழ்ந்தது பொய் அன்று; கைநெகிழ்ந்தது பொய்.

...வாயாச் செத்து
ஒய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான் மேல்
மெய்அறியா தேன்போல் கிடந்தேன்மன், ஆயிடை

மெய்அறிந்து ஏற்றுஎழுவேன் ஆயின், மற்று ஒய்யென
'ஒண்குழாய்! செல்க' எனக் கூறிவிடும் பண்பின்
அங்கண் உடையன் அவன். (18–22)

(என்னுடைய நடிப்பை உணராமல் நான் கை சோர்ந்து விழுந்ததை) உண்மை எனக்கருதி, வெகுவிரைவாக அப்பொழுதே வாரி எடுத்து அணைத்துக் கொண்டவனுடைய மார்பின் மீது, மூர்ச்சித்தவளைப்போல இருந்தேன். அவ்விடத்து உடலுணர்வு பெற்று (என் நிலையை) உணர்ந்து எழுந்திருந்தேனானால், பரபரப்புடன், 'ஒளிமிக்க ஓலையை அணிந்தவளே! போய்விடு' என்று கூறி என்னை விடுவித்து விடும் நாகரிகம் நிறைந்த, சிறந்த அன்புடையவன் அவன்.

அவள் காதலுக்கு ஏங்கிக் கிடந்தவன், அவளைத் தன் கைகளில் பெற்றிருந்தும் பயன் படுத்திக் கொள்ளவில்லை. 'ஒண்குழாய்' என்னாமல், அவள் அங்கம் ஒன்றைப் புகழ்ந்து அழைத்திருப்பானாகில், அப்பொழுது மூர்ச்சித்தவள் நிலைக்கு இரங்காமல், அவளை அணைத்துக் கொண்டிருப்பதில் இன்பம் அடைந்தான் எனக் கருதத் தோன்றும். அவள் தளர்ச்சியைப் பொருட்படுத்தாது, தன் இன்பத்திலேயே நாட்டமுடையவனாய் இருப்பவன், அவள் இளமைச் செவ்வி நீங்கிய பின் அவளைத் துறக்கத் துணிவானன்றோ? அவன் இத்தகைய இழிகுணம் உடையவன் அல்லன் என்பதை அவன் தோழியை விளித்த தொடர் காட்டுகின்றது. அவன் அன்பும் பரிவும் அவள் துன்பத்திற்கு இரங்குவதோடு நிற்கவில்லை. அவளுக்குத் துன்பமே தோன்றாமலிருக்க அவன் முயல்கிறான். அவள் தெளிவடைந்ததும், அந்நிலையில் பிறர் கண்டால், அவளுக்குப் பழி வரும் என்று அஞ்சி, அவளோடு அளவளாவுதலால் தான் பெறும் இன்பத்தையும் விரும்பி விட்டுக் கொடுத்து, போய் விடுமாறு வற்புறுத்துகிறான். அவன் அன்பு தலையாயது என்பதற்கு வேறு சான்று வேண்டுமோ?

தலைவனும், தலைவியும் சந்தித்தது, அவர்களுக்குள் அன்பு தோன்றி வளர்ந்தது, தலைவி தன் காதலைத் தலைவனுக்கு வெளிப்

படுத்தியது, ஆகிய அனைத்தையும் தலைவன் விவரித்த வண்ணமே தன் வாழ்க்கையில் நிகழ்ந்தவை போலத் தோழி திரித்துக் கூறுகிறாள். தன் செயல்களை அவள் விவரிப்பதைக் கேட்கும் தலைவி நாணமுறுவாளன்றோ? அது ஒன்றே, தலைவன் கதை உண்மை என நாட்டப் போதும். நாணத்தை எழுப்பி பின் அதனை நீக்கி, நல் முடிவு கண்ட தோழியின் திறனே திறன்!

'சேயேன்மன்' என்ற இடத்தில் மன் மிகுதியை உணர்த்த வந்தது. ஒழிந்த இரண்டிடங்களிலும் அது அசை; தோழி தன் வாழ்க்கையில் நடந்தவை போலத் திரித்துக் கூறியவற்றைப் பிரித்துக் காட்டப் பயன்படுகிறது. மெய்யறிந்து ஏற்று எழுந்தால் அவன் விரைவாகப் போக விட்டுவிடுவான் என்பது நிலை நாட்டப் படவில்லை. ஏனெனில், எழுந்திருக்கும் வரை கதையைக் கூறிக்கொண்டு போக தலைவி இடமளிக்கவில்லை. ஆனால் தலைவன் அத்தகைய உயர்குணம் உடையவன் என்று தோழி நன்கறிவாள். குறையிரந்து நின்றபொழுது, பிறர் வருகையைக் கண்டு அவன் தோழியை அவ்வாறு எச்சரித்திருப்பான். தான் நேரில் உணர்ந்த உண்மையை, தோழி இங்கு ஓர் அனுமானத்தால் பெற வைப்பது, முன்னர் தலைவன் கூற்றால் ஒன்றும் உணர்த்தவில்லை என்று கூறியதனோடு முரண்படாமலிருக்கவே; கூறிய கதை நிகழாததொன்றாயினும், அதனை ஆதாரமாகக் கொண்டு அனுமானித்த முடிவு உண்மையே என வற்புறுத்த, 'மற்று' என்ற அசை அதனைப் பிரித்துக் காட்டுகிறது.

இவ்வாறன்றி, இக்கவிதையைத் தலைவி கூற்றாகக் கொண்டு, தலைவன் குறையிரந்து நிற்பின், மறக்காது, அவனுக்குக் குறியிடம் குறிப்பிக்க வேண்டுமென வற்புறுத்த, தோழிக்குத் தலைவி மறை புலப்படுத்தியதாகப் பொருள் விரிப்பதும் உண்டு. தலைவி தான் செய்த நாணமற்ற செயலைத் தானே கூறுதல் இயற்கையன்று.

ஹாம்லெத் என்ற அரசன் தன் தம்பியால் வஞ்சித்துக் கொல்லப்பட்டான். அரசியும் கொலைக்கு உடந்தையாய் இருந்தாள். இறந்த அரசனின் ஆவி, அரச குமாரனுக்குக் கொலை நடந்த விவரத்தைக் கூறி, தன் கொலைக்குப் பழி வாங்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டது. பேச்சை நம்பி தன் தாயையும், சிற்றப்பனையும் கொலையாளிகளாகக் கொள்வதா? இவ் ஐயத்தைப் போக்கிக் கொள்ள, அரச குமாரன், பேய் கூறிய விவரங்களை ஓர் சிறு நாடகமாக

மாற்றி அமைத்து, அதனைத் தன் தாய், சிற்றப்பன் இவர்கள் எதிரில் நடிக்கச் செய்தான். நாடகம் தன் செயல்களை விவரிப்பதை உணர்ந்த கொலையாளி, அதனை முற்றிலும் பார்க்கத் துணிவுஇன்றி இடையே எழுந்து சென்றுவிட்டான். சென்றவன் தன் பிழைகளைப் பொறுத் தருளுமாறு ஆண்டவனை வேண்டிக் கொண்ட பின்பே ஒருவாறு ஆறுதல் பெற்றான். ஒரே விதமான பயனைப் பெறக் கபிலரும், ஷேக்ஸ்பியரும் ஒரே தன்மையான விரகுகளைக் கையாண்ட ஒப்புமை உணர்ந்து மகிழத் தக்கது.

# 2. இமையவில் வாங்கிய...

தலைவன் தினந்தோறும் இரவில் வந்து தலைவியைச் கூடிச் சென்றான். இருந்தும் அவள் இரண்டுவித இன்னல்களால் துன்பமடைந்தாள். நள்ளிரவில் தனியே வரும் தலைவனுக்கு ஊறு நேரும்-இரவுக்குறியின் ஏதம்-என்ற பயம் ஒன்று; தன் களவொழுக்கத்தை ஊரார் உணர்ந்து பழி கூறுவார்கள்-அலராகும்-என்ற பயம் இரண்டாவது. இவற்றைத் தோழி தலைவனுக்கு விளக்கி விரைவில் மணஞ் செய்துகொள்ள வேண்டும் என வற்புறுத்தினாள்- வரைவு கடவினாள். அவனும் அவள் சொற்களை ஏற்றுக்கொண்டு நன்னாள் ஒன்றில் மணம் பேசவந்தான். இந்நற்செய்தியையும் இவ்வாறு நிகழத் தான் தலைவனுக்குக் கூறியவற்றையும், தோழி தலைவிக்கு உரைப்பதாக அமைந்திருக்கிறது இப்பாடல்.

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமைஅமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக,
ஐஇரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்ப்புகுத்து அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல (1–5)

இமைய மலையை வில்லாக வளைத்தவனும், (கங்கையை அணிந்ததால்) குளிர்ச்சிபெற்ற சடையை

உடையவனும், விரும்பத்தக்க அருட்குணம் நிரம்பிய வனுமாகிய இறைவன் உமையவளோடு பொருந்தி, உயர்ந்த கயிலை மலையில் வீற்றிருக்கவும், பத்து தலைகளை உடையவனும், அரக்கர்கள் அரசனுமாகிய இராவணன் வீரவளைகள் விளங்கும் தன் கைகளாலே அம்மலையைப் (பெயர்த்து எடுக்க எண்ணி, கைகளை) அதன் கீழாகச் செலுத்தி, (அம்மலையையே அன்றிச் செலுத்திய தன் கைகளையும்) எடுக்க முடியாமல் வருந்துகின்றவனைப் போல,

இறைவன் இமயத்தை வளைத்ததும், கங்கையைத் தாங்கியதும் நல்லோர்க்கு அருளவே ஆகையால் அவனை 'அந்தணன்' என்றார்.

உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையை
கறுவுகொண்டு அதன்முதல் குத்திய மதயானை
நீடுஇரு விடர்அகம் சிலம்பக் கூஉய்த்தன்
கோடுபுய்க் கல்லாது உழக்கும்; நாட!கேள் (6–9)

வலிமையை மிகுதியாக உடைய புலியின் வடிவத்தை ஒத்திருக்கும்படி பூத்திருந்த வேங்கை மரத்தை (புலி என்று எண்ணி) பகைமையின் தூண்டுதலால் சினந்து அதன் அடியிலே குத்திய மதம் மிகுந்த யானை, நீண்ட பெரிய மலைப்பிளவிடங்கள் எல்லாம் எதிரொலிக்கும்படிக் கத்தி (வெற்றி பெறாததோடு) தன் கொம்புகளையும் வாங்கிக் கொள்ளமுடியாமல் வருந்தும். இத்தகைய மலை நாட்டுத் தலைவனே! (நான் கூறுவனவற்றைக் கவனமாகக்) கேள்.

அந்தணன் அமர்ந்திருந்த மலையைப் பகையாகக் கருதி இராவ ணன் இன்னல் உற்றதைப்போல, நிழலைத் தரும் வேங்கையைப் பகையாகக் கருதி யானை இன்னலுற்றது. விளக்கங்கருதி 'உழக்கும்' என்ற எச்சம் முற்றாக உரையில் கொள்ளப்பட்டிருக்கிறது.

ஆர் இடை என்னாய், நீஅர(வு) அஞ்சாய் வந்தக்கால்
நீர் அற்ற புலமேபோல் புல்லென்றாள், வைகறை

கார்பெற்ற புலமேபோல் கவின்பெறும்; அக்கவின்
தீராமல் காப்பதோர் திறன் உண்டேல் உரைத்தைக் காண
(10–13)

கடத்தற்கரிய வழி என்று கருதாமலும் (அவ்விடத்தில் இரவுக்காலங்களில் போக்குவரவு செய்யும்) பரம்புகளுக்குப் பயப்படாமலும் நீ வந்தபொழுது, நீரில்லாமல் வரண்டு போன நிலத்திலுள்ள பயிரைப்போல இவள் அழகை இழந்தவளாய்க் காணப்படுகிறாள்; (நின் தலையளியால்) வைகறைக் காலத்தில், மழையைப் பெற்ற நிலத்திலுள்ள பயிரைப் போல பசுமைபெற்று விளங்குகின்றாள்; இவ்வழகு அழியாமல் இருக்கச்செய்ய ஓர் உபாயம் உண்டானால் அதனை எங்களுக்கு விளக்குவாய்.

நிலம் ஆகு பெயராய்ப் பயிரை உணர்த்திற்று. தலைவன் உடன் இல்லாமையும், அவன் வரும் வழியருமையும் தலைவியை அழகிழக்கச் செய்கின்றன. அவன் தலையளி அவளை இழந்த அழகைப் பெறவைக்கின்றது. இந்நிலை மாறமலிருக்க, அவன் அவளை மணந்து கொள்ளவேண்டும். இதனைத் தலைவன் வாயால் பெறவைக்க முயல்கிறாள் தோழி.

இருள்இடை என்னாய்,நீ இரவுஅஞ்சாய் வந்தக்கால்
பொருள்இல்லான் இளமைபோல் புல்லென்றாள் வைகறை
அருள்வல்லான் ஆக்கம்போல் அணிபெறும்; அவ்வணி
தெருளாமல் காப்பதோர் திறன் உண்டேல் உரைத்தைக் காண்.
(14–17)

இருண்ட வழி என்று கருதாமலும், நீ இரவுக்குப் பயப்படாமலும் வந்தபொழுது பொருள் இல்லாத வனுடைய இளமைச் செவ்வி (பாழ்பட்டுக் கிடத்தல்) போல இவளும் அழகு இழந்தவளாய்க் காணப்படுகிறாள்; (நின் தலையளியால்) வைகறைக் காலத்தில், கைம்மாறு கருதாமல் பிறர்க்கு உதவுமவன் மன நிறைவையும், மகிழ்ச்சியின் மிகவும் பெறுதலைப் போல, (இவளும்

மனமகிழ்ச்சியையும் மிகுதியால்) எழில் பெறுகிறாள்; இவ் எழில் இவள் களவொழுக்கத்தால் பெற்றதே என்று பிறர் அறியாதபடி காக்க ஓர் உபாயம் உண்டானால் அதனை எங்களுக்கு விளக்குவாய்.

> மறம்திருந்தார் என்னாய், நீ மலைஇடை வந்தக்கால்
> அறஞ்சாரான் மூப்பேபோல் அழிதக்காள்; வைகறை
> திறஞ்சேர்ந்தான் ஆக்கம்போல் திருத்தகும்; அத்திரு
> புறங்கூற்றுத் தீர்ப்பதோர் பொருள்உண்டேல் உரைத்தைக் காண்.
> (18–21)

பிறர்க்குக் காரணமின்றி கொடுமை செய்தலினின்றும் மாறாதவர் என்பதைக் கருதாமல், நீ மறவர் நடமாடும் மலை வழியே வந்தபொழுது (இளமையில்) அறவழியில் ஒழுகாதவன் முதுமைப் பருவத்தில் (தனக்கு இரங்குவார் ஒருவரும் இல்லாமல் துன்பப் படுதலைப்)போலவே, இவளும் மனஅமைதி இல்லாமல் துன்பப்படுகிறாள். (நின் தலையளியால்) வைகறைக் காலத்தில், வினைத்திறன் உடையவன் செல்வம் பெருகப்பெற்று மகிழ்தலைப் போல, இவளும் கண்டாரைக் கவர்விக்கும் அழகாகிய செல்வத் தைப் பெற்றுத் திகழ்கிறாள்; இச்செல்வம் பிறர் பரப்பும் பழிச் சொல்லை அழிக்கக்கூடிய ஆற்றல்பெற்ற பொருளாக இருக்குமேயானால், அது எவ்வாறு என எங்களுக்கு விளக்குவாய்.

செல்வம் பழிப்பவர் வாயை மூடும் வல்லமை உடையது; ஆனால் அவன் அளியால் அவள் பெறும் அழகாகிய செல்வம், பிறர் வாயைத் திறந்து வைக்கிறது. மணம் நிகழ்ந்தால் அழகு மாறாமலிருக்கும்; அலரும் எழாது. முன்பு களவொழுக்கத்தில் பிறர் வாயைத் திறந்து வைத்த அழகாகிய செல்வம், இப்பொழுது தலைவியை விட்டு நீங்காமல் இருப்பதோடு, மாற்றார் வாயையும், மூடிவிடும்.

மூன்ற தாழிசைகளிலும் வைகறை வற்புறுத்தப்படுகிறது. நடுயாமத்தே தலைவன் வந்து செல்வதால், வைகறைக் காலத்தில்

தலைவி பொலிவுடன் காணப்படுகிறாள். காலையில் அழகுடன் விளங்குபவள், பொழுது ஏற ஏற, பிரிவுத் துயரால் நலிந்து மெலிகிறாள். இம்மாற்றத்தைக் கவனிப்பவர், இவள் களவொழுக் கமே காலைப் பொலிவுக்குக் காரணம் எனக் கண்டுகொள்வர்.

என ஆங்கு
நின்உறு விழுமம் கூறக் கேட்டு
வருமே தோழி! நல்மலை நாடன்
வேங்கை விரிஇடம் நோக்கி
வீங்குஇறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே.
(22–26)

என்று உனக்குத் தோன்றும் துன்பத்தை (நான் தெளி வாகக்) கூறக்கேட்டு, நல்ல மலைநாட்டுக்குத் தலைவன் வேங்கை மலர்கின்ற காலத்தைப் பார்த்து, பெருத்த முன் கைகளையும், மூங்கிலையும் ஒத்த தோள்களையும் உடைய உன்னை மணந்துகொள்ள, தோழி! வருகின்றான்.

வேங்கை நல்ல நாளில் மலரத் தொடங்குமாம்; இடம் இங்குக் காலத்தை உணர்த்த வந்தது.

மணம் நிகழ்ந்தால்,தலைவி மாறாத இளமைச் செவ்வியையும் இடையீடற்ற மனமகிழ்ச்சியையும், பிறரை மகிழ்வூட்டுந் தகுதியையும் பெறுவாள் என்பதைத் தாழிசைகள் மூன்றும் வெளிப்படுத்தும் விதமும், முறையும் வியக்கத் தக்கன.

## 3. காமர் கடும்புனல்...

அவ்வீட்டில் பெரும் பரபரப்பு காணப்படுகின்றது விருந்தினர் சிலர் வந்திருக்கின்றனர். அவர்களை வரவேற் பதிலும், உபசரித்து மகிழ்வதிலும் ஆவல் காட்டுகின்றனர் ஆடவர். அவ்வீட்டிலேயே, ஓர் அடைத்த அறையில் இளம்பெண் ஒருத்தி உள்ளம் துடிக்கிறாள். தேம்பித் தேம்பி அவள் அழுவதை, அவ்வறைக்குள் சென்ற பின்பே அறிய

முடியும். அவள் அழுகைக்கும், ஆடவர் மகிழ்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என எவர் அறிவார்? இந்நிலையில் துடிப்பவளின் தோழி முன் வருகிறாள், ‘தலைவி ஒப்பற்ற ஒருவனைக் காதலிக்கிறாள். இதனை வெளியே ஆரவாரம் செய்யும் ஆடவர்களுக்கு அதனை வற்புறுத்தி உரைக்கிறாள். முன்னர் நாம் கண்ட காட்சி முற்றிலும் மாறுபடுகின்றது. துடிதுடித்த உள்ளம் மகிழ்கின் றது; வெளியே விருந்தினரை உபசரிப்பதில் ஈடுபட்டிருந்த வர் மனம் கொதிக்கிறது; ஆடவர்கள் நாணி அடங்கிவிடு கின்றனர். ஒரு பெண்ணின் வாழ்வைக் காக்க முன்வந்த தோழியின் திறனையும், அவள் உள்ளக் கிளர்ச்சியையும் அவள் கூற்றினாலேயே அறிவிக்கிறது இக்கவிதை.

காமர் கடும்புனல் கலந்துஎம்மோடு ஆடுவாள்
தாமரைக்கண் புதைத்து,அஞ்சித் தளர்ந்து, அதனோடு
ஒழுகலான்
நீள்நாகம் நறும்தண்தார் தயங்கப்பாய்ந்து, அருளினால்
பூண்ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால், என்தோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே!
(1–6)

விருப்பம் (விளைப்பதும்) வேகம் (உடையதும்) ஆகிய தன்மைகளை உடைய ஆற்றுநீரில், எங்களோடு கூடி விளையாடுபவள், (கால்கள்) தளர்ந்தபடியால், பயந்து தாமரை மலர்போன்ற கண்களைத் தன்கைகளால் மறைத் துக் கொண்டு அவ்ஆற்று நீரோடு மிதந்து செல்லவும், நீண்ட சுரபுன்னை மலர்களால் கட்டப்பட்டதும், மணம் மிக்கதும், குளிர்ச்சியை உடையதுமான மாலை விளங்கும் படி விரைவாக (நீரில்) பாய்ந்து, (அவளைக் காக்கவேண்டும் என்ற) அன்பு மிகுதியால் அணிகளைப்பூண்ட (அவ ளுடைய) மார்பு (தன்னுடைய மார்போடு) பொருந்தும்படி

அணைத்துக் கொண்டு, (அவளைக் கரையிலே) சேர்த்த வனுடைய அகன்ற மார்பை (இவளுடைய) வளரும் தன்மை யுடைய முலைகள் தீண்டின என்று (தோழியர்) கூறிய தனால், என்னுடைய தோழி, பெறுதற்கரிய மழையை நாம் வேண்டும் பொழுது பெய்விக்கச் செய்யும் பெருமையை உடையவளாயினாள்.

தயங்கல்-விளங்கல்; நீராடிச் சிவந்தமையால் தாமரைக் கண் என்றார். தலைவன் பாய்ந்த வேகத்தில் ஏற்பட்ட அசைவினால், அவன் மாலையிலிருந்து மலர்கள் மின்னின. இவ் உயர்ந்த மாலையைக் கழற்றி வைக்கக் கருதாது வேகமாகப் பாய்ந்தது அவன் அன்பு மிகுதியைப் புலப்படுத்துகின்றது. ஆகவே அவன் அவளைக் காதலினால் அணைத்துக் கொள்ளவில்லை என உணர்த்த விரும்பி யவர், 'வருமுலை புணர்ந்தன' என்ற புணர்தல் தொழிலை முலையின் மேலிட்டுக் கூறினார். பிறர் கூறக்கேட்ட அளவிலே, தலைவி அவனைக் கணவனாக வரித்துவிட்டாள் எனத் தோழி கூறியது, களவொழுக்கத்தைத் தலைவி மேற்கொள்ளவில்லை எனத் தமருக்குத் தெரிவிக்கவே.

> அவனும்தான், ஏனல் இதணத்து அகிற்புகை உண்டு
> இயங்கும்
> வான்ஊர் மதியம் வரைசேரின், அவ்வரைத்
> தேனின் இறாஅல் ஏணி இழைத்திருக்கும்
> கான்அகல் நாடன் மகன். (7–10)

(பெருமையைப் பெற்ற இவளேயன்றி) அவனும், தினைப்புனங்களில் உள்ள பரண்களில் பக்கத்தில் (குளிர்காய) எரிக்கப்படும் அகில் கட்டைகளிலிருந்து எழும் புகையை உண்டு திரிவதும், ஆகாயத்திலே செல்லுவதுமான சந்திரன் அம்மலை உச்சியைச் சேர்ந்தால், '(அதனை அங்கு உள்ள) தேன் கூடு எனவும், (அம்மலையில் உள்ள உயர்ந்த மூங்கில்கள் அதனை அடையச்) செய்யப்பட்டிருக்கும் ஏணி எனவும் (கண்டவர்) கருதும்படியான காடுகள் அகன்ற மலைநாட்டுத் தலைவன் மகன் (என்ற வகையில் பெருமை உடையவன்)

'பெருமையளே' எனத் தேற்றேகாரத்தால் தலைவியின் உயர்வை உணர்த்தியவர், அவன் அவளுக்குத் தகுந்த கணவனே எனக் காட்ட **'அவனும்தான்'** எனச் சிறப்பும்மை கொடுத்தார். பெரிய மலைநாட்டுத் தலைவன் மகன்; அருளுடையவன்; தலைவியைக் காப்பாற்றியவன்; ஆகவே அவனைக் கணவனாகத் தலைவி வரித்துக் கொண்டது தகுதி உடையதே எனத் தோழி வற்புறுத்துகிறாள்.

அவன் மலையில் குளிர் காய மூட்டிய தீயின் புகை, ஆகாயத்தில் நன்வழிச் செல்லும் மதியின் ஒளியை மங்கச் செய்ததைப் போல, அவனுடைய அருளால் தோன்றிய செயல் பிறரால் தீண்டப்படாத தலைவியின் பெருமைக்கு ஊறு விளைவித்தது. அவன் மலையில் தோன்றிய புகையால் மாசுண்ட மதி, அவன் மலையில் கட்டப்பட்ட தேன்கூடாக-அவனுடைய உடைமையாக-கருதப்பட்டதைப் போல, அவன் செயலால் பெருமை குன்றிய தலைவியும், அவன் உடைமையாக-மனைவியாகத்-தோழியரால் மதிக்கப்பட்டாள்.

சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்
அல்ல புரிந்து ஒழுக லான். (11–14)

சிறு குடியிருப்புகளில் இருப்பவர்களே! இம்மலையில் வாழ்பவர் (உதவி செய்தவர்க்கு நன்றி செலுத்தாமல், இவளை வேறு ஒருவனுக்குக் கொடுக்க விரும்பி) அற மல்லாத செயலைச் செய்வதால், வள்ளிக்கொடி கிழங்கு விடாது; மலையின்மேல் தேனீக்கள் கூடு கட்டமாட்டா; கொல்லையில் உள்ள தினைப்பயிர் கதிர்வாங்கி விளை வைத் தரமாட்டா.

தலைவி தானாகவே காதலனைத் தேடிக் கொண்டதற்காகத் தமர் சினந்து, அவளை அயலானுக்குக் கொடுத்துவிடத் துணிவார்களோ என்று அஞ்சிய தோழி, அவர்கள் அறமல்லாத செயலால் அனைவருக் கும் தீங்கு நேரும் என எச்சரிக்கை செய்கிறார்கள். 'கொல்லை' ஆகு பெயராய்ப் பயிரை உணர்த்திற்று.

காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாங்குஅமை மென்தோள் குறவர் மடமகளிர்
தாம்பிழையார்க் கேள்வர்த் தொழுதுஎழலால், தம்ஐயரும்
தாம்பிழையார் தாம்தொடுத்த கோல். (15–18)

காந்தள் பூக்களின் மணம் மண்டியதும், காண்பவர் கண்களை (வேறு பொருள்களின் மீது செல்லவொட்டாமல்) தன்னிடத்திலேயே தங்குவித்துக் கொள்ளும் தன்மையைப் பெற்றதும் ஆகிய பெரிய மலையின்மீது உள்ள வளைந்த மூங்கில்களைப் போன்ற (ஆனால்) மென்மையான தோள்களை உடைய மடப்பம் மிக்க குறப்பெண்கள், கற்பு நெறி பிறழாமல் தம் கணவன்மாரைத் தெய்வமாகக் கருதித் தொழுகிறார்களாகையால் அவர்களுடைய அண்ணன் மாரும், தாம் தொடுத்த அம்புகள் குறி தப்பாமல் தாக்கும் தன்மையை உடையவர்களாய் இருக்கிறார்கள்.

தலைவர் என்றே பொருள்படும் 'ஐயர்' என்ற சொல், வேட்டையில் மிக்க விருப்பங்காட்டக்கூடிய இளைஞரைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டது. கண்கொள்ளாததும், கவர்ச்சியுடைய காட்சிகளைப் பெற்றதாயும் உள்ள பெரிய மலையாகையால், வைத்தகண் வாங்காமல் பார்க்கவேண்டிய சிறப்புடையதாய் இருக்கிறது. தேனும், தினையும், கிழங்கும் கிடைக்காமற்போம் என்று முன் எச்சரித்தவள், 'வேட்டையாடிப் பிழைப்போமே' என்று எண்ணுவார்க்கு, பெண்கள் கற்பு தவறின் வேட்டையிலும் வெற்றி கிடைக்காமற்போம் 'என எச்சரிக்கை செய்கிறாள்.

என ஆங்கு
அறத்தொடு நின்றேனைக் கண்டு, திறப்பட
என்ஐயர்க்கு உய்த்துரைத்தாள் யாய் (19–21)

என்று கூறி அறத்தொடு நின்ற என் மனநிலையை ஆராய்ந்து (உணர்ந்து), என் அன்னை, அண்ணன்மாருக்கு (வெறுப்பு தோன்றாத வகையில்) திறம்பட (அவர்கள் மனத்தில்) பதியும்படிக் கூறினாள்.

அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக்
கண் சேந்து,
ஒருபகல் எல்லாம் உருத்து, எழுந்து, ஆறி,
இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து, சாய்த்தார் தலை. (22–25)

அவர்களும் (அன்னையின் சொற்களைக் கேட்டவுடன்) தம்முடைய ஆராய்ந்தெடுத்த அம்புகளைப் பார்த்தும் (வெற்றியைத் தப்பாமல் அளித்த) வில்லைப் பார்த்தும், கண்கள் சிவந்து, ஒரு பகல் முழுவதும் கோபம் மிக்குடைய வராய் இருந்து (பின்னர்) தணிந்து, இருவரிடத்தும் குற்றம் இல்லை என்று (உணர்ந்து) சுழன்று, தலை கவிழ்ந்தனர்.

வெற்றியைத் தப்பாமல் தரும் வில்லும், அன்பும் இருந்தும், அவற்றைப் பயன்படுத்துவதற்கில்லையே என்ற எண்ணம் சினத்தை மூட்டியது; அவற்றைப் பார்க்கப் பார்க்க, அவை தம்மைப் பழிப்பன போல் தோன்றவே மூண்ட சினம் மிக்கது. வெகுநேரம் சென்று சினம் தணிந்தபின், தலைவியினிடமோ, அவளை அருளால் காத்த தலைவனிடமோ குற்றமில்லை என்ற உணர்வு வந்தது. குற்றமற்ற தேனும், அவர்கள் உறவு தமர் ஆற்றலைப் பழிப்பது போல காணப்படுவதாலும், அப்பழியைப் போக்கிக் கொள்ள முடியாத செயலற்ற நிலையில் அது அவரை ஆழ்த்தியிருப்பதாலும் சுழன்றனர். சுழற்சியினின்றும் தெளிந்தபின், குற்றமில்லாததொன்று, தம்மை வீணே சினமூட்டியதையும், சுழலவைத்ததையும் உணர்ந்து இவ்வாறு ஆராயாது உணர்ச்சி வசப்பட்டு சினந்து, ஆறி, சுழன்றமைக்கு நாணித் தலை கவிழ்ந்தனர். தங்கள் இசைவை வெளிப்படுத்தாவிடினும், அவர்களுடைய தலை சாய்ந்த நிலையிலிருந்து, நொதுமலர்க்கு வரைவு உடன்படமாட்டார் எனத்தோழி உணர்ந்து கொண்டாள்.

தெரிஇழாய்! நீயும்நின் கேளும் புணர
வரைஉறை தெய்வம் உவப்ப, உவந்து
குரவை தழீஇயாம் ஆட, குரவையுள்
கொண்டு நிலைப்பாடிக் காண். (26–29)

ஆராய்ந்த அணிகளைப் பூண்டவளே! நீயும் உன்னுடைய காதலனும் மணக்க (வேண்டும் என்று) இம் மலையில் உள்ள தெய்வம் மனம் விரும்ப, நாம் மகிழ்ச்சியுடன் (தெய்வத்தைப் பரவக்) கைகோத்து ஆடும் குரவைக் கூத்தை ஆட, (அதற்குரிய) கொண்டுநிலை பாடலைப் பாடு.

வரைஉறை தெய்வம் முருகன். ஒருவர் கூறுவனவற்றை மற்றவர் ஏற்றுக் கொள்வதுபோல் அமைந்தவை கொண்டு நிலைப்பாடல்கள்.

நல்லாய்!
நன்னாள் தலைவரும் எல்லை, நமர்மலைத்
தம்நாண்தாம் தாங்குவார், என்நோற் றனர்கோல்!
(30–32)

நல்லவளே! நம் மணநாளாகிய நன்னாள் வரும்வரை, (தலைவனை நாமே தெரிந்து கொண்டதனால்) நம்மலையில் வாழ்வார்க்கு ஏற்படும் நாணத்தைத் தாமே பொறுத்துக் கொண்டிருப்பவர் எத்தகைய கடினமான நோன்பை மேற்கொண்டவராகின்றனர்!

'மலை' ஆகுபெயராய் அங்கு வாழ்வாரை உணர்த்திற்று. தம் சம்மதமின்றித் தலைவி காதலனைத் தெரிந்துகொண்டது, தமருக்கு நாணத்தைத் தரும்; அது மணநாள் வரை இருக்கும். தாமே பட்டினிபோன்ற நோன்பை மேற்கொண்டு, துன்பம் தேடிக் கொண்டவர் நிலையிலும், தலைவியால் நாணமடைந்து அதனைப் பொறுத்துக் கொண்டிருப்பார் நிலை இரங்கத் தக்கதாகையால், தலைவி அவர்கள் செயலை வியந்து கூறுகிறாள்.

புனவேங்கைத் தாதுஉறைக்கும் பொன்அறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ!
நனவிற் புணர்ச்சி நடக்கலும், ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ (33–36)

தினைப் புனத்தில் உள்ள வேங்கை மலர்களின் தாது உதிர்ந்து, பொன்னைப்போல் (ஒளிவிடும்படி செய்த)

பாறையையுடைய முற்றத்தில், (மணமானபின்) உண்மைப் புணர்ச்சி நடக்குமல்லவா? அப்பொழுதே, மாயப்புணர்ச்சி யின் நினைவை நீக்கிவிடலாம் அல்லவா?

அறை-அறுக்கப்பட்ட கல்; தாது படிந்து பாறை பொன்னிறம் பெற்றது. கனவு காணும்பொழுது, மாயப்புணர்ச்சி மகிழ்விக்கும்; விழித்துக் கொண்டதும் துன்பத்தைத் தரும். 'நல்லாய்' என்பது தொடங்கி இதுவரை தலைவி கூற்று.

விண்தோய்கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டுஅறியா தீர்போல் படர்கிற்பீர் மன்கொலோ!
பண்டறியா தீர்போல் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போல் கரக்கிற்பென் மன்கொலோ!
(37–40)

ஆகாயத்தில் படியும் (உயர்ந்த) மலை நாட்டின் தலைவனும், நீயும் மணஞ்செய்து கொள்கையில், அதற்கு முன் ஒருவரை ஒருவர் பார்த்தறியாதவரைப்போல் நடந்து கொள்ளும் உங்கள் பழைய உறவை அறியாதவளைப்போல் நானும்) மறைப்பேனன்றோ?

மைதவழ் வெற்பன் மணவணி காணாமல்
கையால் புதைபெறும் கண்களும் கண்களோ?
(41, 42)

மேகம் தவழ்கின்ற (உயர்ந்த) மலையின் தலைவனுடைய மணக்கோலத்தைக் காணாமல், கைகளால் அழுந்த மூடப் பெறும் கண்களும் கண்களாகுமோ?

'கரியவனைக் காணாத கண் என்ன கண்ணே' -சிலம்பு; கண் இருந்தும் பயனில்லை என்பதாம். தலைவி மணப்பெண்ணாகையால் 'புதைபெறும் கண்களை' உடையவளாகக் கூறப்படுகிறாள். இவை தோழி கூற்று.

என்னைமன்! நின்கண்ணால் காண்பென் மன்யான்!
(43)

என் கண்கள் புதைபெற்றால் என்ன! உன் கண்களால் அக்கோலத்தை மிக நன்றாகக் காண்பேன் நான்.

தலைவன் எழிலைத் தானே கண்டு அறிவதினும், பிறர் விவரிக்கக் கேட்பதே மிக்க மகிழ்ச்சி அளிக்கும். இது தலைவி கூற்று.

நெய்தல் இதழ்உண்கண்! நின்கண்ஆக என்கண்மன. (44)

நெய்தல் மலரின் இதழ்களைப் போன்ற ஆளை விழுங்கும் கண்களை உடையவளே! என் கண்களும் மிகவும் உன் கண்களைப் (போன்றவையே) ஆகட்டும்.

தலைவியின் குறிப்புணர்ந்த தோழி, தானும் அவளைப் போலவே தலைவன் எழிலை விவரிக்கக் கேட்டு மகிழவேண்டும் என விரும்புகிறாள். இது தோழி கூற்று.

என ஆங்கு
நெறிஅறி செறிகுறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை அறியும் சான்றவர் இனமாக,
வேய்புரை மென்தோள் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடன்நீங்கச்
சேய்உயர் வெற்பனும் வந்தனன்;
பூஎழில் உண்கணும் பொலிகமா இனியே! (45–51)

என்று பாடி நாம் குரவை ஆடிய காலத்து, நூல் நெறிகளை நன்றாக அறிந்தவனும், (இருவரை மணத்தில்) சேர்க்க வைத்த முகூர்த்தம் மாறித் தப்புதலை அறியாதவனும் ஆகிய அறிவு சான்ற சோதிடனை முதல்வனாகக் கொண்டு, சிறப்புமிக்க தொகுத்துக்கூறல், வகுத்துக்கூறல் (என்ற இரண்டு ஆற்றலையும் இடத்துக்கேற்பக் கையாளும் திறனைத்) தெரிந்த பெரியோர் சுற்றத்தாராகச் (சூழ்ந்துவர) மூங்கிலை ஒத்த மெல்லிய (உன்) தோள்களில் (படர்ந்த) பசலையும், (அயலார் (குசுகுசுவெனப் பேசும்) பழிச் சொற்களும், கனவிற் புணர்ச்சியும் ஆகிய துன்பங்கள்

அனைத்தும் ஒருங்கே தொலைய (உன்னை மணக்கக் கருதி) மிக உயர்ந்த மலையின் தலைவனும் வந்தனன்! (ஆகவே உன்னுடைய) பூவை ஒத்த அழகுமிக்க ஆளைவிழுங்கும் கண்களும் இனி மிகவும் ஒளிபெறட்டும்.

பசலை-கண்ணாடியை வாயால் ஊதியவுடன், அதன் பளபளப்பான தன்மை மாறுவதைப் போல், தனிமைத் துயரால் அழகு மங்கிய மேனியின் நிறம்; அம்பல்-மெதுவாகப் பழிப்பது; இது முற்றின் அலராகும்.

## 4. அகவினம் பாடுவாம்

தலைவி தினைப்புனம் காக்கிறாள். தலைவன் நாள் தோறும் பகலில் அவளோடு சேர்ந்திருக்க நல்ல வாய்ப்பு இருக்கிறது. கதிர் முற்றி, அறுவடை நாள் நெருங்கவே தலைவிக்கு அச்சம் தோன்றத் தொடங்கிற்று. அவனை இரவில் சந்திக்க அவள் பயப்பட்டாள். அலருக்கு அஞ்சி, களவொழுக்கத்தை நீட்டிக்க விரும்பாத தலைவிக்கு இரங்கி, தோழி தலைவனை மணஞ்செய்து கொள்ளுமாறு தூண்டத் துணிந்தாள். தன் மனநிலையை அவனுக்கு நேரில் உரைத்து வற்புறுத்துவதைக் காட்டிலும், அவன் அதனை நன்கு உணருமாறு செய்வதே சிறந்தது என அவள் கருதினாள். தலைவன் வழக்கமாக வரும் நேரத்தில், பொழுது போக்குக்காக, அவளும் தலைவியும் நெல் குத்தும்பொழுது தலைவன் மலையை வியந்தும், தலைவியின் மனநிலையை வெளிப்படுத்தியும் வள்ளைப் பாடல்களை இருவருமாகப் பாடினார்கள். இவர்கள் பாடுவதைக் கேட்டுக்கொண்டே வந்த தலைவன், தன் வருகையை வெளிப்படுத்தாமல், பாடல்களைக் கவனித் தான். தலைவியின் மனக்கவலையை உணர்ந்து, விரைவில் அவளை மணந்துகொள்ள ஏற்பாடு செய்வதாகத் தோழியிடம் உறுதி அளித்தான். இம் மகிழ்ச்சி தரும்

இச்செய்தியைத் தோழி தலைவிக்குத் தெரிவிப்பதைச் சித்தரிக்க வந்த இப்பாடல், அவர்கள் பாடிய வள்ளப் பாடல்களைக் கொண்டதாகவும் அமைந்திருக்கிறது.

> அகவினம் பாடுவாம்; தோழி! அமர்க்கண்
> நகைமொழி நல்லவர் நாணும் நிலைபோல்
> தகைகொண்ட ஏனலுள் தாழ்குரல் உரீஇ,
> முகைவளர் சாந்துஉரல் முத்துஆர் மருப்பின்
> வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சிப்
> பகைஇல் நோய்செய்தான் பயமலை ஏத்தி
> அகவினம் பாடுவோம் நாம்... (1–7)

*தோழி! அழைத்தோமாய்ப் பாடுவோம் வா, (முகத்தின் அழகை மிகுத்துக் காட்ட) பொருந்திய கண்களையும், மகிழ்ச்சியை விளைவிக்கும் இனிய மொழிகளையும் உடைய நல்ல மகளிர் நாணத்தால் தலை சாய்த்து நிற்கும் தன்மையை ஒப்ப, தினைப்புனத்தில் மணிகள் முற்றியதால் (பாரம் தாங்காது) வளைந்து காணப்படும் அழகு கொண்ட கதிர்களை உருவிக் கொண்டுவந்து, அரும்புகள் விட்ட சந்தன மரத்தால் செய்யப்பட்ட உரலில் (இட்டு), (உள்ளே விளைந்து முற்றிய) முத்து நிறைந்த யானைத் தந்தங்களால் (செய்யப்பட்டு, பிடித்துக்கொள்வதற்கு) வாய்ப்பாய் அமைந்து (வேலைப்பாடு நிரம்பிய) உலக்கைகளை என்னிடமும் உன்னிடமும் (மாறி மாறி) உயர்த்திக் குத்துகையில், மருந்து காணமுடியாத நோயைச் செய்தவனுடைய பயனளிக்கும் மலையைப் புகழ்ந்து அழைத்தோமாய்ப் பாடுவோம் வா.*

அகவுதல்–அழைத்தல். தன் விருப்பத்துக்குத் தலைவியை இசைய வைக்க முயல்கிறாளாகையால், அகவினம் பாடுவாம் எனத் தோழி இருமுறை அழைக்கிறாள். இது தோழி கூற்று.

முற்றி வளைந்த கதிர்களைக் குத்துவார் பயன் பெறுதலைப் போல, நல்வரைச் சேர்ந்து இல்லறம் நடத்துவார் நல்லறம் புரிவார் என்பது குறிப்பு.

ஆய்நுதல் அணிகூந்தல் அம்பணைத் தடமென்தோள்
தேன்நாறு கதுப்பினாய்! யானும்ஒன்று ஏத்துகு
வேய்நரல் விடர்அகம் நீஒன்று பாடித்தை. (8–10)

அழகிய நெற்றியையும், அழகு செய்யப்பெற்ற கூந்தலை யும், பசுமையான மூங்கிலை ஒத்த பெருமையையு முடைய மெல்லிய தோள்களையும், மணங் கமழும் முடியையும் உடையவளே! நானும் அவன் மலையைப் புகழ்ந்து பாடுகின்றேன்; இப்பொழுது மூங்கில் ஒலிக்கும் பிளவிடங்களையுடைய அம்மலையைப் பற்றி நீ ஒரு பாட்டைப்பாடு.

விடர்-பிளவு, குகை; நெற்றிக்கு இயற்கை அழகும், கூந்தலுக்குச் செயற்கை அழகும் கொள்ளப்பட்டன. கூந்தல் நெற்றியில் படிந்திருக்கின்ற கோலத்தையும், கதுப்பு கொண்டையையும் குறிக்கும்.

கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்
எடுத்த நறவின் குலைஅலங்கு காந்தள்
தொடுத்ததேன் சோர, தயங்கும்,தன் உற்றார்
இடுக்கண் தவிர்ப்பான் மலை. (11–14)

தன்னைச் சேர்ந்தவருடைய துன்பத்தைத் துடைத்து மகிழ்விப்பவனுடைய மலையின் மீது, குறப்பெண்கள் மலைத் தெய்வமாகிய முருகனைத் தொழ கைகளைக் குவித்து வைத்திருக்கும் காட்சி போல, உயர்ந்த மணத்தையுடைய காந்தள் பூங்கொத்துகள், (காற்றால் அசைக்கப்பட்டு) தம்மிடத்தே உள்ள தேனைச் சொரிந்தபடி ஒன்றோடு ஒன்று பொருந்தி விளங்கும்.

'வரை' ஆகுபெயராய் முருகனை உணர்த்திற்று. காந்தள் கொத்துகள் சேர்ந்து காணப்படுவது கொடிச்சியர் கைகள் கூப்பி இருப்பதற்கு ஒப்பாகிறது. அவன் மலையிலுள்ள காந்தள் கிடைத்தற்கரிய இனிய

தேனை வீணே சொரிந்து பாழாக்குதல் போல அவனும் தலைவியின் நிலைபேறில்லாத இளமைச் செவ்வியை நுகராது பாழ்படுத்துகின்றான். இது தோழி கூற்று.

கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து
மெல்விரல் மந்தி குறைகூறும் செம்மற்றே,
தொல்எழில் தோய்ந்தார் தொலையின், அவரினும்
அல்லல் படுவான் மலை. (15–18)

தன்னைப் புணர்ந்தவருடைய இயற்கை அழகு அழிந்தால், அவர்களைக் காட்டிலும் மிகுதியாகத் துன்பப்படும் உயர்ந்த கொள்கையுடையவனுடைய மலையில், தாவுதல் ஒழித்து வேறு ஒன்றையும் அறியாத ஆண் குரங்கு, தன்னுடைய கூட்டம் மிக்க சுற்றத்தாரோடு சென்று, மெல்லிய விரல்களையுடைய பெண் குரங்கைத் (தனக்கு மணஞ்செய்து தரவேண்டும் என்று) கேட்டுக்கொள்ளும் சிறந்த ஒழுக்கத்தை மேற்கொண்ட தன்மையுடையது.

'தோய்ந்தார் தொல் எழில் தொலையின்' எனமாற்றிக் கூட்டுக. அவன் மலையில் வாழும் குரங்கும் சிறந்த ஒழுக்கத்தை மேற்கொள்ளும் தன்மையுடையது. எனவே, அவன் பண்பாட்டின் உயர்ச்சியைக் கூறவேண்டா என்பதாயிற்று. இது தலைவி கூற்று.

புரிவிரி புதைதுதை பூத்ததைந்த தாழ்சினைத்
தளிர்அன்ன எழில்மேனி தகைவாட நோய்செய்தான்
அருவரை அடுக்கம்நாம் அழித்தொன்று பாடுவோம்.
(19–21)

முறுக்கு விரிந்தும், மகரந்தப்பொடி மலிந்தும் உள்ள பூக்கள் செறிந்த, தாழ்ந்த கொம்புகளிலே உள்ள (மகரந்தப் பொடி விழுந்து நிறைந்த) இளந்தளிர்களைப் போல, அழகுடைய மேனியின் ஒளி மங்கும்படி துன்பத்தைத் தந்தவனுடைய ஏறுதற்கரிய பக்கமலைகளைப் பழித்து நாம் ஒரு பாட்டைப் பாடுவோம்.

இயற்கை அழகுடன் இருக்கும் தளிர் மாமைக்கவினோடு கூடிய மேனிக்கு உவமை; மகரந்தத்தால் மூடப்பெற்ற தளிர் பசப்பூரப்பட்ட மேனிக்கு உவமை. மகரந்தம், தான் தோன்ற ஆதாரமாக இருந்த மரத்தின் இலைகளையே மாசுபடுத்துவதைப் போல, தலைவனும் தனக்கு இன்பத்தைத் தந்த தலைவியின் மேனியையே வாடச் செய்கிறான். இது தோழி கூற்று.

விண்தோய் வரைபந்து எறிந்த அயாவீடத்
தண்தாழ் அருவி அரமகளிர் ஆடுபவே,
பெண்டிர் நலம்வெளவித் தண்சாரல் தாதுஉண்ணும்
வண்டின் துறப்பான் மலை. (22–25)

குளிர்ச்சி பொருந்திய மலைச்சாரலில் (உள்ள) பூக்களின் மகரந்தப் பொடியை உண்ணும் வண்டு (உண்டபின் அப்பூக்களை விட்டுவிட்டுச் சென்று விடுவதைப்போல) பெண்களுடைய அழகைத் துய்த்து (அவரைப் பின்னர்) துறந்து விடுபவனுடைய மலையில், பந்தடித்து (விளை யாடிய) தெய்வப் பெண்கள் தம் தளர்ச்சி நீங்க மலை உச்சியிலிருந்து குளிர்ச்சி உடையதாய் இறங்கிவரும் அருவியில் நீராடுவார்கள்.

தாழ்தல் மேலிடத்திலிருந்து கீழ்நோக்கி ஓடுதல்; அவன் மலை அருவியில் தன்னை ஒழிந்த பிறமகளிரை ஆடவிட்ட கொடுமையை எண்ணித் தலைவி அவனை வண்டிற்கு ஒப்பிடுகிறாள். வண்டொடு அவனை ஒப்புமைப் படுத்தியது துறந்ததற்கு மட்டுமே. இது தலைவி கூற்று.

ஒடுங்கா எழில்வேழம் வீழ்பிடிக்கு உற்ற
கடுஞ்சூல் வயாவிற்கு அமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கண் கரும்பின் கழைவாங்கும் உற்றாரின்
நீங்கலம் என்பான் மலை. (26–29)

தன்னைச் சேர்ந்தாரை விட்டுப் பிரியமாட்டேன் என்று கூறுபவனுடைய மலையில், ஒன்றுக்கும் அஞ்சாத அழகுடைய ஆண் யானை தான் விரும்பிய பெண்

யானைக்குத் தோன்றிய முதற் சூலால் ஏற்பட்ட மசக்கை நோய்க்கு மனம் பொருந்தி, நீண்ட கிளைகளுடையதும் இனிமையானதும், கணுக்களில் தோன்றியதுமாகிய கருப்பங்கோலை ஒடித்து வரும்.

'அழித்தொன்று பாடுவாம்' எனக் கூறினாளேனும், தலைவி அவனிடத்துக் கண்ட குறைக்கு (அரமகளிரை ஆடவிட்டமைக்கு) அவன் பொறுப்பாளி இல்லையாகையால், அவளும் அவனைப் புகழ்ந்தே பாடினாள். அவன் மலையில் உள்ள யானை தன் பிடியினிடத்து அன்புடையதாயிருப்பது போல, அவனும் தலைவி மாட்டு அன்புடையவனே. இது தோழி கூற்று.

என நாம்
தன்மலை பாட நயவந்து கேட்டருளி
மெய்ம்மலி உவகையன் புகுதந்தான் புணர்ந்துஆரா
மென்முலைஆகம் கவின்பெறச்
செம்மலை ஆகிய மலைகிழ வோனே. (30–34)

என்று நாம் அவன் மலையைப் (புகழ்ந்து) பாடவும் அதனை மிக்க விருப்பத்துடன் கேட்டு, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சி உடையவனாகிய மலைத்தலைவன், முயங்கி அமையாத மெல்லிய முலைகளையுடைய நின் மார்பு அழகு பெற்றுப் பொலியவும், நீ அதனால் தலைமையை உடையவளாக ஆகவேண்டியும் (உன்னை மணம் பேச) வந்தான்.

மெய்ம்மலி உவகை-உள்ளம் பூரித்தற்குரிய மகிழ்ச்சி; 'கேட்டருளி' (ஒரு சொல் நீர்மைத்து). அணைக்க அணைக்க ஆசையைச் சிறிதும் தணிப்பிக்காது, மேலும் அணைத்துக் கொள்ள வேண்டும் என்ற வேட்கையை விளைவிப்பனவாகையால் 'புணர்ந்தாரா மென்முலை' என்றார்.

## 5. பாடுகம் வா! வாழி தோழி!

தலைவியைக் காண ஆவலோடு வந்தான் தலைவன், தலைவியும், தோழியும் பாடிக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் பாட்டை அவன் மறைந்து நின்று கேட்டான். ஒருத்தி தன்னைக் கொடியவன் என்றும், இன்னொருத்தி அதனை மறுத்துரைத்தும் பாடுவதை உணர்ந்தான். தான் மணந்து கொள்ளாமல் களவொழுக்கத்தை நீட்டிப்பதே தன்னைக் கொடியவனாக்கியது எனக்கண்டான். நன்னாள் ஒன்றில் மணம் பேசவந்தான். தலைவியின் தகப்பன் அவன் வேண்டுகோளுக்கு இணங்கினான். இந்நற்செய்தியைத் தலைவிக்குத் தோழி உரைக்க வந்ததைக் கூறும் இப்பாடல், அவர்கள் பாடிய வள்ளைப் பாடல்களையும் பெற்றிருக் கின்றது.

பாடுகம் வாவாழி தோழி! வயக்களிற்றுக்
கோடு உலக்கை ஆகநல் சேம்பின் இலைசுளகா,
ஆடுகழை நெல்லை அறைஉரலுள் பெய்து இருவாம்
பாடுகம் வாவாழி தோழி! நல்தோழி! பாடு உற்று. (1–4)

தோழி! வாழ்வாயாக; நாம் பாடுவோம் வா. வலிய யானையின் கொம்பை உலக்கையாகவும், நல்ல சேம்பின் இலையை முறமாகவும் (கொண்டு) அசைகின்ற மூங்கிலின் நெல்லை (பாறையை) அறுத்துச் செய்யப்பட்ட உரலில் இட்டுக் குத்துவோம் வா தோழி! வாழ்வாயாக! உண்மையான உணர்ச்சியோடு (பாடுவோம் வா).

'பாடு'-வரம் பெருமை; வரம் கிடப்பவர் மனநிலையோடு பாடுவோம் என்பது பொருள். தலைவன் மலையின் பெருமையைப் பாடுவோம் என்பதும் பொருந்தும். பல நாள் தன்னைத் தலைவன் வந்து பாராதிருந்த கொடுமையை எண்ணி வருந்தியிருக்கும் தலைவியை வருந்தி அழைக்கிறாளாகையால் அவளை 'நல் தோழி' எனப் புகழ்வதோடு பல முறை வேண்டி அழைக்கிறாள்.

இடிஉமிழ்பு இரங்கிய இரவுபெயல் நடுநாள்
கொடிவிடுபு இருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயும் புன்செய் யானை
அடிஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்,
நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்
கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின். (15–10)

இடி ஒளியைக் கக்கி ஒலிக்கும் இரவில், மழை பெய்யும் நடுநிசியில், கொடி படர்வதுபோல ஒளிவிட்டு உடனுக் குடன் இருளைச் செய்த மின்னல் உண்டாக்கிய ஒளியைப் (பயன்படுத்திக் கொண்டு) தன்னுடைய பிடியுடனே வந்து புன்செய் நிலங்களில் மேயும் யானையின் அடி எடுத்து வைக்கும் ஓசையைக் கேட்ட மறவன், உயர்ந்த மலையி லுள்ள ஆசினி மரத்தில் அமைத்த பரணின் மீது ஏறி, (கற்கள்) வேகமாகச் செலுத்தும் தன்மையையுடைய கவணில் (இருந்த) கல்லை விடுவிப்பதனால்,

இடிஇடிக்கும் போது மின்னுவதை ஒளியை உமிழ் வதாகக் கூறியிருக்கிறார். மின்னல் தோன்றிய பின்னரே, ஓசை கேட்குமாகையால் 'உமிழ்பு இரங்கிய' என்றார். இரங்குதல்-ஒலித்தல்; இயக்கம்-போக்கு; யானை இருளில் நிதானித்து நடக்கின்றன வாகையால் 'ஒதுங்கு இயக்கம்' என்றார். மின்னல் வெட்டும் பொழுது நின்று, இருண்ட தும் மெதுவாய் நகரும் என்பதனை 'அடி ஒதுங்கு இயக்கம்' என்ற தொடர் குறிப்பிடுகின்றது. பணவை- பரண்.

இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிரா
தேன்செய் இறாஅல் துளைபடப் போகி,
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி
குலைஉடை வாழைக் கொழுமடல் கிழியா
பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனைப்
பாடுகம் வாவாழி தோழி! நல் தோழி !பாடு உற்று.
(11–17)

(அக்கல்) வெப்பத்தினால் பிளவுபட்ட (பாறைகளை உடைய) மலையில் உள்ள வேங்கை மரத்தின் ஒளி பொருந்திய மலர்களை (எல்லாப் பக்கங்களிலும்) தூற்றி ஆசினியின் மென்மையான பழங்களுள் முற்றி அளிந்தவற்றை உதிர்த்து, தேன் வண்டுகள் கட்டிய கூட்டை துளை படும்படி ஊடுருவிச் சென்று, நல்ல வடுக்களை யுடைய மாமரத்தின் பசுமையான கொத்துகளைக் கலக்கி, தார் வீழ்ந்த வாழையின் வளப்பமான மடலைக் கிழித்துக் கொண்டு (சென்று, பலாப் பழத்தினுள் தங்கும், வளம் மிக்க குன்றுகள் பலவற்றை உடைய பெரிய மலைநாட்டுத் தலைவனை, தோழி பாடுவோம் வா! உண்மையான உணர்ச்சியுடன் பாடுவோம் வா. இது தோழி கூற்று.

எறியப்படும் கல் முதலில் மேல் நோக்கிச் சிறிது தூரஞ் சென்று, பின்னர் படிப்படியாகக் கீழ் நோக்கி வந்து 'தரையைச் சேரும் என்ற உண்மையைக் கானவன் 'விட்ட கல் தாக்கிய பொருள்களை விவரிப்பதன் வாயிலாய்ப் பெறவைத்திருக்கிறார். குறிக்கோளையும் அடையாது பல நல்ல பொருள்களையும் பாழ்படுத்திய கானவன் முயற்சியைப் போல, அவன் தலைவனாகிய மலைக் கிழவனின் முயற்சியும்-முயற்சியின்மையும்-அவனையும் இன்பமடையச் செய்யாது, தலைவியின் நலனையும் பாழ்படுத்துகின்றது.

இலங்கும் அருவித்து, இலங்கும் அருவித்தே!
வானின் இலங்கும் அருவித்தே! தான்உற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை. (18–20)

தான் ஏற்ற சபதத்தைப் பாதுகாக்கும் எண்ணம் இன்றியே, பொய்யாகச் சபதஞ் செய்வதவனுடைய மலை, விளங்குகின்ற அருவிகளை உடையது! இந்திர வில்லைப் போன்ற எழில்மிக்க அருவிகளை உடையது!

வான் ஆகுபெயராய் வானவில்லை உணர்த்திற்று.

'இந்திர வில்லின் எழில்கொண்டு இமுமென்று
வந்தீங்கு இழியும் மலை யருவி' —சிலப்பு

தலைவன் கொடுமையையே நினைந்திருக்கும் தலைவி, அவன் 'சூள் செய்த பொழுதே பொய்த்தான்' எனப் பழித்து கூறுகிறாள். பொய் யொழுக்கம் உடையவனுடைய மலையிலும், மழை பெய்து, அருவிகள் ஒடுகின்றனவே என்ற வியப்பு காரணமாய்ப் பல முறை கூறுகிறாள். இது தலைவி கூற்று.

பொய்த்தற்கு உரியனோ? பொய்த்தற்கு உரியனோ?
'அஞ்சல்ஓம்பு' என்றாரைப் பொய்த்தற்கு உரியனோ?
குன்றுஅகல் நல்நாடன் வாய்மையில் பொய்தோன்றின்
திங்களில் தீத்தோன்றி அற்று. (21–24)

பொய் ஒழுக்கத்தைப் பேணும் தகுதியுடையவனோ? 'நீ அஞ்சாதே. (நான் உன்னைக் கைவிட மாட்டேன்) என் சொற்களை நம்பு' என்று (உறுதி கூறித்) தன் உரையைப் பற்றுக்கோடாகக் கொள்ள வைத்தவர்களைப் (பாதுகாக்காமல்) பொய் ஒழுக்கத்தை மேற்கொள்ளும் தகுதியுடையவனோ? பல குன்றுகளைப்பெற்று அகன்ற நல்ல மலை நாட்டுத் தலைவனுடைய பேச்சில் பொய் உண்டாகுமேயானால் அது குளிர்ச்சி மிக்க சந்திரனிடத்து வெப்பமான கிரணங்கள் உண்டாவதை ஒக்கும்.

'சூள் பேணாததைத் தோழியும் ஒப்புகிறாள்: ஆனால் சபதம் செய்யும்பொழுதே பொய்த்தான் என்ற எண்ணத்தைப் போக்க முன் வருகிறாள். சந்திரனிடத்து வெம்மை தோன்றாததைப் போல், அவனிடத்தும் பொய் தோன்றாது என்பது கருத்து, அனுபவிப்பவர் மன நிலைக்கு ஏற்றபடி சந்திரகிரணங்கள் தண்மையும், வெப்பமும் உடையவாகத் தோன்றுதலைப் போலவே, தலைவன் ஒழுக்கமும் தலைவிக்குப் பொய் ஒழுக்கமாகத் தோன்றுகிறது. அவன் சூள் பேணாமைக்குத் தக்க காரணம் இருக்கவேண்டும் என்பது தோழியின் உறுதி. இது தோழி கூற்று.

இளமழை ஆடும்! இளமழை ஆடும்;
இளமழை வைகலும் ஆடும்! என் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று. (25–27)

என் முன் கையில் உள்ள வளையல்கள் கழன்று போகும் படி செய்து, என்னை அருள் செய்தற்கு வராதவனுடைய மலையில் இளமழை உலவும்! இளமழை தினமும் உலவும்!

கருத்தங்கி வந்து சூல் முதிர்தற்கு மலையில் மேய்கின்ற மழை என்பது தோன்ற இளமழை என்றார். இத்தகைய இளமழை உலவும்பொழுது, தட்பவெப்ப நிலை மிக்க மகிழ்ச்சி அளிப்பதாய் இருக்கும். இக்காலத்தில், அவன் வராமலிருந்து, அவள் இயற்கையால் அடையக் கூடிய இன்பத்தையும் அடையவொட்டாமல் செய்கிறான். இது தலைவி கூற்று.

வாராது அமைவானோ? வாராது அமைவானோ?
வாராது அமைகுவான் அல்லன்; மலைநாடன்
ஈரத்துள் இன்னவை தோன்றின், நிழல்கயத்து
நீருள் குவளைவெந் தற்று. (28–31)

வராமல் பொருந்தி இருப்பானோ? (அவன்) வராமல் பொருந்தி இருப்பவன் அல்லன். மலைத் தலைவனுடைய அன்பில் (அவன் உன்னைத் துன்பம் அடையச் செய்வது போன்ற) கொடுமை தோன்றுமானால், அது நிழலில் உள்ள குளத்திலிருக்கும் குவளை மலர் வெந்து கருகியதை ஒக்கும்.

ஈரம்-அன்பு. அவன் விரும்பி வராதிருக்கவில்லை, தவிர்க்க முடியாத தடையே அவனை வராமலிருக்கச் செய்கிறது என்று தோழி கருதுகிறாள். இது தோழி கூற்று.

மணிபோலத் தோன்றும்! மணிபோலத் தோன்றும்!
மண்ணா மணிபோலத் தோன்றும்!என் மேனியைத்
துன்னான் துறந்தான் மலை. (32–34)

என்னை நெருங்கி வராமல் நீங்கியிருப்பவனுடைய மலை நீலமணிபோலத் தோன்றும்! கழுவாத நீலமணி போலத் தோன்றும்.

'மண்ணா மணி' மணியின் இயற்கை எழிலைக் குறிப்பிடுகிறது. அவன் மலையும் அதன் மீதுள்ள பொருள்களும் இயற்கை எழிலுடன் ஒளி சிறந்து விளங்குகின்றனவேனும், அவன் அன்பற்றவனாய்க் காணப்படுகின்றானே என்று தலைவி வருந்துகிறாள். வருத்த மிகுதி யால் பேசும் தலைவி கூற்றுகள் குறைந்த அடிகளால் இயன்றும், அவளுக்கு ஆறுதல் கூறும் தோழியின் கூற்றுகள் நான்கடி உடையவையாயும் இருத்தல் கவனிக்கத் தக்கது. இது தலைவிகூற்று.

தலைவி முதன் முதலாகத் தலைவன் சூள் பொய்த்தமையைக் கூறிவிட்டு, பின்னர் அதன் காரணமாகத் தன் வளைகள் கழன்றதை யும், மேனி வாடியதையும் குறிப்பிடுகிறாள். இம்முறைவைப்பு காரண காரியத் தொடர்புடையதாய், தலைவியின் துன்ப எல்லையைப் படிப்படியாய்ப் பெருக்கிக் காட்டுவதாய் அமைந்திருக்கிறது. வளை ஒழிந்தாலும், பின் செய்து கொள்ளலாம்; மேனி மாறுபாடு அடைந்தால், அதனை முன்னர் இருந்த இயற்கை எழிலைப் பெறச் செய்வது எப்படி? மேனி கட்டுத் தளர்வதையும் பொருட்படுத்தாமல் இருக்கின்றானே என்பது தலைவியின் குற்றச்சாட்டு.

துறக்குவன் அல்லன்; துறக்குவன் அல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன்;
தொடர்புள் இனையவை தோன்றின், விசும்பில்
சுடருள் இருள்தோன்றி அற்று. (35–38)

நம்மைக் கைவிடும் (இழிகுணம்) உடையவன் அல்லன்; தொடர்ச்சியான பல மலைகள் (சேர்ந்த பெரிய) மலைநாட்டுத் தலைவன் நம்மைக் கைவிடுபவன் அல்லன்; (அவன்) நட்பில் (இத்தகைய) கொடுமை தோன்றுமானால், அது ஆகாயத்திலுள்ள, சூரியனில் இருள் தோன்றுவதை ஒக்கும்.

என ஆங்கு
நன்றா கின்றால், தோழி! நம் வள்ளையுள்
ஒன்றி, நாம் பாட, மறைநின்று கேட்டருளி
மென்தோள் கிழவனும் வந்தனன்; நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழ்இருந்து
மணம்நயந் தனன்நம் மலைகிழ வோற்கே. (39–44)

என்று நாம் பாடியது, தோழி! நமக்கு நன்மையைப் (பயப்பதாய்) ஆகியது. நம்முடைய வள்ளைப் பாட்டில் கருத்தைச் செலுத்தி நாம் பாடிக்கொண்டிருக்க, (நமக்குத் தெரியாமல்) மறைந்து நின்று கேட்டவனும் உன்னுடைய மெல்லிய தோள்களை உரிமையாக உடையவனுமாகிய தலைவன் மணம் பேச வந்தான். உன் தந்தையும் மண முடைய வேங்கை மரத்தின் கீழ் இருந்தபடி, அம்மலைத் தலைவனுக்கு உன்னை மணஞ் செய்விக்க விரும்பி (ஏற்றுக் கொண்டான்)

தலைவன் வந்ததனைக் காண முடியாதபடி கருத்தொன்றி வள்ளைப்பாட்டைப் பாடுதலில் ஈடுபட்டிருந்தனர் எனக் கூறலும் ஏற்கும். நன்னாள் கண்டு பூக்கும் வேங்கை நற்செயல்கள் சூழச் சிறந்த இடமாகையால் 'மன்றல் வேங்கை' என்றார்.

## 6. மறங்கொள் இரும்புலி

தலைவியும், தோழியும் தினைப்புனத்தில் இருக்கின்றனர். இருவர் முகங்களும் வாடி இருக்கின்றன. தலைவன் சில நாட்களாக வராமல் இருந்ததே இவ்வாட்டத்திற்குக் காரணம். பொழுதைக் கழிப்பதே அவர்களுக்குக் கடினமாய் இருந்தது. நெல் குத்தியாவது பொழுதைப் போக்குவோம் எனத்தோழி தலைவியை அழைக்கிறாள், தலைவிக்குப் பொழுது போக்காக ஒன்றைச் செய்யக்கூட மனமில்லை. அவள் வருத்தத்தை உணர்ந்து அவன்

மலையைப் பார்க்கலாம் வா எனத் தோழி அழைக்கிறாள். இருவருக்கும் பேச்சு வளர்ந்தது. அது அவன் மலையைப் பற்றியும், அவனைப் பற்றியும், அவர்கள் கருத்துக்களை வெளியிடும் பாடல்களாய் அமைந்திருக்கிறது. எதிர்பாராத முறையில், அன்று தலைவியைக் காணவந்த தலைவன், அவர்கள் பாட்டு முடியும் வரை மறைந்தபடி கேட்டுக் கொணடிருந்து, பின் தலைவியின் பின்புறமாகச் சென்று அவள் கண்களைப் பொத்துகிறான். தலைவி துன்பம் நீங்கிப் பூரித்துப் பொங்குகின்றாள்.

மறங்கொள் இரும்புலித் தொல்முரண் தொலைத்த
முறம்செவி வாரணம் முன்குளகு அருந்திக்
கறங்குவெள் அருவி ஒலியில் துஞ்சும்
பிறங்குஇருஞ் சோலை நன்மலை நாடன்
மறந்தான்; மறக்கஇனி எல்லா! நமக்குச்
சிறந்தமை நாம்நன்கு அறிந்தனம் ஆயின், அவன் திறம்
கொல்யானைக் கோட்டால் வெதிர்நெல் குறுவாம் நாம்
வள்ளை அகவுவம் வா! இகுளை! நாம்
வள்ளை அகவுவம் வா! (1–9)

கொடுமையைத் (தன் இயல்பாகக்) கொண்ட பெரிய புலியாகிய பழம் பகையை ஒழித்ததும், முறம்போன்ற காதுகளை உடையதுமான யானை, (பகை தீர்ந்த மன அமைதியுடன்) தனக்கு முன்னே (தழைத்திருந்த) குளகை உண்டு, (தளர்ச்சி நீங்க) ஒலிக்கின்ற வெண்மையான அருவியின் ஒலியைத் (தாலாட்டாகக் கொண்டு) தூங்கும்; நாள்தோறும் மிகுகின்ற பெரிய சோலைகளைக் கொண்ட நல்ல மலைநாட்டுத் தலைவன் (நம்மை) மறந்தான். (அவன் போக்கின்படியே) மறக்கட்டும்; ஏடி! நமக்குப் பெருமையைத் (தரக்கூடிய கடமைகளை) நாம் நன்றாக உணர்ந்தவர்களேயானால், அவன் தன்மையை, (பகையைக்) கொன்று (வெற்றி பெற்ற) யானையின் கொம்புகளால்

(செய்யப்பட்ட உலக்கைகளின் உதவியால்) மூங்கில் நெல்லைக் குத்தியபடி, நாம் வள்ளைப் (பாட்டர்கப் பாடி) அழைப்போம் வா! பெண்ணே! நாம் வள்ளை பாடி அழைப்போம் வா!

முரண்-மாறுபாடு, பகை; தொன் முரண்-பழைமையான பகை; குளகு-யானை உண்ணும் அதிமதுரத் தழை; 'எல்லா' 'இகுளை' என்பன பெண்களை முன்னிலைப் படுத்தும் சொற்கள். குறுவா-குத்தி, செய்யா என்னும் வாய்ப்பாடு; 'துஞ்சும் மலை நாடன்' என்ற எச்சத்தை விளக்கம் கருதி முற்றாய் உரையில் கொள்ளப் பட்டிருக்கிறது. 'வள்ளைப்பாடி ஆடி ஓடி வா எனா அழைக்குமே' கலிங்கத்துப்பரணி.

கொடுமையைக் குணமாகக் கொண்ட புலியை வென்று, எளிதில் கிடைத்த அதிமதுரத் தழையை உண்டு, அருவி ஒலி தாலாட்ட, கவலையில்லாமல் தூங்கும் யானைகள் வசிக்கும் சோலைகளுக்குத் தலைவனாய் இருந்தும், பழியைப் பரப்புவதையே தொழிலாகக் கொண்ட அயலார் அவரை வென்று, தலைவியை மணந்து, பலரும் புகழ இல்லறம் நடத்துதலை நினையாதிருக்கின்றானே என்பது குறிப்பு.

காணிய வா—வாழி தோழி! வரைத்தாழ்பு
வாள்நிறம் கொண்ட அருவித்தே, நம்அருளா(த)
நாணிலி நாட்டு மலை. (10–12)

நமக்கு அருள் செய்யாது (இருப்பதோடு அதற்காக) வெட்கப்படாமலும் இருப்பவனுடைய நாட்டைச் சேர்ந்த மலை, (உயர்ந்த) குன்றுகளிலிருந்து தாழ்ந்து (ஓடிவரும்) ஒளி பொருந்திய நிறங்கொண்ட அருவிகளை உடைய தாயிருக்கின்றதே! தோழி! வாழ்வாயாக! இவ்விந்தையை ஆராய்வோம் வா.

இருமுறை அழைத்தும் தலைவி நெல் குத்த இசையவில்லை. அவள் வருத்தத்தின் எல்லையை உணர்ந்த தோழி தலைவன் மலையைப் பற்றிப் பேசும் பொழுதே அவனைப் பற்றிய தன் கருத்தையும் வெளியிடுகிறாள். அழகிய அருவிகள் ஓடி வரும்

மலையைப் பெற்றவனா யிருந்தும், தலைவியைத் துன்பக் கண்ணீர் சொரியச் செய்கிறானே என்பது குறிப்பு. இதுவரை தோழி கூற்று.

ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ–
ஓர்வுற்று ஒருதிறம் ஒல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத் தவன். (13–15)

நன்கு ஆராய்ந்து ஒரு புறமும் சாயாத நேர்மையான ஒழுக்க முறையை மேற் கொண்டு நல்லவைகளையே நாடிச் செய்யும் மனப்பான்மை உடையவன், (தன்னிடத்து) விருப்பங்கொண்டவர் மனத்தைத் துன்படையச் செய்வானோ!

கோல்-தலைவன் நடத்தையின் சின்னம். செங்கோல் போல் கொள்க. இவ்வாறன்றி, அதனைத் துலாக் கோலாக்கி, அது ஒருபுறமும் குறைவைத் தோற்றுவிக்காமல் இரண்டு தட்டுகளிலும் உள்ள பொருள்களை ஒப்ப நிறுப்பது போல, இவனும் வழக்கொடு வந்த இரு திறத்தாரும் குறை கூற முடியாதபடி நடுவு நிலை பிறழாது வழக்கைத் தீர்க்கும் வல்லமையுடையவன் எனக் கூறுவதும் பொருந்தும். அவனைப் பழித்த தோழிக்கு அவன் நடத்தை அமைதியுடையதே எனக் காட்ட முற்படுகிறாள் தலைவி. தன்னைப் பார்க்க வருவதற்காக, அவன் நாட்டுத் தலைவனுக்குரிய கடமைகளை நழுவ விடுவது, அவன் பெருமைக்குச் சிறுமையைச் செய்யுமாகை யால், அவன் வராதிருக்கவேண்டும் என்று தலைவி கூறுகிறாள். இது தலைவி கூற்று.

தண்நறும் கோங்கம் மலர்ந்த வரைஎல்லாம்
பொன்அணி யானைபோல் தோன்றுமே!–நம்அருளாக்
கொன்னாளன் நாட்டு மலை. (16–18)

நமக்கு அருளாததால் பயனின்மையை ஆள்பவனாய் (மாறிவிட்டவன்) மலையின்மீது, குளிர்ச்சி பொருந்திய மணம் மலிந்த கோங்க மலர்கள் அலர்ந்திருக்கும் பக்க மலைகள் அனைத்தும், பொன் ஆரம் பூண்ட யானை களைப் போல் (பொலிவுடன்) காணப்படுமே!

கொன்-வறிது, பயனின்மை, அவளுக்கு அருளினால் இன்பத்தை ஆள்வான். கோங்கம் மலர்ந்து அவன் மலையின் அழகைப் பெருக்கிக் காட்டியதைப் பார்த்த பின்னும் தலைவியைத் தன் தலையளியால் எழில்பெறச் செய்யவேண்டும் என்ற விருப்பமில்லாதிருக்கிறானே என்பது குறிப்பு. இது தோழி கூற்று.

கூருநோய் ஏய்ப்ப விடுவானோ? தன்மலை
நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத்
தேர்ஈயும் வண்கை அவன். (19–21)

தன் மலையில் பாயும் குளிர்ந்த நீரைக்காட்டிலும் சிறந்த சாயலை யுடையவன், (ஒன்றை நாடித்) தன்னைத்தேடி வந்தவர்க்குத் தேர்களைத் தரும் கொடைச் சிறப்பு உடையவன் (பொறுக்க முடியாத அளவுக்கு) மிகுகின்ற நோய் (நம்மைப்) பொருந்த விடுவானோ?

சாயல் ஐம்பொறிகளுக்கும் இன்பம் பயக்கும். அருவிநீர் காட்சி இன்பத்தையும், ஊற்றின்பத்தையும் தரும். கூர்தல்-மிகுதல் இது தலைவி கூற்று.

வரைமிசை மேல்தொடுத்த நெய்க்கண் இறாஅல்
மழைநுழை திங்கள் போல் தோன்றும், இழைநெகிழ
எவ்வம் உறீஇயினான் குன்று. (22–24)

(நம்) அணிகள் கழலும்படி (நம்மீது) துன்பத்தைத் திணித்தவனுடைய மலையில், உயர்ந்த பக்க மலையின் மீது கட்டப்பட்ட தேனை நிறையப் பெற்ற தேன் கூடுகள், மேகத்தில் நுழையும் சந்திரனைப் போல் தோன்றும்.

முன்னர் 'அருவித்தே', 'தோன்றுமே' என்று வியந்தது போலன்றி இங்குத் தோழி 'தோன்றும்' எனக் கூறியது. தலைவி தலைவனைப் புகழ்ந்துரைத்தவற்றைத் தான் ஏற்றுக் கொண்டமையைப் புலப்படுத்தவே. தலைவிக்கு மகிழ்ச்சியூட்டவும் அவள் அவனிடத்துக் கொண்ட அன்பைப் சிறப்பிக்கவுமே, தன் சொற்களைத் தெரிந்து பயன்படுத்துகிறார். மலையில் உள்ள தேன் கூடு சந்திரனாகக் கருதப் படும் என்றது மலையின் உயர்வை விளக்க வந்தது. இத்தகைய

பெரிய நாட்டுத் தலைவனாயிருந்தும், தன்னை நயந்தார்க்கு நன்மை செய்யாதிருக்கின்றானே என்பது குறிப்பு. இது தோழி கூற்று.

எஞ்சாது எல்லா! கொடுமை நுவலாதி;
அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்
நெஞ்சம் பிணிக்கொண் டவன். (25–27)

என் உள்ளத்தைத் (தன் அன்பால் தன்னுடையதாக) அகப்படுத்திக் கொண்டவன், அஞ்சவேண்டியவற்றுக்கு அஞ்சாதவனும் அறநெறியை விரும்பாதவனும் அல்லன். (ஆகவே) அவனுடைய கொடுமைகளை ஏடி! ஓயாமல் கூறிக்கொண்டிராதே.

தலைவியின் கருத்துக்களை தோழி ஓரளவு ஒப்புக் கொண்டதைப் போலவே, தோழி கூறியவற்றையும் தலைவி முற்றிலும் மறுக்க விரும்பவில்லை.

*அஞ்சுவது அஞ்சாமை பேதமை அஞ்சுவது*
*அஞ்சல் அறிவால் தொழில்*

என்றுயாம் பாட மறைநின்று கேட்டனன்;
தாழ் இரும் கூந்தல் என்தோழியைக் கைகவியாச்
சாயல்இன் மார்பன் சிறுபுறம் சார்தர,
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது என்
ஆய்இழை மேனிப் பசப்பு. (28–32)

என்று நாங்கள் அவனைப் பாட (எங்களுக்குத் தெரியாமல்) மறைவாக இருந்து கேட்டான் (கண்டார் விரும்பும்) இனிய சாயலையுடைய மார்பைப் (பெற்ற தலைவன்). திடீரென்று தலைவியின் பின்புறமாக வந்து அவள் முதுகுப் புறமாகவே அணைத்து நிற்கவும், சூரியன் முன்னர் இருளைப் போல, ஆராய்ந்த ஆபரணங்களை அணிந்த என் தோழியின் மேனியை மூடியிருந்த பசலை நிறம் முற்றிலும் நீங்கிவிட்டது.

# 7. வேங்கை தொலைத்த...

தலைவன் களவொழுக்கத்தை நீட்டிக்கிறான். அவனை விரைவில் வரைந்து கொள்ளத் தூண்ட தோழியும், தலைவியும் விரும்பினர். அவள் வரும் நேரம் நோக்கி முருகனைப் புகழ்வார்போல், அவனைப் புகழ்ந்து பாடினர். தலைவன் வரவால் தலைவி மகிழ்வதையும், அவர் பிரிவால் மெலிவதையும், தோழி வெளிப்படுத்திக் கூறினாள். இதனைக் கேட்கும் தலைவன், தலைவி என்றும் மெலியாதிருக்க வரைய நினைப்பான் என்பது அவள் நோக்கம்.

வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின் இனவண்டு இமிர்ஊதும்
சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெள்நெல் அறைஉரலுள் பெய்துஇருவாம்;
ஐயனை ஏத்துவாம் போல, அணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனை
தையலாய்! பாடுவாம் நாம். (1–7)

புலியைக் கொன்றதும். மதத்தினையும், புள்ளிகளையும் (உடையதுமான) யானையின் (நிமிர்ந்து வளர்ந்த கொம்பு களாலும், கூட்டமான வண்டுகள் ஒலித்துக் கொண்டு தாதை உண்ணும் (தகைமையுடைய) சந்தன மரத்தாலும் செய்யப்பட்ட உலக்கைகளால், ஐவனமாகிய வெண்மை யான நெல்லை (பாறையை) அறுத்துச் (செய்யப்பட்ட) உரலில் இட்டுக் குத்துவோம். (அவ்வாறு குத்தும்பொழுது நம் தலைவனாகிய) முருகனைப் புகழ்ந்து பாடுபவர்களைப் போல, அழகுகொண்ட மேகங்கள் உண்டாகும் (பெருமையையுடைய) உச்சிகளைப்(பெற்று) பயனளிக்கும் மலைநாட்டுத் தலைவனை, பெண்ணே! நாம் பாடுவோம்.

வெறி-மயக்கம்; பொறி-புள்ளி, ஐவணம்-மலைநெல்; இவர்கள் மலைத் தலைவனைப் புகழ்வதைப் பிறர் கண்டுகொள்ளாமல் இருக்க, முருகனைப் புகழ்வதுபோல் அமைந்த, ஆனால் தம் தலைவனையே குறித்த பாடல்களைப் பாட விரும்பினர். தலைவன் முருகனோடு ஒப்பிட்டுச் சொல்லக்கூடிய பெருமையுடையவன் என்பது குறிப்பு. இது தோழி கூற்று.

தகையவர் கைச்செறித்த தாள்போலக் காந்தள்
முகையின்மேல் தும்பி இருக்கும்; பகைஎனில்
கூற்றம் வரினும் தொலையான்,தன் நட்டார்க்குத்
தோற்றலை நாணாதோன் குன்று. (18–11

பகையாக எதிர்வரின் எமன் வந்தாலும் மனம் அழியாத வனும், தன்னை விரும்பியவர்க்குத் தோற்றுப்போவதற்குச் சிறிதும் வெட்கப்படாதவனுமாகிய (நம் தலைவனுடைய) மலையில், மகளிர் தம் விரலிலே பொருத்திய மோதிரத் தைப் போல, காந்தள் மொட்டின் மீது (அது அலரும் காலத்தை எதிர்பார்த்தபடி) தும்பி வீற்றிருக்கும்.

தகை-அழகு, தகுதி; அதனையுடையவர் தகையவர்; காந்தள் உவமிக்கப் பட்டமையின் மகளிரைக் குறிக்க வந்தது. அவன் மலையிலுள்ள தும்பி, பொறுமையுடன் காந்தள் மலரும் காலத்தை எதிர்நோக்கிப் பார்த்திருத்தலைப் போல, அவனும் மணம் பேசவேண்டிய நன்னாளை எதிர்நோக்கியபடி தன் ஆவலை அடக்கிக் கொண்டிருக்கிறான். இது தலைவி கூற்று.

வெருள்புடன் நோக்கி வியல்அறை யூகம்
இருள்தூங்கு இறுவரை ஊர்இழிபு ஆடும்
வருடைமான் குழவிய வளமலை நாடனைத்
தெருளத் தெரிஇழாய்! நீஒன்று பாடித்தை. (12–15)

அகன்ற பாறையின் மீது (வீற்றிருந்த) கருங்குரங்கை (நெருங்கிச் சென்று, அது முகஞ்சுளித்ததைப்) பார்த்துப் பயப்பட்டு, (மலை உச்சியைவிட்டு ஓடிப்போய்) இருள் கவிந்த பக்க மலையில் ஏறி இறங்கி விளையாடும் வருடை

மான் குட்டிகளை உடைய, வளப்பம் மிக்க மலையின் தலைவனை, ஆராய்ந்த அணிகளைப் பூண்டவளே! விளங்க நீ ஒரு பாடலைப் பாடு.

வெருளுதல்-பயப்படுதல்; அறை-அறுக்கப்பட்ட பாறை. யூகம்-கருங்குரங்கு; இறுவரை-பெருமலையினின்றும் வெப்பத்தாலும், அருவிகளாலும் பிரிந்த (பிளந்த) பக்கமலை. அதனைச் சூழ்ந்த உயர்ந்த மலைகளின் நிழலால், அது எப்பொழுதும் இருண்டிருக்கு மாதலால் 'இருள்தூங்கு இறுவரை' என்றார். இது தோழி கூற்று.

அவன் மலையில் வாழும் மான் குட்டிகள் பயப்பட வேண்டாத குரங்குகட்குப் பயந்து, வெளிச்சமுடைய மலை உச்சியை விட்டு நீங்கி, இருண்ட பக்கமலையில் சென்று ஆடுவதைப் போல, அவனும் பயப்பட வேண்டாத தலைவியின் சுற்றத்தாருக்குப் பயந்து, மணந்து இன்புற்றிருக்க முயலாமல், இன்பத்துக்கு இடையூறுகள் விளைவிக்கும் களவொழுக்கத்தை மேற்கொண்டிருக்கிறான்.

நுண்பொறி மான்செவி போல வெதிர்முளைக்
கண்பொதி பாளை கழன்றுஉகும் பண்பிற்றே,
மாறுகொண்டு ஆற்றார் எனினும், பிறர்குற்றம்
கூறுதல் தேற்றாதோன் குன்று. (16–19)

பகைமை பூண்டு, (தம் மனத்தே புகவிட்ட பகைமைத் தீயைத்) தாங்கமாட்டாதவராய், (தொடர்ந்து துன்பத்தைச் சூழ்வார்) என்றாலும் பிறர் பிழைகளை வெளிப்படுத்திக் கூறுதலைப் பொறுக்காதவனுடைய மலையில் நுண்மையான புள்ளிகளை உடைய மான் காதுகளைப் போன்ற மூங்கில் முளையின் கணுக்களை மூடிக்கொண்டிருக்கும் பாளைகள் கழன்று விழும் தன்மையுடையன.

'பொறியைப் புலனின் சூக்குமமாகக் கொண்டு, 'நுண்ணிய சத்தங்களையும் கேட்கும் சூக்கும இந்திரியத்தையுடைய மான்செவி' என உரைத்தலும் பொருந்தும். இது தலைவி கூற்று.

பாளை, முளைத்தெழும் கணுக்களைக் காக்க, அதனைப் பிறர் அறியாதவாறு மூடிக்கொண்டிருந்து, பக்குவமான காலத்தில் தானே

கழன்றுவிடுதலைப் போல, அவனும் தலைவி தன்னிடத்துக் கொண்ட காதலைப் பிறர் அறியாதவாறு களவொழுக்கம் ஒழுகி மறையாக வைத்திருந்து, தக்க காலத்தில் தானாகவே பலர் அறிய மணம் புரிவான்.

புணர்நிலை வளகின் குளகுஅமர்ந்து உண்ட
புணர்மருப்பு எழில்கொண்ட வரைபுரை செலவின்
வயங்குஎழில் யானைப் பயமலை நாடனை
மணம்நாறும் கதுப்பினாய் மறுத்துஒன்று பாடித்தை.
(20–23)

இணைந்திருக்கும் கொம்புகளினால் அழகு பெற்றதும், மலையை ஒத்திருக்கின்றதும், தன்னுடைய (பெருமிதமான) நடையினால் விளங்குகின்ற கம்பீரத்தை உடையதுமாகிய யானை வாழ்வதும், பயன்தருவதுமான, மலையையுடைய நாட்டின் தலைவனை, மணம் கமழும் கொண்டையை உடையவளே! பழித்து ஒரு பாடலைப் பாடு.

'வளகு' புதருக்கும் 'குளகு' அதன் தழைக்கும் பெயர்கள் அவன் மலையில் உள்ள யானை, பிடியுடன் கூட விரும்பியதை உண்டு, பிறர் போற்றும் பெருமிதமான நடையுடையதாய்த் தன்னிச்சைப் படி திரிந்து மகிழ்ந்திருத்தலைப் போல, அவனும் தலைவியோடு கூடி இல்லறத்தை நல்லறமாய் நடத்தி, பிறர் பாராட்டுதல்களைப் பெற்று மகிழ்ந்திருப்பான். யானைக்கு விருந்தயர்தல் இன்மையின் உண்டு மகிழ்ந்தது; இவன் உண்பித்து மகிழ்வான் என்பது குறிப்பு. இது தோழி கூற்று.

கடுங்கண் உழுவை அடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉம் தூங்கும், இடும்பையால்
இன்மை உரைத்தார்க்கு, அதுநிறைக்கல் ஆற்றாக்கால்
தன்மெய் துறப்பான் மலை. (24–27)

வறுமையின் (கொடுமையால் மானம் இழந்து) தம் இன்மையைக் கூறி (இரந்தவர்களுக்கு) அவர்கள் இல்லை என்றதைத் (தந்து அவர் விருப்பத்தை) நிறைக்க முடியா

விடின், தன் உயிரையே இழந்துவிடத் (துணிபவன்) மலை யில், கொடிய கண்களை உடைய புலியின் பாதங்களைப் போன்ற வாழையின் வளைந்த காய் (நிறைந்தசீப்புகள்) குலைகளிளெல்லாம் இருக்கும்.

உழுவை-புலி; அசையாதிருக்கும் தன்மையைத் 'தூங்கும்' என்றார். உணவாகும் வாழைக்காய்கள், கொடிய புலியின் விரல்களை ஒத்திருப்பன போல, நன்மையைப் பயக்கும் அவன் நட்பும் துன்ப முடையதுபோல் தோன்றுகிறது. பழித்துப் பாட வேண்டிக்கொண்ட தோழிக்குத் தலைவி பழிப்பதுபோல் புகழ்ந்தே பாடினாள். ஓரளவு துன்பத்தைத் தரினும், அவன் தனக்கு மகிழ்ச்சியைச் சூழும் இயல்புடையவன் என்பது தலைவியின் உறுதி. இது தலைவி கூற்று.

என ஆங்கு
கூடி அவர்திறம் பாடஎன் தோழிக்கு
வாடிய மெல்தோளும் வீங்கின,
ஆடுஅமை வெற்பன் அளித்தக்கால் போன்றே. (28–31)

என்று நாங்கள் இருவரும் சேர்ந்து அவர் பெருமையைப் பாடும்பொழுதே, என்னுடைய தோழிக்கு அவளுடைய வாட்டமுற்றிற்கும் மென்மையான தோள்கள், அசைகின்ற மூங்கில் நிறைந்த மலைத்தலைவன் தலையளி செய்தாற் போலவே பூரித்துப் பெருத்து விளங்கின.

தலைவன் மறைந்திருக்கும்பொழுது-சிறைப் புறமாக இருக்கை யில்-அவன் கேட்க, அவன் முன் செய்த தலையளியை நினைந்து கூறி மகிழ்தலால், இவள் என்றும் மகிழ்ச்சி மாறாமலிருக்க அவன் மணக்கத் துணிவான் என்பது தோழியின் நோக்கம்.

# 8. கதிர்விரி கனைசுடர்...

அவனுக்குப் பலமுறை சொல்லிவிட்டாள்; அவன் 'கேட்பதாகத் தெரியவில்லை. தலைவி தத்தளிக்கிறாள். அவளால் துன்பம் தாங்கமுடியவில்லை. அவள் துன்பப் படக் காரணம் என்ன என்று பிறர்கேட்கத் தொடங்குவார்

களே-அலராகுமே-என்ற பயத்தால், தலைவி மிகவும் முயன்று தன் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டிருக் கிறாள். தலைவனுக்கோ மணஞ்செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் எழுந்ததாகவே தெரியவில்லை; நாள்தோறும் தலைவியைத் தனியே சந்தித்து மகிழ்வதோடு அவன் ஆவல் அடங்கி விடுகின்றது-வரையாது வந்து ஒழுகுகின்றான். அவனுடைய பொறுப்பற்ற போக்குக்கு முற்றுப் புள்ளி வைக்கவேண்டும் என்று தோழி துணிந்து விட்டாள். அவனைத் தலைவி சந்திக்காதபடி செய்ய (அல்ல குறிப்படும்படி செய்ய) நினைத்தாள்; ஆனால் தலைவி வருந்துவாளே என்று பயந்தாள். அவள் தலைவியின் நிலையை உருக்கமாகக் கூறி, அவனை மணஞ் செய்துகொள்ளத் தூண்டுவதைச் சித்தரிக்கிறது இப்பாடல்.

கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண்ட நனஞ்சாரல்
எதிர்எதிர் ஓங்கிய மால்வரை அடுக்கத்து
அதிர்இசை அருவி, தன் அஞ்சினை மிசைவீழ, (1–3)

சூரியனுடைய கிரணங்கள் விரிகின்றதனால், மிக்க ஒளியைப் பெற்று அழகு மிகப்பெறும் அகன்ற மலைச் சரிவுகளில், ஒன்றுக்கொன்று எதிர்ப்பட்டு வளர்ந்து உயர்ந்து (தோன்றும்) பெரிய மலைத் தொகுதிகளின் (உச்சி களிலிருந்து) முழங்குகின்ற ஓசையுடன் (ஓடிவரும்) அருவி கள், தன்னுடைய அழகிய கிளைகளின் மீது விழுவதனால்,

நன-அகன்ற; அடுக்கம்-தொகுதி, கூட்டம். கனை-நெருங்கிய.

முதிர்இணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை
வரிநுதல் எழில்வேழம் பூநீர்மேல் சொரிதரப்
புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறுஎய்தித்
திருமகள் இருந்துஅன்ன தேம்கமழ் விறல்வெற்ப!(4–7)

(பசிய) நிறத்தைக்கொண்டு முற்றிய கொத்துகளையும், மத்தளம் போன்ற (அடி மரத்தையும்) நெருப்பைப் (போல்

ஒளியுள்ள மலர்களையும் உடைய) வேங்கை மரம், புள்ளிகள் நிறைந்த நெற்றிகளை உடைய அழகிய யானைகள் பூவோடு கூடிய நீரைத் தன்மீது சொரிய, கட்டுத் தளரும் தாமரை மலரிடத்துச் சிறப்புடன் வீற்றிருக் கும் திருமகள் இருப்பைப் போலத் (தோன்றும்); மணம் நிறைந்ததும், வெற்றியையுடையதுமான மலைகளின் தலைவனே!

ஊழ்-நிறம். பூநீர்-மென்மையும் தூய்மையும் உள்ள நீருமாம். பொன்னின் நிறத்தை ஒத்த பூக்களையுடைய வேங்கை திருமகளுக் கும், எதிர் எதிரே உயர்ந்து தோன்றும் மலைகள் யானைகளுக்கும், அவற்றில் இறங்கிவரும் அருவிகள் யானை நீரைச் சொரிதற்கும் உவமைகள். ஊழ்கொண்ட முதிரிணர் எனமாறிக் கூட்டுக. கஜலக்ஷ்மி சிற்பம் -மாமல்லபுரம். வீட்டுத் தலைவாயில் நிலைதனில் பொறிக்கப்பெறும்.

தன்எவ்வம் கூரினும் நீசெய்த அருளின்மை
என்னையும் மறைத்தாள்என் தோழி, அதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தான்நாணி.
(8-10)

என்னுடைய தோழி, தன்னுடைய துன்பம் மிகுந்த பொழுதும், (அதன் காரணத்தை வினவி) நீ செய்த இரக்கமற்ற செயலைக்கேட்டு, உன்னை நான் பிறர் எதிரில் பழிகூறுதலுக்கு வெட்கப்பட்டவளாய், என்னையும் அறியவொட்டாமல் அதனை மறைத்திருந்தாள்.

கூரும் நோய் சிறப்பவும் நீசெய்த அருளின்மை
சேரியும் மறைத்தாள் என் தோழி, அதுகேட்டாங்கு
ஒரும்நீ நிலையிலை எனக்கூறல் தான்நாணி. (11-13)

என்னுடைய தோழி, தன்னுடைய மிகுதியான நோய் மேலும் அதிகமாயும், (அதன் காரணத்தை வினவி) நீ செய்த இரக்கமற்ற செயலைக் கேட்டறிந்து, நீ நிலையற்றவன் எனப் பழிக்கப்படுவதற்கு வெட்கப்பட்டவளாய், அதனைச்

சேரியில் உள்ள எவரும் அறியவொட்டாமல் மறைத்திருந்தாள்.

ஓர்தல்-கேட்டல், அறிதல்,

நோய்அட வருந்தியும் நீசெய்த அருளின்மை
ஆயமும் மறைத்தாள் என் தோழி, அதுகேட்டு
மாய !நின் பண்பின்மை பிறர்கூறல் தான்நாணி. (14-16)

மாயம் வல்லவனே! என்னுடைய தோழி, தன்னுடைய நோய் அவளைக் கொல்லும் (அளவுக்கு அதிகப்பட) வருந்தினாளேனும், (அதன் காரணத்தை வினவி) நீ செய்த இரக்கமற்ற செயலைக்கேட்டு, உன் குணமின்மையை ஆயத்தார் கூறுதலை வெட்கப்பட்டவளாய், அதனை அவரும் அறியவொட்டாமல் மறைத்திருந்தாள்.

தன்னோடு வேறுபாடில்லாமல் வாழும் தோழிக்கே முதலில் மறைத்தாள் தலைவி. பொறுக்கும் அளவைக் கடந்தபின் தோழிக்கு மறைக்கமுடியாமல் தவித்தாள்; இருந்தும் ஊரார் அறியவொட்டாமல் மறைக்க வெளிச்செல்வதை விட்டுவிட்டாள். நோய் மேலும் மிகுந்தது. அவளோடு விளையாடும் ஆயத்தாருக்கு மறைப்பது எப்படி? இச்செயற்கரிய செயலை, தலைவி தலைவன் பெருமையைக் காக்கச் செய்து முடித்திருப்பதை உணர்த்துகின்றாள் தோழி; இதனைக் கூறும்பொழுது, இதுவரை பொறுமையுடன் பேசி வந்தவள் 'மாய!' எனத்தலைவனைப் பழித்துக் கூறினாள். தலைவியின் துன்பத்தின் எல்லையை இதனால் அறிந்த தலைவன், விரைவில் மணந்து கொள்ளுவதாக வாக்களித்தான். இந்நற்செய்தியைத் தலைவிக்குச் சொல்ல, அவனோடு விரைந்து செல்கிறாள் தோழி.

எனஆங்கு
இனையன தீமை நினைவனள் காத்துஆங்கு
அனையரும் பண்பினால் நின்தீமை காத்தவள்
அரும்துயர் ஆர்அஞர் தீர்க்கும்
மருந்தாகிச் செல்கம் பெரும !நாம் விரைந்தே. (17-21)

என்று (உன்னைச்சேரும்) இவ்வித பழிகளை நினைத்தவளாய், (அவை உன்னைச் சேராதபடி)

பாதுகாத்து, அப்பொழுதே, அவளுடைய அருமையான பொறுமைக் குணம் காரணமாக, நீ அவளுக்குச் செய்த கொடுமையையும் பொறுத்துக் கொண்டிருந்தவளுடைய மிக்க துன்பமாகிய நிறைந்த நோயைப் போக்கும் மருந்தாக ஆகிப் பெரும்! நாம் அவளிடம் விரைந்து செல்வோம்.

அனை—அத்தகைய; அவனுக்கு பழி சேராது பார்த்துக் கொண்ட குணச் சிறப்பைச் சுட்டுகின்றது; அரும்துயர்-பொறுத்தற் கரிய துன்பம். அவள் துன்பத்தைப் போக்கும் மருந்து தலைவன் அவளை மணப்பதே.

## 9. விடியல்வெம் கதிர்காயும் . . .

தலைவன் மணந்து கொள்வதாகக் கூறிச்சென்று பலநாட்களாயின. அவன் வரவில்லை; வரைய முயற்சி செய்ததாகவும் தெரியவில்லை. தலைவி கலங்குகிறாள். இரவைத் தூக்கமின்றிக் கழிக்கிறாள். இந்நிலையில் தலைவன் சுற்றத்தாருடன் வந்து தலைவியை மணத்தில் கொடுக்குமாறு அவள் தமரைக்கேட்டு, அவர்கள் இசைவையும் பெற்றான். இந் நற்செய்தியைத் தலைவிக்குக்கூறி ஆறுதல் சொல்ல வந்த தோழி, தலைவனை வரைய முயலத் தான் தூண்டியதையும், அவன் முயற்சி தடைப்பட்டதால் காலக்கழிவு நேர்ந்ததையும் கூறுவதை இப்பாடல் சித்தரிக்கிறது.

விடியல்வெம் கதிர்காயும் வேய்அமல் அகல்அறைக்
கடிசுனைக் கவினிய காந்தள்அம் குலையினை,
அருமணி அவிர்உத்தி அரவுநீர் உணல்செத்துப்
பெருமலை மிளிர்ப்புஅன்ன காற்றுடைக் கனைபெயல்
உருமுக்கண் உறுதலின் (1-5)

விடியற்காலத்தே (மிகவும்) விரும்பப்படுகின்ற சூரியனை மறைத்து (நிழலைச் செய்யும்) மூங்கில் அடர்ந்த, அகன்ற

பாதையில் (உள்ள) குளிர்ந்த சுனையில் இருக்கும் அழகைப் பரப்பும் காந்தள் மலர்க்கொத்தை, பெறுதற்கரிய மாணிக்கத்தையும், (படத்தின்மீது) விளங்கும் வரிகளையும் உடைய பாம்பு நீர் உண்பதாக எண்ணி, பெரிய மலைகளையும் கீழ்மேலாகப் புரட்டும் வல்லமை யுடைய. காற்றோடு கலந்த, செறிந்த மழை (பொழிகையில்) இடி இடிக்கவும்.

வேய்-மூங்கில்; அமல்-நெருங்கிய; காய்தல்-வெறுத்தல்; உத்தி-பாம்பின்படத்தில் உள்ள வரி. இயற்கை நிகழ்ச்சி ஒன்றைக் காந்தளைப் பாம்பாக மதித்து இடி இடித்தது என அவற்றின் பகைமையைப் பயன் படுத்தி விவரிக்கிறார். அவன் மலையில் உள்ள அழகிய காந்தளும் கொடிய பாம்பாகக் கருதப்பட்டது போல, அவனுடைய இனிய உறுதி மொழிகளும், நிலையற்றவையாகவும், கொடுமை உடையனவாகவும் தோன்றுகிறன.

உயர்குரல் ஒலிஓடி
நறுவீய நனம்சாரல் சிலம்பலின், கதும்எனச்
சிறுகுடி துயில்எழூஉம் சேண்உயர் விறல்வெற்ப! (5-7)

(இடி இடிக்கவும் அதனால்) எழுந்த பலமான ஓசையின் ஒலி பரவிச் (சென்று), நல்ல மணமுள்ள மலர்களையுடைய அகன்ற மலைச்சாரல்களைத் (தாக்க, அவை) எதிரொலிப்பதனால், (அவ்வோசையைத் தாங்காது, குளிர் ஒடுக்குவதையும் கவனிக்காமல்) விரைவாகச் சிறுகுடியில் உள்ளார் துயில் உணர்வர்; இத்தகைய மிக உயர்ந்ததும், வெற்றியை உடையதுமான மலையின் தலைவனே!

சிலம்புதல்-எதிரொலித்தல்; 'எழூஉம்' என்ற எச்சம் விளக்கங்கருதி முற்றாக உரையில் கொள்ளப்பட்டது. அயர்ந்து தூங்குவாரைக் காரணமின்றி எழுப்ப இடி இடிக்கும் மலையின் தலைவனாகையால், அவனும் தன் சொற்களை நம்பி இருப்பவரைக் காரணமின்றி கலங்கச் செய்யும் தன்மையுடையவனாய் இருக்கிறான்.

கால்பொர நுடங்கல கறங்குஇசை அருவிநின்
மால்வரை மலிசுனை மலர்ஏய்க்கும் என்பதோ,

புல்ஆராப் புணர்ச்சியால் புலம்பிய என்தோழி
பல்இதழ் மலர்உண்கண் பசப்பநீ சிதைத்ததை; (8-11)

அணைக்க அணைக்க (இன்பம் பெருகி, மேலும் அணைத்துக் கொள்ளுதலை விரும்பச் செய்யும்) மனநிறைவை அளிக்காத கூட்டத்தைப் (பெறாமையால்) மிக வருந்திய என்னுடைய தோழியின் பல இதழ்களையுடைய மலர் போன்ற ஆளை விழுங்கும் கண்கள் பசக்கும்படி, நீ அவற்றின் அழகைக் கெடுத்தமை. காற்று தாக்கியும் அசையாது (வழிமாறாததும்), ஒலிக்கின்ற (இனிய) ஓசையையுடையதுமாகிய அருவி (பாயும்) நின் பெரிய மலையில் (உள்ள) பலவாகிய சுனைகளில் உள்ள மலரை (அவை—கண்) ஒத்திருக்கும் என்ற எண்ணமோ?

ஒப்புயர்வற்ற தன்மை தன் மலைக்கு என்றும் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு தலைவியின் அழகிய கண்களின் அழகைச் சிதைத்ததாகத் தோழி கூறுகிறாள்; அவன் சுயநலம் மிக்கவன் எனக் கூற விரும்பியவள் இவ்வாறு மறைத்துக் கூறுகிறாள். வரும் தாழிசைகளுக்கும் இது ஒக்கும்.

அவன் மலையில் ஓடும் அருவிகள் பலமான காற்றடிக்கவும் அசையாமல், தம் இயற்கையான வழிகளை விட்டுப் பிறழாமல் பாய்வதைப் போல, அவனும் தலைவியை வரைந்து கொள்ளச் செய்யும் முயற்சியில் தடைகள் ஏற்படின் அவற்றால் மனமழியாது முயன்று தான் அளித்த உறுதி மொழி பிறழாமல் பாதுகாக்க வேண்டும் எனத் தோழி எச்சரிக்கிறாள்.

புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும்நின்
அகல்மலை அடுக்கத்த அமைஏய்க்கும் என்பதோ,
கடைஎனக் கலுழும்நோய் கைம்மிக, என்தோழி
தடையின திரண்டதோள் தகையாடச் சிதைத்ததை;
(12–15)

இறந்துவிடும் நிலையை (இவள் அடைந்துவிடுவாள் என்று சொல்லும்படிக்) கலங்கச் செய்யும் நோய் (இவளால்

பொறுக்கக் கூடிய) எல்லையைக் கடக்க, என் தோழியினுடைய பெருத்துத் திரண்ட தோள்கள் அழகு அழியும்படி நீ கெடுத்தது,புள்ளிகள் பொருந்திய முகத்தை உடைய யானையோடு புலி சண்டையிட்டு (வென்று) திரியும் உன் அகன்ற மலைத் தொடர்களில் உள்ள மூங்கிலை (அவை—தோள்கள்) ஒத்திருக்கும் என்ற எண்ணமோ?

புகர்-புள்ளி; உழத்தல்-திரிதல்; அமை-மூங்கில்; கடை-இறுதி; தடைதல்-பெருத்தல். அவன் மலையில் உள்ள புலி தன் உணவாகிய யானையை, அதனைக் கொல்லத் தோன்றும் துன்பங்களுக்கு அஞ்சாது கொன்று திரிவதைப் போல அவனும் தலைவியை மணப்பதற்குத் தோன்றும் தடைகளைப் பொருட்படுத்தாது, தான் விரும்பியபடி அவளை மணந்து மகிழ்ந்திருக்க வேண்டும் என்று தோழி வற்புறுத்துகிறாள்.

சுடர்உற உறநீண்ட சுரும்புஇமிர் அடுக்கத்த
விடர்வரை எரிவேங்கை இணர்ஏய்க்கும் என்பதோ,
யாமத்தும் துயிலலள் அமலரும், என்தோழி
காமரு நல்எழில் கவின்வாடச் சிதைத்ததை (16–19)

நள்ளிரவிலும் தூங்காமல் மனஞ்சுழன்று வருந்தும் என்னுடைய தோழியின் (கண்டார்க்கு) விருப்பத்தில் விளைவிக்கும் நல்ல அழகை மாண்பு இழக்கும்படிக் கெடுத்தது, சூரியனையே (சென்று) பொருந்தும்படி மிக உயர்ந்ததும், தேன் வண்டுகள் (ஓயாது) ஒலித்துக் கொண்டிருப்பதும் ஆகிய தொடர்ந்துள்ள பல குன்றுகளையும், குகைகளையும் உடைய (உன்) மலையில் (இருக்கும்) நெருப்பைப் போன்ற (ஒளியுடைய) வேங்கை மலர்க் கொத்துகளின் அழகை (அது—அவள் அழகு) ஒத்து இருக்கும் என்ற எண்ணமோ?

**'உற'**-பொருந்த; மிக, **யாமம்**-நள்ளிரவு; அவனுடைய மலை உயரத்தால் பெருமை உடையதாய் இருப்பதோடு, தன்னிடத்தில் வசிக்கும் தேனீ, விலங்குகள் இவற்றைப் புரக்க மரங்களையும், குகைகளையும் பெற்றிருத்தலைப் போலவே, அவனும் தலைவியை மணந்து இல்லறத்தை மேற்கொண்டு உயர்வடைய வேண்டு மென்றும், தன்னைச் சேர்ந்த சுற்றத்தாரையும், விருந்தினரையும் ஆதரித்து மகிழ்விக்க வேண்டும் என்றும் தோழி வற்புறுத்துகிறாள். தலைவனைத் தடுத்து நிறுத்தித் தன்பால் இழுத்துக் கொண்ட கண்களை முதலிலும், அவனை அணைத்துக்கொண்ட தோள்களை அடுத்தும், அவனைத் தொடர்ந்து அன்புடையவனாக இருக்கச் செய்ய உதவிய மேனியைப் பின்னரும் கூறியிருக்கும் தாழிசைகளின் முறைவைப்பு உணர்ந்து மகிழத்தக்கது.

என ஆங்கு
தன்தீமை பலகூறிக் கழறலின், என்தோழி!
மறையில் தான் மருவுற மணந்தநட்பு அருகலான்,
பிறைபுரை நுதல் அவர்ப் பேணி,நம்
உறைவரைந் தனர்அவர் உவக்கு நாளே. (20-24)

என்று அவர் நமக்குச் செய்த கொடுமைகள் பலவற்றையும் சொல்லி, (உன்னைக் கலங்க வைத்த தற்காக)ப் பழித்து (நான் பேசவும்), என்னுடைய தோழி! பிறர் அறியாமல் அவர் (நம்மோடு) பொருந்தியிருந்த களவொழுக்கமாகிய நட்பு (நாம் இற்செறிக்கப்பட்டதன் விளைவாக) சுருங்கிவிடவே, பிறையை ஒத்த (உன்னுடைய) நெற்றியைப் (பிரியாது இருத்தலை) அவர் விரும்பி, (மணம்பேச வந்து) நம்மோடு வாழ்தலை அவர் விரும்பிய நாளிலேயே (பெறும்படி) வரைவு முடித்தனர்.

கழறல்-இடித்துச் சொல்லுதல்.

# 10. வீயகம் புலம்ப...

இடி இடிக்கிறது. மழை பெய்கிறது. காரிருள் கவிந்திருக்கிறது. பேயும் நடமாடப் பயப்படும் அந் நடுநிசியில் தலைவன் குறியிடத்துக்கு வந்தான். நொச்சிப் பூவைப் பறித்துப் போட்டான். பூவிழுந்த ஓசை தலைவிக்கோ, தோழிக்கோ கேட்கவில்லை. ஆகவே தலைவன் திரும்பிப் போக நேர்ந்தது. அவன் நிச்சயமாக வந்திருப்பான்; ஏமாற்றமடைந்து திரும்பி இருப்பான் எனத் தலைவி நினைத்தாள். இயற்கை காரணமாக ஏற்பட்ட ஏமாற்றத்துக்கு அவன் தன்னைப் பொறுப்பாளியாகக் கருதுவானே என்று கலங்கினாள். தன் கலக்கத்தைத் தோழிக்குக் கூறினாள். அடுத்த நாள் தலைவன் வந்தான். அவனைத் தோழி முதலிற் சென்று கண்டாள். தலைவியின் மனக்கவலையை விவரித்தாள். அவளுக்கு ஆறுதல் அளிக்க வழி சொல்லிக் கொடுத்தாள். இவற்றைச் சித்தரிக்கிறது இப்பாடல்.

வீயகம் புலம்ப வேட்டம் போகிய
மாஅல் அம்சிறை மணிநிறத் தும்பி,
வாய்இழி கடாத்த வான்மருப்பு ஒருத்தலொடு
ஆய்பொறி உழுவை தாக்கிய பொழுதின்,
வேங்கைஅம் சினைஎன விறல்புலி முற்றியும்,
பூம்பொறி யானைப் புகர்முகம் குறுகியும்,
வலிமிகு வெகுளியால் வாள்உற்ற மன்னரை
நயன்நாடி நட்பாக்கும் வினைவர்போல் மறிதரும்;
அயம்இழி அருவிய அணிமலை நல்நாட! (1-9)

பூ தனிமையை அடையும்படி, வேட்டைமேல் சென்ற அழகிய இறக்கைகளையும், நீலமணி போன்ற நிறத்தையும் உடைய தும்பி, வாயிலிருந்து சொரிகின்ற மத நீரையும், வெண்மையான தந்தங்களையும் உடைய ஆண்யானை

யோடு அழகிய வரிகளையுடைய புலி போர் செய்த பொழுது, வேங்கைமரத்தின் அழகிய கொம்பு என்று கருதி வெற்றியை உடைய புலியை வட்டமிட்டும், பூக்கள் பொருந்தியிருப்பது போல் தோன்றும் யானையின் புள்ளிகளையுடைய முகத்தை நெருங்கியும், வல்லமையை மிகுதிப் படுத்தும் கோபம் காரணமாக வாளால் போர் செய்யும் அரசர்களை, நல்ல உபாயத்தைத் தெரிந்து சந்து செய்விக்கும் தொழில் நுட்பம் அறிந்தவர் (அவ்வரச ரிடையே மாறி மாறிச் செல்வதைப்) போலப் போய்வரும்; இத்தகைய சிறப்பினை உடைய) பள்ளத்தை (நோக்கிப்) பாயும் அருவிகளைப் பெற்ற அழகிய மலைகள் (நிறைந்த) நல்ல நாட்டின் தலைவனே!

வேட்டம்-வேட்டை; கடாம்-மதநீர்; ஒருத்தல் விலங்குகளில் ஆணைக் குறிக்குஞ் சொல்.

நயன்-பகை; இங்கு இருவரையும் சினம் தணியச் செய்யும் உபாயம். வரிகளையுடைய புலியை வேங்கையின் சினை என்று எண்ணிய தும்பி ஏமாற்றம் அடைந்து, பின் யானையின் மதநீரை உண்ண அதனிடம் சென்றது. அவன் மலையிலுள்ள தும்பி தனக்கு உணவைத்தரும் பூவைத் தனியே தவிக்கவிட்டு, வேட்டை மேற்சென்று துன்பமுற்றதைப்போல, அவனும் தனக்கு இன்பம் தரும் தலைவியைப் புறக்கணித்துவிட்டு, வேறுவகையில் இன்பம் பெற முயல்வது துன்பமாய் முடியும் எனத்தோழி தலைவனை எச்சரிக்கிறாள்.

ஏறுஇரங்கு இருள்இடை இரவினில் பதம்பெறாஅன்
'மாறினென்' எனக்கூறி மனம்கொள்ளும் தான்என்ப,
கூடுதல் வேட்கையான் குறிபார்த்துக் குரல்நொச்சிப்
பாடுஓர்க்கும் செவியோடு பைதலேன் யான்ஆக.(10–13)

அவனோடு கூடவேண்டும் என்ற விருப்பமிகுதியால் (அவன் வரவை அறிவிக்கும்) குறியை எதிர்பார்த்து, நொச்சிப் பூங்கொத்து விழும் (ஓசையைக்) கேட்கும் (கருத்தோடு இணைந்த) செவியோடு (காத்திருந்து, ஓசை

ஒன்றும் கேட்காமையால், அவன் வரவில்லையே என்று) வருந்தியவளாய் நான் இருக்கவும், அவன் இடி இடிக்கும் (சமயத்தில் இருட்டு வழியை (அஞ்சாது கடந்து வந்து) அந் நள்ளிரவில் என்னோடு கூடும் செவ்வியைப் பெறாதவனாய்த் (திரும்ப நேரிட்டதால்) நான் மனம் மாறிவிட்டேன் என்று சொல்லிக் (கொண்டு, அதனையே) நிச்சயப்படுத்திக் கொள்வான்.

மனங்கொள்ளல்-உறுதிகொள்ளுதல்; பாடு-ஒலி. பைதல்-வருத்தம். 'என்ப' அசை; 'மாறினென்' என்ற இறந்தகாலம் உறுதிபற்றிவந்தது. தலைவி கூறியபடியே தோழி தலைவனுக்குக் கூறுகிறாள். இவை வரும் தாழிசைகளுக்கும் ஒக்கும்.

அரும்செலவு ஆர்இடை அருளிவந்து அளிபெறாஅன்
'வருந்தினென்' எனப்பல வாய்விடூஉம் தான்என்ப
நிலைஉயர் கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலசூழும் மனத்தோடு பைதலேன் யான்ஆக. (14–17)

(நான் களவொழுக்கத்தை விட்டு மணஞ்செய்து கொள்ளும்- கற்பொழுக்கத்தை மேற்கொள்ளும்படி) என் நிலையை உயர்த்த (அருளும்) கடவுளுக்குச் (செய்ய வேண்டிய) கடன்களைக் (குறைவில்லாமல் செய்து முடிப்பதாக) மேற்கொண்டு, (இந் நள்ளிரவில் வருபவன் வழியில் துன்பம் ஒன்றும் இல்லாமல், விலங்குகளுக்கோ, மனிதர்களுக்கோ அகப்படாமல் வரவேண்டுமே, என்பவை போன்ற அவனைப்பற்றிய எண்ணங்களையே நினைக்கும் மனத்தோடு (அவன் எனக்காக இரவில் வருவதற்கு இரங்கி) வருந்துபவளாய் நான் இருக்கவும். அவன் கடப்பதற்குக் கடினமான (துன்பம்) நிறைந்த வழியை (என்னிடம் கொண்ட) அன்பு மிகுதியால் கடந்து வந்து (அவனிடம் எனக்குள்ள) அன்புமிகுதியால் அடையும் இன்பத்தை அடையாமல் (திரும்ப நேர்ந்தவன்) (இவ் ஏமாற்றத்துக்கு) நான் மிகவும் வருந்தினேன் என்று பல (முறை) சொல்லி (வருந்துவான்)

கனைபெயல் நடுநாள்யான் கண்மாறக் குறிபெறா அன்
புனைஇழாய் என்பழி நினக்குஉரைக்கும் தான்என்ப—
துளிநசை வேட்கையால் மிசைபாடும் புள்ளின்தன்
அளிநசை ஆர்வுற்ற அன்பினேன் யான்ஆக. (18–21)

*(தன்னைக்காக்கும்)* மழையை விரும்பி, அன்பு மிகுதியால், *(அதனைப் பயக்கும்)* வானத்தைப் *(புகழ்ந்து)* பாடும் வானப்பாடிப் பறவையைக் காட்டிலும், அவன் தலையளியை விரும்பி *(அவனிடம்)* நிறைந்த அன்புடைய வளாய் நான் இருக்கவும், செறிந்த மழை *(பெய்யும்)* நள்ளிரவில் நான் *(தடுமாற்றத்தால்)* இடம்பெயர்ந்தால் குறி இடத்தில் என்னைக் காணப் பெறாதவனாய்த் *(திரும்ப நேர்ந்த)* அவன் அழகாகப் பூட்டப்பட்டுள்ள ஆபரணங் களை அணிந்தவளே! உனக்கு *(என்னைத்தான் காணப்பெறாதது)* என்னுடைய தவறு *(எனக்)* கூறுவான்.

கூட்டம் நிகழாததால், தலைவன் வருந்தியதை முதல் தாழிசையில் கூறி, அவன் தன்னைப்போலவே தலைவியும் வருந்தியிருப்பாள் எனக்கொண்டு, அவள் நிலைக்கு இரங்கியதை இரண்டாம் தாழிசையில் விளக்கி, இறுதியில் இவ்வாறு இருவரும் கலங்கக் காரணம் தலைவியே எனத் தலைவன் கூறுவதைக் கூறும், முறை வைப்பு உணர்ந்து மகிழத்தக்கது. இவ்வாறு தலைவன் மன நிகழ்ச்சிகளைத் தெரிந்து கூறியவள் தலைவி; அதனால் இக்காதலர்கள் ஒருவரிடத்து ஒருவர் கொண்டிருந்த பற்றின் செறிவு வெளிப்படுகிறது.

என ஆங்கு
கலந்தநோய் கைம்மிகக் கண்படா; என்வயின்
புலந்தாயும் நீஆயின் பொய்யானே வெல்குவை;
இலங்குதாழ் அருவியோடு அணிகொண்ட நின்மலைச்
சிலம்பு போல் கூறுவ கூறும்
இலங்குஎர் எல்வளை இவளுடை நோயே. (22–27)

*(இவளைப்)* பொருந்தி இருக்கும் நோய் *(இவளுடைய பொறுமையின்)* எல்லையைக் கடந்திருப்பதால், இவள்

அதனைத் தாங்க முடியாதவளாய் இருக்கிறாள்; என்னிடத்தே கோபங்கொண்டவனைப் போல நீ (நடித்தாயானால்) அப்பொய்த் தோற்றத்தால் இவள் (வருத்தத்தைப் போக்குவதில்) வெற்றி கொள்வாய்; விளக்கம் உடையதாய் ஓடிவரும் அருவியின் ஓசையோடு மாறுபடாத) அழகுடைய உன்மலைச்சாரலின் எதிரொலியைப்போல, அழகுமிகுந்து ஒளியைவிடும் வளைகளைப் பூண்ட இவளுடைய நோயால் (வருந்தும் மனம்) நீ கூறுவதையே (எதிரொலித்துக்) கூறும்.

## 11. ஒன்று இரப்பான்போல்...

என்ன செய்வது என்று தோழிக்குத் தெரியவில்லை. தலைவி தைரியமற்றவள்; தலைவன் தரும் தொல்லையோ நாளுக்கு நாள் அதிகப்படுகிறது. 'நீ பரபரப்புடன் நடந்துகொண்டால் தான் என் உயிர் நிற்கும்' என இறுதி எச்சரிகையும் விடுத்துவிட்டான். என்ன செய்வது? தனக்கு உண்மை தெரிந்துவிட்டது எனத் தோழி அறிவிப்பதைத் தலைவி எப்படி ஏற்றுக் கொள்ளுவாளோ? களவொழுக் கத்தை மேற்கொள்ள விரும்புகிறாளோ, இல்லையோ? இச்சிக்கல்களைப் பற்றிச் சிந்திக்க சிந்திக்க திகைப்பு அதிகப்பட்டதே ஒழிய, தோழிக்குத் தகுந்த வழி விளங்கவில்லை; தான் துணிவுடன் ஒரு முடிவுக்கு வந்து, அதனை இருவரையும் ஏற்கவைப்பதே சிறந்தது என்று துணிகிறாள். தோழியின் தொல்லையையும், அதனின்றும் அவள் தன்னை விடுவித்துக் கொண்ட விதத்தையும் விவரிக்கிறது இப்பாடல்.

ஒன்று, இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும்; உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்;
வல்லாரை வழிபட்டு ஒன்றுஅறிந் தான்போல்

நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்,
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன்தன் ஆண்தகை விட்டுஎன்னைச்
சொல்லும்சொல் கேட்டீ, சுடரிழாய்!—பன்மாணும். (1–8)

ஒளிவிடுகின்ற அணிகளைப் பூண்டவளே! என்னிடத்தில் எதனையோ யாசித்துப் பெற (விரும்பியவனைப் போல்), பிறர் கண்டு இகழக்கூடிய ஏழ்மை நிலையை மேற்கொண்டு தன் குறையைக் கூறுவான்; உலகம் முழுவதையும் அடக்கி ஆளும் தன்மையை உடையவனைப் போலப் பெருமிதம் உடையவனாகக் காணப்படுகிறான்; பிறர்க்கு அறிவிக்கும் ஆற்றல் வேண்டி அறிஞர்களை வேண்டி நின்று (அறிய வேண்டியவற்றுள்) சிறந்த ஒன்றை நன்றாக உணர்ந்தவனைப் போல, நல்லவரிடத்துத் தோன்றும் (உயர்ந்த பண்பாகிய) அடக்கத்தை உடையவனாக இருக்கிறான்; பொருள் இல்லாதவனுடைய வறுமையைத் தன் கொடையினால் போக்க முடிந்தவனைப் போன்ற வல்லமையும் உடையவனாய் இருக்கிறான்; இத்தகைய (சிறப்புகளைப் பெற்றிருக்கும்) ஒப்பற்ற தன்மையை உடைய ஒருவன் தன் உரிமையைக் கைவிட்டு, என்னிடம் பல முறைகள் சொல்லிய சொற்களைக் கேள்.

தலைவனுடைய குணங்களை உயர்த்திக் கூறுகிறாள் தோழி; இப்படிப்பட்டவன் இரந்து கேட்பதை மறுப்பது நமக்கு இழிவையே தரும் எனத் தலைவியை எண்ணிக் கொள்ளத் தூண்டுவதே அவள் நோக்கம். அடக்கம் தெரிந்தவன் அனைத்தையும் அறிந்தவனாகக் கருதப்படுவது கவனிக்கத் தக்கது.

'நின்னின்றி அமையலேன் யான்' என்னும் அவனாயின்;
அன்னான்சொல் நம்புண்டல் யார்க்கும் இங்கு அரிதாயின்;
என்உற்ற பிறர்க்கும்ஆங்கு உளகொல்லோ—நறுநுதால்?
(9–11)

அவனோ, நீ இல்லாமல் நான் வாழ்க்கையில் நிறைவைப் பெற்றவனாகமாட்டேன் என்று சொல்லுகிறான்; (நாம் இல்லாது வாழ்க்கையே பாழாகும் எனச் சாதிக்கும்) அத்தகையவனுடைய சொற்களை (அவற்றின் உண்மையை அறிய வாய்ப்பு இல்லையாகையால்) நம்புதல் எவருக்கும் முடியாதது; நல்ல முகமுடையவளே! என்னைச் சேர்ந்த (அவன் உண்மையை உரைத்தானா என்று முடிவு செய்ய வேண்டிய) பொறுப்பு, வேறு எவருக்கேனும் இருக் கின்றதோ?

தலைவனும், தலைவியும் அவன் கூறிய அளவுக்கு அன்புமிக்க காதலர்கள் தாமா என அறிவதற்குத் தோழியின் சொற்கள் உதவுகின்றன; சொல்கின்றன. 'நின்னின்றி அமையலேன்' என அவன் கூறியதாகச் சொல்லுகையில் களிப்பும், 'அன்னான் சொல் நம்புண்டல் அரிது' என்று கூறுகையில் கவலையும், 'என்னுற்ற பிறர்க்கும் உளகொல்' என்னும் பொழுது இரக்கமும் தலைவிக்கு தோன்றும். இவை தலைவி அவனிடத்துச் கொண்டுள்ள அன்புமிகுதியை உணர்த்தும் சான்றுகள்.

'அறியாய்நீ, வருந்துவல் யான்' என்னும் அவனாயின்;
தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கும் அரிதாயின்;
அளியரோ எம்போல் ஈங்குஇவன் வலைப்பட்டார்!
(12–14)

அவனோ, 'நான் மிகவும் துன்பப்படுகின்றேன்; அதன் எல்லையை நீ அறியாதவளாய் இருக்கிறாய்' என்று சொல்லுகிறான்; பெண்களுக்கு (பிறரோடு சூழாமல்) தாமே ஒரு துணிவுக்கு வருதல் அரிது, என்னைப்போல் இவன் வலையில் சிக்கியவர் இரங்கத் தக்கவர்களே!

தலைவி அவனிடத்து அன்புகொண்டவள் என உணர்ந்த தோழி, இங்கு அவளைப் பரிகசிக்கிறாள். தோழிக்கு மறை புலப்பட்டு விட்டதே எனக் கவன்ற தலைவிக்கு ஆறுதல் கூறுகின்றாள் என்பதும் ஏற்கும். அவன் வலையில்பட்ட நான், உன்உதவி இன்றி அவனுக்கு ஒன்றும்கூற முடியாதவளாய்த் திகைப்பது போலவே, அவன்

வலைப்பட்டிருக்கும் நீயும், இனி என் உதவியின்றி அவனைக் கூடி மகிழ்தல் முடியாது என்பது குறிப்பு.

வாழலேன் யான்என்னும் நீப்பின் அவனாயின்;
ஏழையர் எனப்பலர் கூறுஞ்சொல் பழியாயின்;
சூழுங்கால் நினைப்பதொன்று அறிகிலேன் வருந்துவல்.
(15–17)

அவனோ, 'நீ கைவிட்டால் நான் வாழமாட்டேன்' என்கிறான்; பெண்கள் அறிவில்லாதவர் எனப் பலரும் கூறுவது வீண்பழியே; (இருப்பினும்) அவன் துயரை நீக்க வழியை) ஆராயும்பொழுது, நல்ல வழியொன்றினைக் காணமுடியாமல் வருந்துகிறேன்.

தலைவி களவொழுக்கத்தை விரும்பி ஏற்றுக்கொள்வாளா என்று அறியத் தோழிபோடும் தூண்டில் இத்தாழிசை.

சூழுங்கால், நறுநுதால்! நம்முளே சூழ்குவோம். (18)

நல்ல முகத்தைை உடையவளே! (அவன் துயரைப் போக்க வழி காண முயலும்போது, நமக்குள்ளேயே ஆராய்ந்து கொள்வோம்.

தலைவி வழி எதனையும் கூறவில்லை. ஆனால் மறை பிறர்க்குப் புலப்படாமல் பாதுகாக்கவேண்டும் என்ற ஆவல் உடையவளாய் இருக்கிறாள். இது தலைவி கூற்று.

அவனை
நாண்அடப் பெயர்த்தல் நமக்கும்ஆங்கு ஒல்லாது;
பேணினர் எனப்படுதல் பெண்மையும் அன்று; அவன்
வௌவினன் முயங்கு மாத்திரம்; வாவெனக்
கூறுவென் போலக் காட்டி,
மற்றுஅவன் மேஎவழி மேவாய் நெஞ்சே! (19–24)

நாணம் நம்மை வருந்தச் செய்யவும் அதனைப் (பொருட்படுத்தாமல், அவனை எதிர்சென்று போய்)

போக்குதல் நமக்குச் செய்ய முடியாதது; (களவொழுக் கத்தை) விரும்பிக் கைக்கொண்டனர் என்று (பிறரால் இகழ்ந்து) பேசப்படுதல் நம் பெண் தன்மைக்கு ஏலாதது; அவன் (உன் நிலையை ஆராயாமல்) வலியக் கொண்டு சென்று கூடும் அளவுக்கு ஆத்திரமுடையவனாய் இருக்கிறான்; (களவொழுக்கத்தை மேற்கொள்ளத் துணிந்து குறியிடத்தே) வா என்று கூறுபவள்போல (அவனுக்கு குறியிடம் ஒன்றைச்) சுட்டி, அங்கு அவனைச் சந்தித்து, நம் மனத்திலுள்ளவற்றை உணர வைத்து) அவனும் நமக்கு நன்மையைச் சூழ்வான் ஆகையால்) அவன் விரும்பிய வழியை (களவொழுக்கத்தை மேற்கொள்ளுதலையோ, வரையும்வரை பொறுத்திருத்தலையோ) மனமே! (நீயும்) மேற்கொள்ளுவாய்.

தனக்கும் துணிவில்லாமல், தலைவியும் ஒரு வழி சொல்லாமல் இருக்கும் நிலையில் தோழி செய்யக்கூடியது இது ஒன்றே. சுரிதகம் தோழி இனி என்ன செய்யவேண்டும் என்று மனத்தே ஆராய்ந்ததனை, வாய்விட்டுச் சொல்லியதுபோல் அமைந்திருக்கிறது.

## 12. ஆமிழி அணிமலை...

தலைவி இற்செறிக்கப்பட்டாள்; தலைவன் தவறாமல் தினந்தோறும் இரவில் வந்து அவளைக் கூடிச்சென்றான். அவர்கள் களவொழுக்கத்தை அன்னை எவ்விதத்திலோ கண்டுகொண்டாள். தலைவன் வந்த சமயத்தில் விழித்துக் கொண்டு, தலைவியை வெளிக் கிளம்ப முடியாமல் செய்து விட்டாள். ஏமாற்றம் அடைந்து திரும்பினான் தலைவன். அவனைத் தோழி, அடுத்த நாள் சந்தித்து, அவன் ஏமாற்றமடைய நேர்ந்த காரணத்தையும், தலைவியின் மன நிலையையும் விவரித்துக் கூறி வரைவு கடாவினாள். அவள் தலைவனுக்குக் கூறியவற்றை அப்படியே தலைவிக்கு உரைப்பதுபோல் அமைந்திருக்கிறது இப்பாடல்.

ஆம்இழி அணிமலை அலர்வேங்கைத் தகைபோலத்
தேமூசு நனைகவுள், திசைகாவல் கொளற்குஒத்த
வாய்நில்லா வலிமுன்பின், வண்டுஊது புகர்முகம்
படுமழை அடுக்கத்த, மாவிசும்பு ஓங்கிய
கடிமரத் துருத்திய கமழ்கடாம் திகழ்தரும்
பெருங்களிற்று இனத்தொடு வீங்கு எருத்து எறுழ்முன்பின்
இரும்புலி மயக்குற்ற இகல்மலை நல்நாட! (1–7)

நீர் (அருவிகளாய்) இறங்கிவரும் அழகிய மலையில் பூக்கின்ற வேங்கை (மலர்களின்) சிறப்பினைப் போலவே, தேன்வண்டுகள் (எப்பொழுதும்) மொய்த்துக் கொண்டிருக் கும் (மதநீரால்) நனைந்த கன்னங்களையும் (எட்டு) திசைகளின் காவலை ஏற்றுக்கொள்ளும் தகுதியையும் (பகைவிலங்குகள் ஒன்றும்) எதிர்நிற்காத வல்லமையையும், வண்டுகள் ஒலித்துக் கொண்டிருக்கும் புள்ளிகளையுடைய முகங்களையும் (பெற்று), ஓயாத மழையினையுடைய மலைகளில் வாழ்வனவும், உயர்ந்த ஆகாயத்தின் அளவுக்கு ஓங்கிய மிகுதியான மரங்களை உடைய ஆற்றிடைக் குறைகளில் வாழ்வனவும் (ஆகிய) மணம் கமழும் மதத்தோடு விளங்கும் பெரிய யானைக் கூட்டங்களோடு, பெருத்திருக்கின்ற கழுத்துகளையும் மிக்க வல்லமையையும் உடைய புலிகள் மாறுபட்டுச் சண்டையிடும் மலைகளை உடைய நல்ல நாட்டின் தலைவனே!

ஆம்-நீர்; 'தேன் மூசு' என்றிருக்க வேண்டிய தொடர் 'தேமூசு' எனக்குறைந்து வந்தது. 'வாய்நில்லா' என்பது 'கண்நின்று' (1) என வந்ததைப்போல், சொல்தொக உருபுநின்றது. முன்பு, எறுழ்-வலிமை; 'வலி முன்பின்' எறுழ் முன்பின்' என ஒரே பொருளுடைய சொற்கள் மிகுதியை உணர்த்த அடுக்கி வந்தன. துருத்தி-ஆற்றிடைக்குறை; ஆறு இரண்டாகப் பிரிந்து கூடுவதால் ஏற்படும் இடை நிலம். கடி-மிகுதி, செறிவு, நெருக்கம். வேங்கை மலர்கள் மொய்ப்பதைப் போலவே, வண்டுகள் யானையின் மத நீரை உண்ண அதன் கன்னங்களை மொய்க்கின்றன. மலைவாழ்வன, ஆறு வாழ்வன,

காடு வாழ்வன, என யானைகளை மூன்று வகைகளாகப் பிரித்துக் கூறுவது வழக்கம். (கிரிசரம், நதிசரம், வனசரம், என்பர்.)

வீழ்பெயல் கங்குல்நின் விளிஓர்த்த ஒடுக்கத்தால்
வாழுநாள் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ?
தாழ்செறி கடுங்காப்பின் தாயமுன்னர், நின்சாரல்
ஊழ்உறு கோடல்போல் எல்வளை உகுபவால்! (8–11)

(இடைவிடாமல்) பெய்கின்ற மழையை உடைய இரவில், (நடுநிசியில்) உன் குரலைக் கேட்டதனால் உண்டாகும் மன ஒடுக்கத்தால் (தன்னுடைய) வாழ்நாள் மிகப்பெற்ற வளுடைய மெலிகின்ற தோள்களுக்குப் பழி (எதுவேனும்) உண்டோ? தாழ்பொருத்தி வைத்திருப்பது போன்ற கடுமையான காவலை மேற்கொண்டுள்ளதாயின் முன்னர், உன் மலைச்சாரலில் நல்ல நிறத்தைப் பெற்ற கோடல் பூக்கள் (அலர்ந்தபின், உதிர்தலைப்) போல, ஒளிவிடும் (இவளுடைய) வளைகள் கழன்று விழுகின்றனவே!

ஒடுக்கம்-தன்னிலே அடைதல்; மனம் அசைவின்றித் தன்னிலையில் நிற்கும்பொழுது மூச்சு நிற்கும் என்பது யோகநூலார் துணிபு. அவ்வாறு மூச்சு நிற்கும்பொழுது, இவள் இறந்து விடுவதில்லை; அதற்கு மாறாக ஒளியுடன் ஒரு கணம் காணப்படுகிறாள். தன் வருகையைத் தலைவிக்கு அறிவிக்க அவன் குரல் கொடுத்தவுடனே, அதனை வேறு யாராகிலும் கேட்டுவிடப் போகிறார்களே என்ற அச்சம் ஒரு கணம் அவள் மூச்சை நிறுத்திவிடுகிறது. எனினும், அக்குரலே, இருளையும், மழையையும் பொருட்படுத்தாமல் வந்த அவனுடைய அன்பு மிகுதியையும் அவளுக்கு உணர்த்துகின்றது. ஆகையால், அடுத்த கணம் அவள் பொலிவுடன் காணப்படுகின்றாள். தலைவன் தவறாது வந்தும் தான் அவனோடு கூடியிருக்க முடியவில்லையே என்ற எண்ணம் அவள் தோள்களை மெலியச் செய்கிறது.

இனைஇருள் இதுஎன ஏங்கிநின் வரல்நசைஇ
நினைதுயர் உழப்பவள் பாடுஇல்கண் பழிஉண்டோ?
இனையள்என்று எடுத்துஅரற்றும் அயல்முன்னர்,

நின்சுனைக்
கனைபெயல் நீலம்போல் கண்பனி கலுழ்பவால்!

இத்தகைய (செறிந்த) இருளாயிருக்கின்றதே (அவர் ஏதம் இன்றி வரவேண்டுமே) என்று ஏங்கியவளாய் உன்னுடைய வருகையை விரும்பி, அதுவே நினைவாக (கழிகின்ற ஒவ்வொரு கணமும் நீ இன்னும் வரவில்லையே என்று) துன்பப்படுபவளுடைய தூக்கம் இல்லாத கண்களுக்குக் குற்றம் (எதுவேனும்) உண்டோ? களவொழுக்கத்தை மேற்கொண்டிருக்கிறாள் இவள் என்று உரக்கச் சொல்லிப் பரிகசிக்கும் அயலார் முன்னிலையில், உன் மலைச் சுனையில் உள்ள மிக்க மழையைப் பெற்ற குவளை மலர் களைப் போலவே, (இவள் கண்கள்) நீரைச் சொரியுமே!

பல்நாளும் படர்அடப் பசலையால் உணப்பட்டாள்
பொன்உரை மணிஅன்ன மாமைக்கண் பழிஉண்டோ?
இன்நுரைச் செதும்புஅரற்றும் செவ்வியுள் நின்சோலை
மின்உகு தளிர்அன்ன மெலிவுவந்து உரைப்பதால்.
(16–19)

(உன்னைக் காணாது கழித்த) பல நாட்களும் உன் நினைவாகிய துன்பம் வருத்துவதனால், பசலை நோயால் (தன்மேனி அழகு) உண்ணப்பட்டவளுடைய, பொன்னை உரைத்துச் செய்யப்பட்ட மணிபோன்ற (இவளுடைய) மாமைநிறத்தினிடத்துக். குற்றம் (எதுவேனும்) உண்டோ? இனிமையானதும். நுரைகளையுடையதுமான சின்னீர் அலைக்கும் காலத்தில், உன்னுடைய சோலையில் உள்ள ஒளிநீங்கிய தளிர்களுக்குத் தோன்றுவது போன்ற (நிறக்கேடாகிய) துன்பம் பொருந்தி (இவளுடைய களவொழுக்கத்தைப் பிறர்க்கு) வெளியிடுகின்றதே!

மாமை-பொன்னை ஒத்தநிறம்; இது மகளிர் எழிலை மிகுதிப்படுத்தும்; அதனால் 'மாமைக் கவின்' என்று கூறப்படும்.

பசலை மாமைக் கவினைத் தொலைத்து, மகளிர் மேனியை ஒளிமங்கச் செய்வதால் நோய் எனப்பட்டது. இதனையும் பொன்னுக்கு (ஒளிமங்கித் தோன்றும் பொன்னுக்கு) ஒப்பிடுவர். ஆகவேதான் மாமைக்கு 'பொன்உரைமணி' உவமிக்கப்பட்டது. 'சின்னீர்' புது மழையைக் குறிப்பிடுகின்றது. தண்ணீர் எப்பொழுதும் தங்குவதால் தளிர்கள் நிறம் மாறி வெளுக்கும்.

என ஆங்கு
பின்ஈதல் வேண்டும்நீ பிரிந்தோள்நட்பு எனநீவிப்
பூங்கண் படுததலும் அஞ்சுவல், தாங்கிய
அருந்துயர் அவலம் தூக்கின்
மருங்குஅறி வாரா மலையினும் பெரிதே! (20–24)

என்று (உன்னுடைய நிலையையும், மனக்கவலையையும் எடுத்துக்கூறி) காவல் மிகுதி காரணமாக (உன்னோடு) பிரிந்திருக்கிறவளுடைய உறவை நீ (அவளை வரைவதால் இனி உன்னிடமிருந்து அவள் பிரியமுடியாதபடி) பின்னி விடுதல் வேண்டும்' என்று (வற்புறுத்திவிட்டு அவனை) நீங்கி, (மீண்டும் ஒன்றைக் கூற நினைத்துக்கொண்டவளைப் போலத் திரும்பி, இவள் இப்பொழுது) பொறுத்துக் கொண்டிருக்கும் மிகுதியான துன்பத்தின் (அளவை) ஆராய்ந்து பார்த்தால், (அது) அருகே சென்று அளந்து அறிய முடியாத மலையைக் காட்டிலும் பெரியதாகை யினால், (நீ வரைவு முயற்சியை விரைவாகச் செய்து முடிக்காவிடின்) பூப்போலும் கண்களை உடைய இவள் இறந்துவிடுதலையும் அஞ்சுகிறேன். (என்று கூறினேன்)

தோழி வரைவு கடாஅய விதத்தைத் தலைவிக்கு அறிவித்ததாகப் பொருள் விரிக்காவிடின், சுரிதக(ம்) முதலடியில் உள்ள 'என' என்பதை அசையாகக் கொள்ள நேரிடும்; படுதலைத் தூங்குதலாகக் கொண்டு, தலைவி தூங்கினாள் என்றால் ஒரளவு துயர்தீர்ந்தாள் அல்லவோ என்ற ஐயத்துக்கு இடம்தர நேரிடும்.

# 13. கொடுவரி தாக்கி...

தலைவன் இரவில் வந்து போகிறான். அவன் வருகையால் தலைவி துன்பமே அடைகிறாள். ஆகவே அவனைப் பகலில் வருமாறு கேட்டுக் கொள்வதை இப்பாடல் விரிக்கிறது.

கொடுவரி தாக்கி வென்றவருத்தமொடு
நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை
நனவில்தான் செய்தது மனத்தது ஆகலின்
கனவில் கண்டு கதும்என வெரீஇ,
புதுவ தாக மலர்ந்த வேங்கையை
அதுஎன உணர்ந்து,அதன் அணிநலம் முருக்கி,
பேணா முன்பின்தன் சினம்தணிந்து; அம்மரம்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது
நாணி இறைஞ்சும் நல்மலை நல்நாட! (1–9)

வளைந்த கோடுகளை உடைய புலியை (எதிர்த்துப் போரிட்டு) வெற்றி பெற்றதால் உண்டான அயர்ச்சியோடு, உயர்ந்த மலையின் சாரலிலே தூங்கும் யானை, நனவில் அது செய்தவை (போர்நிகழ்ச்சிகள்) அதன் 'மனத்தை விட்டு நீங்காமலிருந்ததால், (தூக்கத்திலும் புலியோடு போர் செய்வதாகக்) கனவு கண்டு, விரைவாகப் பயந்து, எழுந்து புதிதாகப் பூத்து (விளங்கிய) வேங்கை மரத்தை (தூக்க மயக்கத்தில்) அப்புலியே என்று எண்ணி, அதன் அழகிய செவ்வியைக் கெடுத்து, (பகையின் தூண்டுதலாக) அடங்காத வல்லமையினால் தோன்றிய தன் கோபம் அடங்கி (பின்னர்) அம்மரத்தைக் காணும்தொறும் பார்வையை (அதன் மீது) செலுத்தாமல், நாணித் தலை குனிந்து செல்லும் (தன்மையுடைய) வளம் மிகுந்த மலைகளை உடைய சிறந்த நாட்டின் தலைவனே!

கோபத்தின் நிலைக்களன் முரட்டுத்தனம். ஆகையால் 'பேணா முன்பின் சினம்' எனப்பட்டது. அவன் மலையில் வாழும் யானை தன் பகையாகிய புலியை வென்றதேனும், தனக்கு ஆதரவான வேங்கையோடு மயக்கத்தால் மாறுபட்டு மனத்தளர்ச்சி அடைந்து நாணி நடத்தலைப்போல, அவனும் தன் ஒழுக்கத்துக்குத் தடையான இரவுக் குறியின் ஏதங்களை அஞ்சாது அவற்றைக் கடந்து வந்தானேயானாலும், தனக்கு நன்மை செய்யக்கூடிய தலைவியின் சுற்றத்தாரை ஆராய்ச்சியின்மையால் இடையூறு செய்பவர் எனக் கொண்டு, அவர்களுக்கு எதிர் நிற்க அஞ்சி மறைந்த களவொழுக் கத்தை மேற்கொண்டிருக்கிறான்.

போதுஎழில் மலர்உண்கண் இவள்மாட்டு நீ இன்ன
காதலை என்பதோ இனிது;மற்று இன்னாதே
மின்ஒரும் கண்ணாக, இடிஎண்ணாய் பெயல்என்னாய்
இன்னதோர் ஆர்இடை ஈங்குநீ வருவதை. (10–13)

மலரும் செவ்வியை உடைய அழகிய மலர்போன்ற ஆளை விழுங்கும் கண்களை உடைய இவளிடத்து நீ இத்தகைய அன்புடையவன் என்பது மகிழ்ச்சி அளிக்கிறது; ஆனால், மின்னலைக் கவனிக்கும் கண்களோடு, இடி என்றும் மழை என்றும் பாராமல், இத்தகைய கடத்தற்கரிய வழியைக் (கடந்து) நீ இங்கு வருவது துன்பத்தைத் தருகிறது.

செறிந்த இருளில் மின்னலின் உதவியால், வழி நடக்க வேண்டும் என்பதை, 'மின் ஒருங்கண்' குறிப்பிடுகின்றது.

இன்புற அளித்தனை இவள்மாட்டு நீஇன்ன
அன்பினை என்பதோ இனிது–மற்று இன்னாதே
மணம்கமழ் மார்பினை மஞ்சுஇவர் அடுக்கம்போழ்ந்து
அணங்குடை ஆர்இடை ஈங்குநீ வருவதை. (14–17)

மகிழ்ச்சி அடையும்படி அளிசெய்தாய் (ஆகையால்) இவளிடத்து நீ இத்தகைய அன்புடையவனாய் இருக்கிறாய் என்பது விரும்பத்தக்கது; ஆனால் மணம் வீசும் மார்பினை உடையவனாய நீ, மேகங்கள் படிந்திருக்கின்ற பக்க

மலைகளைக் கடந்து அணங்குகள் நடமாடும் இக்கடத்தற் கரிய வழியைக் (கடந்து) இங்கு வருவது துன்பம் தருகிறது.

இவர்தல்-படர்தல்; போழ்தல்-பிளத்தல், இருபக்க மலைகளுக்கு இடையே உள்ள வழியே வந்ததை இங்கு உணர்த்துகிறது; அணங்கு-வருத்தும் தெய்வம்; மேகம் படர்ந்திருப்பதால் மின்மினிகளின் ஒளியும் இல்லாத செறிந்த இருளாயிற்று.

இருள்உறழ் இரும்கூந்தல் இவள்மாட்டு நீஇன்ன
அருளினை என்பதோ இனிது;மற்று இன்னாதே
ஒளிறுவேல் வலன்ஏந்தி ஒருவன்யான் என்னாது
களிறு இயங்கு ஆர்இடை ஈங்குநீ வருவதை (18–21)

இருள் ஒத்த கரிய கூந்தலை உடைய இவளிடத்தில் நீ இத்தகைய அன்பு மிகுதி உடையவனாயிருக்கிறாய் என்பது மகிழ்ச்சி தருகிறது. ஆனால், ஒளிவிடும் வேலை வலக்கையில் ஏந்தியவனாய் 'நான் தனியே வருகிறேன்' என்று அஞ்சாமல், நீ யானைகள் போக்குவரவு செய்யும் கடத்தற்கரிய வழியைக் (கடந்து) இங்கு வருவது துன்பத்தைத் தருகிறது.

உறழ்-உவமவுருபு; மாறுபாடு என்பதும் பொருந்தும்;

அதனால்,
இரவின் வாரல், ஐய! விரவுவீ
அகல்அறை வரிக்கும் சாரல்
பகலும் பெறுவைஇவள் தடமென் தோளே. (22–25)

ஆகவே, தலைவ! இனி இரவுக் காலத்தில் இங்கு வரவேண்டா. இவளுடைய அகன்ற மெல்லிய தோள்களை, மலர்கள் பல கலந்து கோலம் இழைத்திருப்பது போல் காணப்படும் இம்மலைச்சாரலிடத்தே, பகற் காலத்திலும் (அணைக்கப்) பெறுவாய்.

# 14. வாங்குகோல் நெல்லோடு...

அவன் கெட்டிக்காரன், வந்தான்; கண்டான்; வென்றான். தலைவி அவன் காதலை ஏற்றுக் கொண்டு விட்டாள். இனி அவள் பொறுப்பு அதிகமாயிற்று. அவனை அவள் வெற்றி கொள்ள வேண்டும்; எப்பொழுதும் பிரியாதிருக்கச் செய்யவேண்டும். தோழி தலைவியை எப்படிப் பாராட்ட வேண்டும் எனத் தலைவனுக்குக் கூறியதை விவரிக்கிறது இப்பாடல்.

வாங்குகோல் நெல்லோடு வாங்கி வருவைகல்
மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி
தூங்குஇலை வாழை நளிபுக்கு, ஞாங்கர்
வருடை மடமறி ஊர்விடைத் துஞ்சும்;
இருள்தூங்கு சோலை இலங்குநீர் வெற்ப! (1–5)

சூரியன் தோன்றும் காலத்தில், தானாக வளைந் திருக்கும் மூங்கிலை நெல்லோடு வளைத்துத் தின்ற முழங்காலையுடைய பெரிய பெண் யானை, நெருங்கிய இலைகளையுடைய வாழைக் காட்டினுள் புகுந்து, அங்கே வருடைமானின் மடப்பம் பொருந்திய குட்டிகள் ஓடியாடும் இடத்தில் தூங்கும்; இருள் நிறைந்த சோலை களையும், விளங்குகின்ற அருவிகளையும் உடைய மலைநாட்டுத் தலைவனே!

மிசைதல்-உண்ணல்; யானை வளைந்த மூங்கிலை முழங்கால்களில் இடுக்கிக்கொண்டு, துதிக்கையால் அதனை வளைத்து ஒடித்துத் தின்றது. 'தூங்கு-அசை, செறி; நளி-நெருக்கம். செறிவு; மறி-குட்டி; இருள் தூங்குதல்-இருள் கவிந்திருத்தல்; அவன் மலையில் வாழும் யானை பாடுபடாமல் பெற்ற மூங்கிலைத் தின்று, கவலையின்றி வாழைக் காட்டில் தூங்கியதைப்போல, அவனும் முயற்சியின்றிப் பெற்ற தலைவியைக் கூடி, அவளைப் பற்றிய கவலையின்றி, வரைவு முயற்சி செய்யாமல் இருந்துவிடுவானோ என்பது குறிப்பு. தோழியின் அச்சத்தை இது உணர்த்துகின்றது.

அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவுவில் மேல்அசைத்த கையை; ஓராங்கு
நிரைவளை முன்கைஎன் தோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குரல் ஏனல்
கடிதல் மறப்பித்தாய்; ஆயின் இனிநீ
நெடிதுஉள்ளல் ஓம்புதல் வேண்டும். (6–11)

பாம்பின் அடையாளத்தோடு வருந்தும் தன்மையும் சேர்ந்த வல்லமையுடைய வில்லின்மீது வைத்த கையை உடையவனாய் இருக்கிறாய்; சேர நிறைந்த வளைகளைப் பூண்ட முன் கைகளை உடைய என் தோழியை நீ (பார்த்த) பார்வையினால், (பசித்து) வந்துவிழும் கிளிகள் அலையும் பசிய கதிர்கள் உடைய தினைப் பயிரில் (அவை விழ ஒட்டாமல்) (அவளை) ஓட்டுதலை மறக்கச் செய்தாய், ஆகையால் இனி நீ (இவளை) மிகுதியும் நினைத்தலை (மேற்கொண்டு, அதனைப்) பாதுகாத்தல் வேண்டும்.

அணங்கு-வருத்தும் தெய்வம்; இங்கு குணம் மட்டும் கொள்ளப்பட்டது. பாம்பின் வடிவத்தைப் பெற்று அச்சத்தை விளைவிப்பதும் எய்வித்தாரைக் கொல்லும், இயல்புடையதுமாகிய வில்லைப் பிடித்தவன் அன்புடையவனாய் இருப்பானோ என்று அஞ்சுகிறாள் தோழி; கண்டாரைக் கவர்விக்கும் அழகிய வளைகள் நிறைந்த மெல்லிய கைகள் அவனையும் கவர்ந்தது கண்டு சற்று ஆறுதலடைகிறாள். அவனுடைய அச்சுறுத்தும் தோற்றத்தையும், அதனோடு முரண்பட்ட தலைவியின் கவர்ச்சியான தோற்றத்தையும் தோழி விவரிப்பது, அவன் தன்னிலைவிட்டுத் தலைவியைப் போல் ஆகவேண்டும் என வற்புறுத்தவே. அவள் குறிப்பாக இன்னொரு முறையும் இதனையே வற்புறுத்துவதைக்காண அவள் மனநிலை நமக்குப் புலனாகிறது. வில்லின்மேல் வைத்த கையோடு, வேட்டை மேல் வந்தவன், தலைவியை அவள் தொழிலை மறக்கச் செய்தது போல, அவனும் தன் தொழிலை மறந்து, அவள் நினைவாகவே இருக்கவேண்டும்.

இவளே
பல்கோள் பலவின் பயிர்ப்புஉறு தீங்கனி
அல்குஅறைக் கொண்டுஊண் அமலைச் சிறுகுடி
நல்கூர்ந்தார் செல்வ மகள். (11–14)

இவள், பல குலைகளையுடைய பலாமரத்தின் பிசினை யுடைய இனிய பழங்களை, (அவை பரந்து) கிடந்த பாறையிலிருந்து கொண்டுவந்து உண்கிற சோற்று வளப்பம் மிக்க சிறுகுடியிருப்பில் வசிக்கும், பிள்ளை இல்லாமல் வறுமைப்பட்டவருடைய செல்வமான பெண்.

கோள்-குலை; பயிர்ப்பு-பிசின்; அல்கு-கிடந்த; அமலை-சோற்றுத்திரள். பாறையிலேயே கிடந்த பழத்தைத் தின்பவர் என்றதனால், வளப்பம் மிக்குடைய மலை என்றும், அதன் மீது வாழ்பவர் வருத்தம் தெரியாமல் வாழ்பவர் என்றும் விளக்கினாள்.

நீயே, வளியின் இயல்மிகும் தேரும் களிறும்,
தளியின் சிறந்தனை, வந்த புலவர்க்கு
அளியொடு கைதூ வலை. (15–17)

நீ கொடையில் மழையைக் காட்டிலும் சிறந்தவனாகை யால், காற்றைக் காட்டிலும் வேகமாகச் செல்லும் தேர்களையும், யானைகளையும் உன்னிடம் வந்த புலவர்களுக்கு மிக்க அன்புடனே வாரி வழங்குவாய்.

வளி-காற்று; தளி-மழை; அளி-அன்பு. கைதூவல்-கையொழிதல்; இங்கு கைதூவலை என்பது, கொடுத்தல் தொழில் எப்பொழுதும் ஓயாமல் நடப்பதை உணர்த்துகின்றது.

அதனால்,
கடுமா கடவுறூஉம் கோல்போல் எனைத்தும்
கொடுமையிலை ஆவது அறிந்து மடுப்பல்;
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி,

உழையின் பிரியின் பிரியும்
இழைஅணி அல்குல் என் தோழியது கவினே! (18–23)

(உயர்ந்த குணத்தை உடையவன்) ஆகையால்,வேகமாகச் செல்லும் மிருகங்களைச் செலுத்தும் கோல் போல, நீ சிறிதும் கொடுமை இல்லாதவனாக இருப்பதை அறிந்து (இவளை உன்னோடு) பொருத்துகிறேன். இப்பொழுது இளையவளாயிருக்கையில் (சுரபுன்னை வளரும் மலைச்சாரலில் உள்ள வருடைமானின் குட்டியை வளர்ப்பவர்களைப் போல (பெரிதும்) பாராட்டிவிட்டு. (பின்னர்) இவளிடத்திலிருந்து (சிறிது நேரம்) நீ (இவளைப் பிரிந்தால் மேகலையை அணிந்த அல்குலினை உடைய என் தோழியின் அழகும் (அவளைவிட்டு அப்பொழுதே) அகன்றுவிடும்.

கோல்-தாற்றுகோல்; வழை-சுரபுன்னை; இயற்கையாய் வேகமாகச் சொல்லும் மாட்டுக்கு, தாற்றுக் கோலினால் துன்பம் நேரவே நேராது. ஆகவே அவன் அன்புடையவரிடத்துத் தானும் அன்புடையவனாய் இருப்பான் என விளங்குகிறது.

## 15. சுடர்த்தொடீஇ கேளாய்...

அவன் ஒரு போக்கிலி; தெருவில் விளையாடும் பெண்களுக்குத் தொல்லை தருவது அவன் விரும்பி மேற்கொண்ட தொழில். சிறுவயதில் விளையாட்டாகக் குறும்பு செய்து தேர்ந்தவன், காளைப் பருவத்திலும் தன் தொழிலைத் தொடர்ந்து நடத்துகிறான்; முன்னர்ப் பெண்களை அழ வைத்து வேடிக்கைப் பார்த்தவன், அனுபவ முதிர்ச்சியால் இப்பொழுது திகைக்க வைத்து மகிழ்கிறான். அவன் என்ன செய்தான்; தலைவி அதனை எப்படி ஏற்றுக் கொண்டாள்? இவற்றைத் தலைவியே தன் மழலை மாறாத சொற்களால் தோழிக்கு உரைப்பதைச் சித்தரிக்கின்றது இச்சிறு கவிதை.

சுடர்த்தொடீஇ! கேளாய்; தெருவில்நாம் ஆடும்
மணல்சிற்றில் காலில் சிதையா, அடைச்சிய
கோதை பரிந்து, வரிப்பந்து கொண்டுஓடி,
நோதக்க செய்யும் சிறுபட்டி... (1–4)

ஒளிவிடும் வளையல்களை அணிந்தவளே! கேள். தெருவில் விளையாடும் காலங்களில் நாம் மணலால் கட்டும் சிறு வீடுகளைத் தன் காலால் (உதைத்து) இடித்தும், (நாம் கூந்தலிலே) சூடியிருக்கும் மலர் மாலையை உருவி எறிந்தும், (விளையாடப் பயன்படும் நம்முடைய) கோடுகள் இழைத்த பந்தை எடுத்துக்கொண்டு ஓடியும், (நாம்) வருந்தத்தக்க (குறும்புச்) செயல்களைச் (சிரித்துக் கொண்டே) செய்யும் சிறு போக்கிரி,

மேலோர் நாள்,
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே!'
'உண்ணுநீர் வேட்டேன்' எனவந்தாற்கு, அன்னை
'அடர்பொன் சிரகத்தால் வாக்கிச் சுடர்இழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா' என்றாள்; என,யானும்
தன்னை அறியாது சென்றேன்... (4–9)

முன் ஒருநாள் நானும் என் தாயும் வீட்டில் இருந்தபொழுது, குடிக்க நீர் வேண்டும் என்று கேட்டுக்கொண்டு வந்தவனுக்கு என் தாய் ஒளிவிடும் அணிகளைப் பூண்டவளே! விளங்குகின்ற பொன்னைப் போல (ஒளிவிடத்தேய்த்த) பாத்திரத்தில் ஊற்றிக்கொண்டு, (இவனை) நீர் குடிப்பித்து வா என்றாள்; என, நானும் அவனை (போக்கிலி ஆயிற்றே; குறும்பு செய்வானே என்று) கருதாமல் (தண்ணீர் எடுத்துக் கொண்டு சென்றேன்;

...மற்று என்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு,
'அன்னாய்! இவன்ஒருவன் செய்ததுகாண்!' என்றேனா;
(9–11)

(அவன்) என்னை வளையலணிந்த முன்கையை பிடித்துக்கொண்டு (மெல்ல) இழுக்கவும், சுழன்று, அம்மா! இவன் செய்ததனை வந்து பார் என்று கத்திவிட்டேன்.

'சுழற்சி' மனக்கலக்கம்; அதிர்ச்சி காரணமாய் ஏற்படும்.

அன்னை அலறிப் படர்தர, தன்னையான்
உண்ணுநீர் விக்கினான் என்றேனோ. (12+13)

தாய் (என்னடீ செய்தான்? என்னடீ செய்தான்? என்று) கதறிக் கொண்டு ஓடிவர, அவனை நான் "நீர் குடிக்கும்பொழுது விக்கினார்" என்றேன்.

அன்னையும்...
தன்னையுப் புறம்பழித்து நீவ... (13+14)

தாயும் அவனை (அவசரம் ஏன்? மெல்லக் குடிப்பது தானே என்று) வைது நீங்க,

புறம் பழித்தல், நீவல்- முதுகு புறம் தடவிக் கொடுத்தல், நீவல்- நீங்குதல் இரண்டிற்கும் (நீக்கம், தடவள்) பகுதி நீ.

...மற்று என்னைக்
கடைக்கணால் கொல்வான் போல் நோக்கி நகைக்கூட்டஞ்
செய்தான் அக் கள்வன் மகன். (14–16)

என்னைத் தன் கடைக்கண்ணால் கொன்று விடுவானைப் போலவே பார்த்துப் பலமுறை நகைத்தான் அக்கள்வன் மகன்.

நீ-நீத்தல்; நீவு-தடவுதல்;

தாயின் எதிரில், பட்டப் பகலில், விழித்திருக்கும் பொழுதே தன் மனத்தை பறிகொண்டவன், தொழிலைக் கற்றுக் கொண்டவனல்லன், பிறப்பிலேயே இக்குணம் பெற்றவனாய் இருக்கவேண்டும் என்று தான் வியந்ததை நயம் தோன்றத் தலைவி 'கள்வன் மகன்' என்றாள்.

அன்னையிடம் பொய் கூறி அவனைத் தலைவி தப்புவித்தும், அவளைத் தன் வலைக்குள் அகப்படுத்திக் கொண்ட செருக்கினால், அவன் கோபித்துப் பார்த்தான். இனி அவன் அளி செய்யாவிடின், தான் இறந்துவிட நேரிடும் எனத் தோழியை உணரவைக்க, தலைவி தன் மன நிலையை அவன் பார்வையின் மேல் ஏற்றிக் 'கொல்வான் போல்' நோக்கியதாகக் கூறினாள்.

'கொல்வான் போல்' நோக்கினான் ஆனாலும் தனக்கு உறுதியாக அளி செய்வான் எனத் தோழிக்கு அறிவிக்க 'நகைக் கூட்டஞ் செய்தான்' என்று கூறினாள்.

அன்னையின் கோபத்துக்கு ஆளாக்காததற்கு நன்றி தோன்ற முதலில் சிரித்தான்; பின், அவள் பொய் சொல்லியது தன்னிடத்துக் கொண்ட காதல் காரணமாகவே என எண்ணிப் பெருமிதத்துடன் சிரித்தான்; பிறர் ஒருவனைத் துன்பத்தினின்றும் காப்பாற்றிய மகிழ்ச்சிக் குறியைத் தலைவியின் முகத்தில் கண்டவன், அது தன் காதலை ஏற்றுக் கொண்டதை அறிவிக்கும் குறி எனக் கொண்டு, வெற்றி உவகையால் மேலுஞ் சிரித்தான். அவன் மன நிலையை வெளிக் காட்டப் பலமுறை நகைத்ததனை 'நகைக் கூட்டஞ் செய்தான்' எனத் தலைவி கூறுகிறாள்.

தலைவியின் விளையாட்டுக் காலத்தில், தலைவன் அவள் கட்டிய சிறு மணல் வீடுகளை அழித்ததும், தலைப்பூவை அறுத்து எறிந்ததும், பந்தை எடுத்துக்கொண்டு ஓடியதும், முறையே அவன் பின்னர் அவள் மன அமைதியைக் கலைத்ததையும், கொண்டதையும் குறிப்பிடும் நயம் உணர்ந்து மகிழத்தக்கது.

காமஞ்சாலா இளமையோளாக இருக்கையில் நிகழ்ந்தவற்றைக் காமஞ்சான்றபின் தலைவி தோழிக்கு உரைத்தது இது. மறை புலப்படுத்தல் இதன் பயன்; தோழியைக் கையுறை ஏற்கத் தூண்டுவது இதன் நோக்கம். நொதுமலர் வரைவின்கண், தலைவி அறத்தொடு நின்றது எனவும் கூறலாம்.

இக்காட்சியை அழகுபெறச் சித்தரிப்பது அட்டைப்படம்.

# 16. முறஞ்செவி மறைப்பாய்பு...

தலைவன் இரவு வேளைகளில் தப்பாமல் வந்து செல்கிறான். அவன் வந்து போவதில் விருப்பம் காட்டினாலும், தலைவிக்கு அலர் எழுந்து விடப் போகிறதே என்ற அச்சம் அதிகமாயிருந்தது. அவள் அச்சத்தை அகற்றத் தோழி தலைவனை வரைய வற்புறுத்தியதைச் சித்தரிக்கிறது. இக் கவிதை. 'தலைவி அலருக்கு அஞ்சுகிறாள்; ஆகவே விரைவில் மணந்துகொள்' எனக் கூறுவதைத் தலைவன் பொருட் படுத்தமாட்டான் எனத் தோழி நன்கறிவாள். அதனால் 'நீ இரவில் வந்துபோவதை நாங்கள் மிகவும் விரும்புகிறோம்; ஆனால் வழியில் உனக்கு ஊறு விளையுமே என்று மிகவும் அஞ்சு கிறோம்; எனவே தலைவியை விரைவில் மணந்துகொண்டு எங்கள் அச்சத்தை அகற்று' என்று கேட்டுக் கொண்டாள். தலைவனுக்குக் களவொழுக்கத்தை நீட்டிப்பதில் உள்ள விருப்பத்தைத் தூண்டியவள் போலவே பேசி, தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்ட தோழியின் திறனை நன்கு வெளிப்படுத்துகிறது இக்கவிதை.

முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று,
மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்குஅறுத் திடுவான்போல் கூர்நுதி மடுத்து அதன்
நிறஞ்சாடி முரண்தீர்த்த நீள்மருப்பு எழில்யானை,
மல்லரை மறஞ்சாய்த்த மால்போல்தன் கிளைநாப்பண்
கல்உயர் நனஞ்சாரல் கலந்து இயலும் நாட!கேள். (1–6)

முறங்களைப் போல அகன்றிருக்கும் காதுகளின் மறைவிடமாக (வந்து) பாய்ந்து போர் செய்த புலியைக் கோபித்து, கொடுமையை மேற்கொண்ட நூற்றுவர் தலைவனாகிய துரியோதனனைத் தொடையைக் கீறி (அவன் உயிரைப் போக்கிய) வீமனைப் போல,

தன்னுடைய நீண்ட கொம்புகளின் கூர்மையான நுனிகளை (அப்புலியின் உடலில்) செலுத்தி, அதன் உயிர் நிலையை அறைந்து பகையைப் போக்கிக் கொண்ட அழகிய யானை தன் சுற்றத்தின் நடுவே சென்று சிகரங்கள் உயர்ந்த மலைச்சாரலில் அவற்றோடு சேர்ந்து திரியும் (பெரிய மலை) நாட்டுத் தலைவனே! (நான் கூறுவதனைக்)கேள்.

குறங்கு-துடை; நிறம்-மருமத்தானம். தன்னை எதிர்பாராத முறையில் வந்து தாக்கிய புலியைக் கொன்ற யானை மகிழ்ச்சியுடன் திரிதலைப்போல, தலைவனும் இரவுக்குறியில் அவன் எதிர்பாராத வகையில் தோன்றும் இடையூறுகளைத் தலைவியை மணப்பதால் அறவே, நீக்கி மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் என்பது குறிப்பு.

தாமரைக் கண்ணியை, தண்நறும் சாந்தினை,
நேர்இதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்,
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
அணங்குஎன அஞ்சுவர் சிறுகுடி யோரே; (7–10)

தாமரை மலர்களால் கட்டப்பட்ட மாலையை அணிந்தவனாய், குளிர்ச்சி பொருந்தியதாய் மணம் வீசும் சந்தனத்தைப் பூசியவனாய், ஒன்றோடொன்று ஒத்திருக்கும் இதழ்களால் கட்டப்பட்ட மாலையை அணிந்த இவள் குறிப்பிட்ட குறி இடத்துக்கு நீ வருவாயானால், (உன்னை) மணத்தைப் பரப்பும், தன்மையை உடையனவாய் இருக்கும் இம்மலைகளிலே இயங்குவாரை எதிர்த்து நின்று பலி ஏற்கும் அணங்கு எனக்கருதி இச்சிறு குடியிருப்பில் உள்ளோர் பயப்படுவார்.

ஈர்ந்தண் ஆடையை, எல்லி மாலையை,
சோர்ந்துவீழ், கதுப்பினாள் செய்குறி நீவரின்,
ஒளிதிகழ் ஞெகிழியர், கவணையர், வில்லர்
களிறுஎன ஆர்ப்பவர் ஏனல்கா வலரே; (11–14)

குளிர்ச்சி மிக்க ஆடையை உடையவனாய், இரவிற்கு ஏற்ற கோலத்தைக் கொண்டவனாய், தோள்களின் மீது குலைந்து விழும் கொண்டையை உடைய இவள் குறிப்பிடும் குறியிடத்தை நோக்கி நீ வருவையானால், ஒளிவிளங்கும் குறைக் கொள்ளியை உடையவராய், கல் எறியும் கவணை உடையவராய், வில்லை ஏந்தியவராய் தினைப்புனங்களைக் காக்கும் காவலராகிய குறவர் (உன் வருகையை) யானையின் வரவு என எண்ணி ஆரவாரஞ் செய்வர்.

**ஈர்ந்தண் ஆடை**-பனியால் நனைந்து ஈரமான ஆடை; தன் வரவை அறிந்து கொள்ளாமலிருக்க, இரவில் சாயம் தோய்த்த ஆடையை அணிந்து வருதல், இரவிற்கேற்ற கோலம்; குறைக்கொள்ளி புலிகளைப் பயப்படுத்தவும், குளிர் காயவும் பயன்படும்; கவணும், வில்லும் விலங்குகளை விரட்டப் பயன்படும்.

ஆர மார்பினை, அண்ணலை, அளியை,
ஐதுஅகல் அல்குலாள் செய்குறி நீவரின்,
கறிவளர் சிலம்பில் வழங்கல் ஆனாப்
புலி என்று ஓர்க்கும்இக் கலிகேழ் ஊரே; (15–18)

சந்தனம் பூசப் பெற்ற மார்பை உடையவனாய், தலைமைத் தகுதியையும் அருளையும் உடையவனாய் மெல்லிய அகன்ற அல்குலையுடைய இவள் காட்டிய குறியிடத்துக்கு நீ வருவையாயின், மிளகுக்கொடி படரும் மலைச் சாரலில் போக்குவரவு செய்தலில் குறையாத புலி என்று (உன்னைக்) கருதுவர் இச்செருக்கு மிகுந்த ஊரில் உள்ளார்.

அணங்கு, களிறு, புலி என்று தலைவனைக் கருதும் குறவரால் அவனுக்குத் துன்பம் ஏற்படும்; அதுவேயன்றி அண்ணலும், அளிசெய்பவனுமாயும் இருப்பவனை அணங்காகக் குறவர் கருதுவது அவர் எழாமலிருக்க உதவுமேனும் அவனுக்கு இழுக்கேயன்றோ?

என ஆங்கு
விலங்குஒரார் மெய்ஓர்ப்பின் இவள்வாழாள்; இவள்
அன்றிப்
புலம்புகழ் ஒருவ! யானும் வாழேன்; (19–21)

*(தினைப்புனங்களைக் காப்பவரும், இவ்வூராரும் உன்னை) விலங்காகக் கருதாமல், (நீ யார், ஏன் இரவில் வருகிறாய் என) உண்மையை உணர்வார்களேயானால், (அவ்வறிவு அலரெழச் செய்யுமாகையால்) இவள் உயிர் துறப்பாள்; இவள் இல்லாமல், உலகம் போற்றும் ஒப்பற்றவனே! நானும் வாழமாட்டேன்.*

தாழிசைகளில் அவனைப் பிழைபட உணர்வதால் வரும் ஏதங்களை விவரித்த தோழி, இங்கு அவனை நன்குணர்வதால் வரும் விளைவை வற்புறுத்துகிறாள்.

...அதனால்
பொதிஅவிழ் வைகறை வந்து, நின் குறைகூறி
வதுவை அயர்தல் வேண்டுவல்; ஆங்குப்
புதுவை போலும் நின்வரவும், இவள்
வதுவைநாண் ஒடுக்கமும் காண்குவல் யானே. (22–25)

*ஆகவே (கவிந்த இருளின் செறிவு) நீங்கப் பெறும் வைகறைப் பொழுதிலே வந்து, நீ இவள் (சுற்றத்தாரிடம்) உன் மனக் குறைகளை கூறி, இவளை மணமுடித்துக் கொள்ள நான் விரும்பிக் கேட்டுக் கொள்ளுகிறேன், அப்பொழுது (இவளை) அதற்கு முன் கண்டறியாதவனைப் போல் பாராட்டிக் கொண்டு வரும் உன் வரவையும், நாணத்தால் தோன்றும் இவளுடைய பதுங்கிய போக்கையும் நான் காண்பேன்.*

பொதி அவிழ் வைகறை-மலர்கள் கட்டுத் தளரும் காலம் எனலும் பொருந்தும்; 'வதுவை நாண்' பலரறிய அவனோடு முதன்முறையாகத் தொடர்பு கொள்வதால் ஏற்படும் வெட்கம்;

# 17. வறனுறல் அறியாத...

தலைவனும் தலைவியும் மிக எச்சரிக்கையாகவே நடந்து கொண்டனர்; இருந்தும் அவர்கள் உறவு எவ்வாறோ ஒரு சிலருக்குத் தெரிந்துவிட்டது. இதனை அறிந்தாள் தோழி. அலர் பரவி விடுமே எனப் பயந்தாள்; சில காலம் தலைவன் தலைவியைப் பார்க்க வருவதை நிறுத்திக் கொண்டால், அயலார் குசுகுசுவெனப் பழி தூற்றுவது நின்றுவிடும் எனக் கூறினாள். தன் நன்மைக்கே வராமல் இருக்கின்றான் என்று உணர்ந்தும், தலைவியால் அவனைப் பார்க்காமல் இருக்கமுடியவில்லை. அவள் ஆற்றாமையைப் போக்க, ஒரு நாள் அவனை வரச்சொல்லி ஏற்பாடு செய்தாள் தோழி; வந்தவனை விரைவில் வரைந்துகொள்ள வற்புறுத்த அவ்வாய்ப்பைத் தோழி பயன்படுத்திக் கொண்டதைச் சித்தரிக்கிறது இப்பாடல்.

வறன்உறல் அறியாத வழைஅமை நறுஞ்சாரல்
விறல்மலை வியல்அறை வீழ்பிடி உழையதா
மறம்மிக வேழம்,தன் மாறுகோள் மைந்தினால்
புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல,
உயர்முகை நறுங்காந்தள் நாள்தோறும் புதிதுஈன,
வயல்நந்தி அணிபெற, அருவிஆர்த்து இழிதரும்;
பயம்மழை தலைஇய பாடுசால் விறல்வெற்ப! (1–7)

பஞ்சம் உண்டாவதை (எக்காலத்தும்) கண்டறியாததும் சுரபுன்னை அடர்ந்து இருப்பதால் மணம் மிக்கதுமான சாரல்களைப் பெற்ற சிறப்பினை உடைய (பெரிய) மலையின் அகன்ற பாறையில், தான் காதலித்த பெண் யானை தன்னோடு இருக்கவும், மிருக பலம் மிக்க ஆண் யானை, (தனக்குப் போட்டியாக வந்த வேற்று யானையோடு) மாறுபட்டு, (தன்னுடைய) மிகுதியான வல்லமையால் (அதன்) புள்ளிகள் நிறைந்த நெற்றியில்

புண்ணை உண்டாக்கிப் பிடுங்கி (எடுத்துக்கொண்டதன் இரத்தந்தோய்ந்த) தந்தங்களைப் போல, சிறந்த அரும்புகளையும், நல்ல மணத்தையும் உடைய காந்தள் தினந்தோறும் புதிய பூக்களைப் பூத்து (புதுமைக் கவின் பெற்று விளங்கவும்) வயல்கள் பயிர் நிறைந்த அழகு பெறவும், அருவிகள் ஆரவாரத்துடன் ஓடிவரவும்; (இவற்றிற்குக் காரணமான பயனைத்தரும் மேகங்கள் எப்பொழுதும் தங்கியிருக்கின்ற பெருமை நிறைந்த வெற்றியையுடைய மலைத் தலைவனே!'

வழை-சுரபுன்னை; அமை-நெருங்கிய; விறல்-வெற்றி; நந்தி-நிறைந்து; எக்காலத்தும் மேகம் தங்கியிருக்கும் உயர்ந்த மலையாகையால், வறன் உறல் அறியாததும், பெயல் பிழைப்பறியாததுமாகிய சிறப்புகளையுடையதாய் இருக்கின்றது. இரத்தம் தோய்ந்த நுனிகளையுடைய தந்தங்கள் காந்தள் பூக்களுக்கு உவமை. அவன் மலையில் நாள்தோறும் புதியனவாகப் பூக்கும் மணம் மிக்க காந்தள் மலர்களைப்போல், அவனும் நற்குணம் நிறைந்தவனாய் இருப்பவனே ஆயினும், கொல்லும் தொழிலைச் செய்து இரத்தந் தோய்ந்த தந்தங்களை நிறத்தால் அக்காந்தள் மலர்கள் ஒத்திருக்கின்றதைப்போல, அவனும் அயலார் பார்வைக்கு தலைவிக்கு அளி செய்யாது கொடுமை செய்பவனைப் போலவே காணப்படுகின்றான் என்பது குறிப்பு.

மறையின்நின் மணந்து,ஆங்கே மருவறத் துறந்தபின்
இறைவளை நெகிழ்புஓட ஏற்பவும் ஒல்லுமன்,
அயல்அலர் தூற்றலின் ஆய்நலன் இழந்தகண்
கயல்உமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால். (8–11)

(நின்பிரிவு காரணமாக) தன் சிறந்த அழகை இழந்த இவள் கண்கள், அயலார் பழியைப் பரபபுவதனால் (மேலும் வருந்தி) கயல் மீன்கள் நீரைக் கொப்புளித் தலைப்போல நீரைச் சொரிகின்றன; (இத்தன்மை இல்லையேல்) உன்னைக் களவொழுக்கத்தில் புணர்ந்து, அப்பொழுதே உன்னால் அணைக்கப்பெறுதலை முற்றிலும்

இழந்த (இவள்) பின்னர் (அத்துறவு காரணமாக) தன் முன் கைகளில் உள்ள வளையல்கள் கழன்று விழுதலாகிய (மெலிவைப் பொறுமையுடன்) ஏற்றுக் கொள்ளுதலைச் செய்வாள்.

மறை-களவு; மருவுதல்-அணைத்தல்; இறை-முன்கை; ஒல்லும்-கூடும்; பனி-துளிக்கும் கண்ணீரைக் குறிக்கின்றது. இவள் பிரிவை ஆற்றியிருக்கப் பாடு படுகிறாள். ஆனால் பிரிவுத் துயர் இவளை வெற்றிகொண்டு, களவை வெளிப்படுத்தி விடுகின்றது எனத் தோழி வற்புறுத்துகிறாள்.

இனியசெய்து அகன்றுநீ இன்னாதாத் துறத்தலின்
பனிஇவள் படர்எனப் பரவாமை ஒல்லுமன்
ஊர்அலர் தூற்றலின் ஒளிஒடி நறுநுதல்
பீர்அலர் அணிகொண்டு பிறைவனப்பு இழவாக்கால்
(12–15)

(நின்பிரிவு காரணமாக) இவளுடைய நல்ல நெற்றி தன் ஒளியை இழந்து, ஊரார் பழி கூறுவதனால், பீர்க்கம் பூவின் அழகை ஏற்றுக்கொண்டு, (தனக்கு இயற்கையாய் இருந்த) மதியின் அழகை இழந்துவிட்டது. (இத்தன்மை இவள் வருந்துகின்றாள் என்பதனைப் புறத்தார்க்கு அறிவிக்கின்றது) இல்லையேல் கூடியிருக்கும் பொழுது இவளுக்கு மகிழ்ச்சியைத் தந்து (இவள் நன்மைக்காகவே என்றாலும்) பிரிந்து, நீ இவளுக்குத் துன்பம் தரத் தக்கபடி இவளைக் காண வராமலிருப்பதால், இவள் உடலின் நடுக்கம் (நீங்காமல் இருக்கும்) உன் நினைவு காரணமாகத் தோன்றியதே என்று கொண்டு, (அவள் நலமின்மை) (ஆயத்தாருக்கும் தாய்க்கும்) வெளிப்படாமலிருக்கச் செய்யவும் கூடும்.

பனி-நடுக்கம்; படர்-நினைவு; மேல் தாழிசையில் தலைவி ஆற்றியிருக்கச் செய்த முயற்சியையும், அவள் வெற்றி பெறாமையையும் கூறிய தோழி, இங்கு, மறை புலப்படாமல்

இருக்கத் தான் மேற்கொண்ட முயற்சியும் பயனளிக்கவில்லை என வற்புறுத்துகிறாள்.

> ‘அஞ்சல்’ என்று அகன்று, நீ அருளாது துறத்தலின்,
> நெஞ்சுஅழி துயர்அட நிறுப்பவும் ஒல்லுமன்,
> நனவினால் நலம்வாட நலிதந்த நடுங்குஅஞர்
> கனவினால் அழிவுற்றுக் கங்குலும் ஆற்றாக்கால்;(16–19)

நனவுக் காலத்தில் (-விழித்திருக்கும்பொழுது- இவள்) அழகு கெடும்படி துன்பத்தைச் செய்த, நடுங்குதற்குக் காரணமான நோய், கனவுக்காலத்தும் (-தூங்கும் பொழுதும்-) இவளை அழித்தலை மேற்கொண்டு, ஒவ்வொரு இரவிலும் இவளை ஆற்றியிருக்க முடியாதபடி செய்யாவிட்டால், ‘(நான் உன்னைப் பிரிவேன் என்று) அஞ்சாதே’ எனக்கூறி, பிரிந்து சென்று, நீ மீண்டும் வராமலேயே இவளைத் துறந்துவிட்டதனால், இவள் மனத்தை அறுக்கும் (நின்னைப்பற்றிய நினைவாகிய) துன்பம், (இவள் உயிரைக்) கொல்லல், இவள் இறந்துபடா மல் இருக்கவும் கூடும்.

இத்தாழிசையில், தான் தேறுதல் கூறி இவளை உயிரிழக்காம லிருக்கச் செய்வதோடு, இவளும் பகற்காலத்தில் தன் துன்பத்தை பொறுத்துக் கொண்டிருக்கிறாள் எனத் தோழி, தான், தலைவி ஆகிய இருவரும் செய்த முயற்சிகள் பயனளியாததைப் புலப்படுத்துகிறாள்.

> என ஆங்கு
> விளியாநோய் உழந்துஆனா என்தோழி, நின்மலை
> முளிவுற வருந்திய முளைமுதிர் சிறுதினை,
> தளிபெறத் தகைபெற் றாங்கு,நின்
> அளிபெற, நந்தும்இவள் ஆய்நுதல் கவினே. (20–24)

என்று கூறும்படியாக, அழையாத நோயினாலும் மிகவும் துன்பப்பட்டு அமையாத என் தோழி உன் மலையில் உள்ள உலர்தலைப் பொருந்தி வருந்திய

முளைத்தல் மிக்க சிறிய தினைப்பயிர், மழையைப் பெறவும் அழகுபெற்றுத் தழைத்ததைப்போல, உன் அளியைப் பெற்றவுடன் தன்னுடைய அழகிய நெற்றியின் எழில் நிறையப் பெற்று விளங்குவாள்.

## 18. கொடியவும் கோட்டவும்...

அவள் தனியே இருக்கிறாள்! அவன் தன் கண்களை ஒருமுறை கசக்கிக் கொண்டு பார்த்தான். ஆம். அவளேதான்! இந்த வாய்ப்புக்கு அவன் எத்தனை நாட்கள் ஏங்கித் தவம் கிடந்தான்? அது அவளுக்கு எப்படி தெரியும்? இன்றுதான் அவனுக்கு நல்ல காலம் பிறந்தது போலும்! இதுகாறும் கட்டுண்டிருந்த அவன் உணர்ச்சிகள், சுதந்திரம் பெற்றுவிட்டன; அவன் அவற்றுக்கு அடிமையானான். அவனே 'என்ன செய்தோம்' என்று கூறமுடியாமல் நடந்து கொண்டான். ஆனால் அவன் செயல்கள் அனைத்தும், அவளிடத்து அவன் கொண்டிருந்த அன்பு மிகுதியை வெளிப்படுத்துவனவாகவே இருந்தன. அதனால் அவனைப் போலவே அவளும் அவனுடைய உணர்ச்சி யால் உந்தப்பட்ட செயல்களுக்குக் கட்டுப்பட்டாள். இருவரும் அன்றைக்குப் பிரிந்தனர். அதன் பின்னரே, அவளுக்கு உலகம் என்ற ஒன்று இருப்பது தெரிந்தது. அவன் என்ன செய்தான்? அவள் என்ன செய்தாள்? இனி அவர்கள் எப்படி நடந்து கொள்ளுவார்கள்? நம் ஆவலைத் தீர்க்க அவளே முன் வருவது நம் நல்வினைப் பயனே!

கொடியவும் கோட்டவும் நீர்இன்றி நிறம்பெறப்
பொடிஅழல் புறம்தந்த பூவாப்பூம் பொலன்கோதை
தொடிசெறி யாப்புஅமை அரிமுன்கை அணைத்தோளாய்!
'அடிஉறை அருளாமை ஒத்ததோ நினக்'கென்ன (1-4)

கொடிகளிலும், கொம்புகளிலும், பூக்கும் பூக்களை (ஒத்தவையாய்), தண்ணீர் இல்லாமலேயே, (அவை) நல்ல நிறத்தைப் பெற்று விளங்கும்படி, பொடி மூடிய நெருப்பு அவற்றின் வெளிப்புறத்தை (அழகுடையதாகச்) செய்த, (பூத்தல் தொழிலும் வாடும் தன்மையும் இல்லாத) பூக்கள் (நிறைந்த) பொன்னாலாகிய மாலையும், வளைகள் நெருங்கியும் கட்டுவடம் அமைந்தும், அரி படர்ந்தும் உள்ள முன் கையினையும்,விருப்பத்தை விளைவிக்கும் தோளினையும் உடையவளே!' (நான்) உன் அடியிலே தங்குதலை அருளாமலிருத்தல் உன் இயல்புக்குப் பொருந்துவது தானோ' எனக் கேட்டு,

முன் தாங்கிகளைப் போலவே, வளைகள் கழலாமல் காக்கப் புனைவது கட்டுவடம். நீரில்லாமலிருந்தும், தன் மாலையில் உள்ள பூக்களை அலர்ந்த செவ்வி மாறாமலும், நிறம் மங்காமலும் பாதுகாக்கும் இயல்புடையவளாகையால், சேர்ந்தாரைக் காக்கும் தன்மை அவளுக்கு இருப்பது வெளியாகிறது. அவளைத் தன்னை விரும்பத் தூண்டுவதற்காகவே, தலைவன் இவ்வாறு புகழ்கிறான்.

நரந்தம்நாறு இரும்கூந்தல் எஞ்சாது நனிபற்றி,
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரல்அமை ஒருகாழ்
விரல்முறை சுற்றி மோக்கலும் மோந்தனன்; (5–8)

கஸ்தூரியைப் போல் மணம் வீசுகின்ற கருமையான கூந்தலை முழுவதும் நன்றாகப் பிடித்துக்கொண்டு, பொன்னாலேயே செய்யப்பட்ட மகர மீனின் வாயைப்போல் (பிளந்த வாயையுடையதாக அமைக்கப் பட்ட) தலை அணி விழுங்கிய (-மறைத்துக் கொண்டிருக்கின்ற-) முடியில், அழகு பெறச் சுற்றிக்கட்டிய கொத்துகளால் அமைந்த ஒப்பற்ற மாலையைத் தன் கை விரலில் ஒழுங்காகச் சுற்றிக்கொண்டு மோந்து பார்த்தலையும் செய்தான்;

நரந்தம்-கஸ்தூரி; 'மகர வாய்' ஆகுபெயராய் அணியை உணர்த்திற்று. காழ்-வடம். சரம்; மாலை மங்கலமாக முடியைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கிறது. குரல்-பூங்கொத்து.

நறாஅ அவிழ்ந்து அன்னஎன்மெல் விரல்போது கொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்; (9–11)

நல்ல மணமுள்ள மலர்கள் விரிந்திருப்பதை ஒத்த என்னுடைய மெல்லிய விரல்களாகிய மலர்களைக் கொண்டு, (கோபிக்காதிருந்தும்) சிவந்த தன் கண்கள் அழுந்தும்படி பதித்து, (பறவையின் வடிவை ஒத்த ஆனால்) பறக்காத உலைமூக்கு வெப்பமான காற்றை வெளிவிடு தலைப்போல பெருமூச்செறிதலையும் செய்தான்;

கூட்டம் பெறும் குறிப்பு தோன்றக் கண் சிவந்தது.

தொய்யில் இளமுலை இனிய தைவந்து
தொய்யல் அம் தடக்கையின் வீழ்பிடி அளிக்கும்
மையல் யானையின் மருட்டலும் மருட்டினான்... (12–14)

தொய்யில் குழம்பால் (வில், கரும்பு முதலியவை) எழுதப்பட்டிருக்கும் என்னுடைய முதிர்ச்சியடையாத இளமுலைகளை (நான்) மகிழ்ச்சி அடையும்படித் தடவி, நிலத்தைத் துழாவிச் செல்லும் அழகிய நீண்ட துதிக்கையால் தான் விரும்பிய பெண் யானைக்கு அருள் செய்வதும் மயக்கத்தைத் தோற்றுவிப்பதுமான ஆண் யானையைப் போல் என்னை மயக்கவும் செய்தான்.

தொய்யில்-அப்பெயர் கொண்ட குழம்பு; தொய்யல்-உழுதல்; தன் துதிக்கையால் பிடியைத் தடவிக்கொடுத்து மயக்குகிறது யானை; இவனும் அவளை அணைத்துக் கொண்டான் என்றவாறு.

அதனால்
அல்லல் களைந்தனன் தோழி! நல்நகர்
அரும்கடி நீவாமை கூறின் நன்றென

நின்னொடு சூழ்வல்; தோழி! 'நயம்புரிந்து
இன்னது செய்தாள் இவள்' என
மன்னா உலகத்து மன்னுவது புரைமே! (15–20)

இவ்வாறெல்லாம் செய்ததனால், தோழி! என் மனத்துயரை (முற்றிலும்) நீக்கினான்: நம்முடைய நன் மனையில் கடத்தற்கரிய காவல் (எப்பொழுதும்) நீங்காமலிருப்பதை (அவனுக்குக்) கூறினால், (அது நமக்கும் அவனுக்கும்) நன்மையைத் தரும் என்று உன்னோடு ஆராய்ந்து துணிகிறேன்; (இல்லையேல்) தோழி! விருப்ப மிகுதியால் இவள் (நாணின்றிக்) களவொழுக்கத்தை மேற்கொண்டாள் என, (ஒருபழி) இந்நிலையற்ற உலகத்தில் நிலையுள்ளதாகப் பொருந்திவிடுமே!

அலருக்கு அஞ்சினாள் தலைவி; தானாகச்சூழ்ந்த முடிவைத் தோழியோடு சூழ்ந்து செய்ததைப்போலக் கூறுவதும், தோழியை இருமுறை விளிப்பதும், அலர் தோன்றவொட்டாமலிருக்க எடுத்துக் கொள்ளும் முயற்சியில் அவள் காட்டும் பரபரப்பும், அவளுடைய அவசரத்தின் அளவை வெளிப்படுத்துகின்றன. அலர் தோன்றின் தன் உயிர் நீங்கும் என்பதை, தனக்கு நிலையற்றதாக ஆகும் உலகத்தை, அலர் நிலையுள்ளதாக்கிக் கொள்ளும் எனக் கூறிப் பெற வைக்கிறாள். அவதிப்படும் அவன் நிலைக்கு இரங்கிக் களவொழுக்கத்தை மேற்கொண்டாலும்கூட அலர் தோன்றும். அலரில் உயர்ந்தது, தாழ்ந்தது என்ற பாகுபாடு இல்லை.

'கடி' என்பதனை 'மணம்' எனக்கூறி நொதுமலர் வரைவின் கண் தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றதாகப் பொருள் விரிப்பதில் பயன் இல்லை. தலைவி நன்மணம் எய்திய சிறப்பை உலகம் புகழ, அம்மணம் அலர் எழுந்தபின் நிகழவேண்டும். இல்லையேல் இவள் நன்மணம் பெற்றாள் என எவர் அறிவார்?அலர் எழுந்தபின் பிழை மணம் பட வாய்ப்பில்லை. ஆகவே, அலர் தோன்ற வாய்ப்பு அளிக்காமல், தலைவனைக் களவொழுக்கத்தை மேற்கொள்ளாமல், வரைவு முயற்சி செய்யத் தூண்டுமாறு தோழியைத் தலைவி கேட்டுக் கொண்டதைச் சித்திரிப்பதே இக்கவிதையின் குறிக்கோள்.

# 19. மின்னொளிர் அவிரறல்...

வழியே சென்றவளை நிறுத்தினான். என்ன துணிவு! நெருங்கிச் சென்றான்; நாணிக்கோணி நெளிந்தவளை விழுங்கிவிடுவான் போலக் கூர்ந்து கவனித்தான். அவள் முகம், கண், தோள் முதலியவற்றைப் புகழ்ந்தான். நாம் இவ்வளவு அழகாய் இருக்கிறோமா என்ற எண்ணத்தில் ஆழ்ந்திருந்தவளை அணைத்துக் கொண்டான். அவன் பிடியிலிருந்து விடுபட்டதும் அவள் ஓடோடிச் சென்று, தோழிக்கு நிகழ்ந்தவற்றைக் கூறினாள். நீங்களும் அதனைக் கேளுங்கள்.

மின்ஒளிர் அவிர்அறல் இடைபோழும் பெயலேபோல்
பொன்அகை தகைவகிர் வகைநெறி வயங்கஇட்டுப்
போழ்இடை இட்ட கமழ்நறும் பூங்கோதை,
இன்னகை, இலங்குஎயிற்றுத் தேமொழித்
துவர்ச்செவ்வாய்
நல்நுதால்! நினக்குஒன்று கூறுவாம் கேள்இனி. (1–5)

ஒளியைக் கக்கும் மின்னலின் விளங்குகின்ற கொடிகள் இடை இடையே பிளந்து செல்லும் கரிய மேகத்தைப் போல், பொன்னைக் கூறுபடுத்தி அழகாகச் செய்யப்பட்ட வகிரை (ஐந்து பகுதிகளாகப்) பிரிக்கப்பட்ட வழிகளிலே விளங்கும்படி பொருத்தி, அதன் பிளவுகளின் இடையே செருகப்பட்ட மணம் கமழும் மாலையையும், இனிய புன் சிரிப்புடைய முகத்தையும், வெண்மையாக விளங்குகின்ற பல் வரிசைகளையும், தேன்போன்ற மொழிகளையும், இயற்கையாய்ச் சிவந்த வாயினையும், அழகிய நெற்றியை யும், உடையவளே! உனக்கு ஒன்றைக் கூறுகிறேன்; விருப்பமுடன் கேள்.

அறல்-மின்னல்கொடி; போழ்-பிளப்பு; அகை-அறு, கூறுபடுத்து; வகிர்-ஆபரணத்தின் பெயர்; இருண்ட மேகத்தை இடையிடையே

*பிளந்து செல்லும் மின்னலைப் போல, இவள் கரிய கூந்தலை, வகிர் ஐந்து பகுதிகளாகப் பிளக்கின்றது. பெண்கள் கூந்தலைச் சுருள். குரல், அளகம், துஞ்சுகுழல், கொண்டை என ஐந்துவகைப்படுத்திக் கோலஞ் செய்துகொள்வது வழக்கம். தலைவி, தோழியை இவ்வாறு பாராட்டிப் பேசக் காரணம் என்ன?*

நில்என நிறுத்தான்; நிறுத்தே வந்து,
நுதலும் முகனும் தோளும் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குபு, நினைஇ, (6–8)

*நில் என்று (அதட்டி, போய்க்கொண்டிருந்த என்னை) நிறுத்தினான்; நிறுத்தியபின் (என் அருகே) வந்து, (என்னுடைய) நெற்றியையும், முகத்தையும், தோள்களையும், கண்களையும், சாயலையும், மொழிகளையும் கூர்ந்து கவனித்து, (சற்று) சிந்தித்து,*

ஐதுஏய்ந் தன்று, பிறையும் அன்று;
மைதீந் தன்று, மதியும் அன்று;
வேய்அமன் றன்று, மலையும் அன்று;
பூஅமன் றன்று, சுனையும் அன்று;
மெல்ல இயலும், மயிலும் அன்று;
சொல்லத் தளரும், கிளியும் அன்று; (9–14)

*வியப்பைத் தோற்றுவிக்கும் முறையில் (நெற்றி வளைவாக) அமைந்து இருக்கின்றது; (ஆனால் வளர்தலும், சுருங்குதலும் உடைய) பிறை அன்று; கருமையை (முகம்) முற்றிலும் விலக்கியதன்று (கண் இருப்பதால்) சந்திரன் அன்று (அதன் கருமை மாசாகக் கருதப்படுவதால்); பசிய மூங்கிலின் தன்மையைப் பொருந்தியிருக்கிறது (தோள்); (ஆனால் இவள் மூங்கில் பிறக்கும்) மலை அல்லள்; பூவின் தன்மையைப் பொருந்தியிருக்கின்றன (கண்); (ஆனால் பூக்கள் இருக்கும்) சுனை அல்லள்; மெல்ல நடக்கும் மயிலின் சாயலை உடையவளேனும், மயில் அல்லள்; மழலைச் சொற்களை இவள் பழகினாலும் கிளி அல்லள்;*

'மைதீர்ந்தன்று' என்ற இடத்தில் 'தீந்தது அன்று' என்பது 'தீர்ந்தன்று' எனக்குறைந்து நின்றது; 'தீர்ந்தன்று' எனக்கொண்டு 'தீர்ந்தது' எனப்பொருள் விரிப்பின், கருமையை முற்றிலும் விலக்கியது என்றோ, கருமையால் முற்றிலும் இயைந்தது என்றோ கூறவேண்டி வரும்.

என ஆங்கு,
அனையன பலபா ராட்டிப் பையென
வலையர் போலச் சோர்பதன் ஒற்றி (என்
நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉ)*
புலையர் போலப் புன்கண் நோக்கித்
தொழலும் தொழுதான், தொடலும் தொட்டான்; (15–19)

என்று அத்தகைய புகழுரைகளால் என்னைப் பாராட்டி, மெதுவாக, வேடர்களைப்போல என் மனம் தளர்ச்சியடையும் சமயத்தை அறிந்து கொலைக்கு அஞ்சாதவர்களைப் போல் என் மனத்தில் தைக்கும்படி பார்த்து, தனக்கு அருள் செய்யுமாறு வேண்டிக்கொள்ளு தலையும் செய்தான், (என் முறுவல், நாணம் முதலியவை அவன் வேண்டுகோளை நான் ஏற்றுக்கொண்டதை அறிவிக்கவும், துணிவுகொண்டு என்னை) அணைத்துக் கொள்ளுதலையும் செய்தான்;

வேடர் வெற்றிக்கு நிதானம், பரபரப்பின்மை, சமயமறிந்து நடத்தல் இவை இன்றியமையாதன; கொலைஞர் எவ்விலங்கைப் பார்த்தாலும், அதன் நிணத்தின் தன்மை, எடை, விலை முதலிய வற்றைக் கருதுவார்களே ஒழிய, அதன் அழகைக் கவனிக்க மாட்டார்கள். அவ்வாறே தலைவனும், அவள் தளர்ந்த சமயம் பார்த்து அவள் மேனி அழகைப் பருகாமல், 'நெஞ்சத்தே தைக்கும் நெடுநோக்கு' நோக்கி, அவளைத் தன் வயப்படுத்தினான்.

காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்
தொழூஉம்; தொடூஉம்; அவன் தன்மை
ஏழைத் தன்மையோ இல்லை தோழி! (20–22)

---

★ (என்... காணுஉ - பல பதிப்புகளில் இன்று)

அங்குசத்துக்குக் கட்டுப்படாமல் (மனம் போனபடி) நடக்கும் வேகமான செலவினையுடைய யானையைப் போன்ற அவன் தொழுவான்; அணைப்பான்; (தொழுத போதிலும்) இரந்து நிற்பவர் நிலையைப் போலில்லாமல் அவன் தன்மை பெருமிதம் உடையதாகவே இருந்தது, தோழி.

மதம் நிறைந்த யானையைப்போல், காமம்மிக்க தலைவனும் நெறியொன்றும் இன்றி மனம் போனவாறு ஒழுகினான்

'நெறி ஏது காமியர்க்கு' (பாரதியார் - குயில்பாட்டு)

மேலைச் செய்யுள் அலருக்கு அஞ்சிய தலைவி, நிகழ்ந்தவற்றைக் கூறி, தலைவனை வரைவு முயற்சி மேற்கொள்ளத் தூண்டுமாறு தோழியைக் கேட்டுக்கொண்டதைச் சித்திரித்தது. இதுவும் அம்முறையில் நிகழ்ந்தவற்றைத் தலைவி தோழிக்குக் கூறுவதைச் சித்தரிப்பதேனும், இதன் நோக்கம் வேறு. தலைவன் குறையை விரைந்து ஏற்றுக்கொள்ளுமாறு தோழியைக் கேட்டுக்கொள்வது இச்செய்யுளின் நோக்கம். தலைவி தோழியைப் பெரிதும் பாராட்டக் காரணம் இதுவே. இவ்வகையில் இது 'சுடர்த்தொடீஇ கேளாய்' என்ற கலியோடு தொடர்புடையதாய் அமைந்திருக்கின்றது.

## 20. ஊர்க்கான் நிவந்த...

அவள் அழகை அவனால் நன்றாகக் கூற முடியவில்லை. அது அவனுடைய ஆற்றலின் எல்லையைக் கடந்ததாய் இருக்கிறது. இத்தகைய பேரெழிலுடையவள் தோற்றம், அவனுக்குத் திகைப்பையும், மயக்கத்தையும் தோற்றுவித்தது. இருப்பினும் மிக்க வல்லமையோடு அவளைப் பாராட்டிப் பேசுகிறான். அவன் மனோ விகாரங்களையும், அவை தோன்றத் தானே காரணம் என்பதையும் அவள் அறிந்துகொள்ளவில்லை. இளம் பருவத்தாள் ஆகையால் தன்னைப் பாராட்டுபவனைப் 'பேதுற்றாள்' போலப் பார்க்கிறாள், 'சொல்எதிர்

பெறாஅன்' சொல்லி இன்புறல் என்ற கைக்கிளைத் துறையைச் சார்ந்தது இப்பாடல்.

ஊர்க்கான் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ, அகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகன்அமர்ந்து
ஈங்கே வருவாள் இவள்யார் கொல்! (1-6)

ஊரைச் சார்ந்த காட்டில், மிக உயர்ந்து வளர்ந்த (மரங்கள் நிறைந்த) பூஞ்சோலையில் (ஓடும்) வாய்க்காலின் கரைகளிலே வளர்ந்த, செறிந்த நிழலைத் தரும் ஞாழலின் முதிர்ந்த பூங்கொத்துகளைக் கொண்டு, (அவை, கருத்த தன் மயிரில் மயங்கித் தோன்றும்படி) கலக்க முடித்து, (இவ்வாறு முடித்ததால் பூவும் மயிரும்) சேர்ந்து இருக்கின்ற (பூக்களும் மயிரோடு இயற்கையாய் வளர்ந்தவைபோலப் பொருந்தி இருக்கின்ற) கூந்தல் தோளின் மீது மகரந்தத் தூள் (படியும்படி) தாழ்ந்து (அசைய,) அகன்ற சந்திரன் தன் இனிய கிரணங்களைப் பரப்பி (அவை பட்ட இடங்களை ஒளிவிடச் செய்வது) போலத் தன் முகப்பொலிவால் (தானுள்ள சூழ்நிலையை இனிப்பித்து) இவ்விடத்தை நோக்கி வருபவளாகிய இவள் யாராய் இருக்கும்!

கழும-கலக்க; கண்கூடு கூழை-சேர்ந்திருக்கின்ற கூந்தல்; சுவல்-தோள்.

ஆங்கேஓர்,
வல்லவன் தைஇய பாவைகொல், நல்லார்
உறுப்புஎலாம் கொண்டுஇயற்றி யாள்கொல், வெறுப்பினால்
வேண்டுஉருவம் கொண்டதோர் கூற்றங்கொல், ஆண்டார்
கடிதுஇவளைக் காவார் விடுதல் கொடிஇயல்

பல்கலைச் சில்பூங் கலிங்கத்தள் ஈங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள். (6-12)

கொல்லி மலையின் ஒப்பற்ற தொழில் வல்லமை உடையவனால் செய்யப்பட்ட பாவையேதானோ? பெண்களுக்கு மிக்க அழகைத் தரும் அங்கங்களாலேயே படைக்கப்பட்டாள் ஒருத்தியோ? (தன் வரவை மக்கள்) வெறுப்பதனால் (அவர்கள் பெரிதும்) விரும்பும் வடிவத்தை மேற்கொண்டு, (தன் கடமையைத் தப்பாது செய்தலில்) ஒப்பற்ற எமனே தானோ? இவளைப் பாதுகாக்க வேண்டியவர் கொடுமையுடன் பாதுகாவாமல், (இச்சைப்படி) திரியவிட்டு விட்டமையால், கொடி போன்ற நுடக்கத்தினைப் பொருந்தியவளாய், பல கோவைகளை யுடைய மேகலையைப் பூண்டவளாய், சிலவாகிய பூத்தொழில் பொதிந்த ஆடையை அணிந்தவளாய் இங்கே வருபவள், (இவ்வூரில்) பிள்ளை இல்லாமையாகிய வறுமையை உடையவர்களின் செல்வமாகிய மகள் போலும்!

அசுரர்கள் மயங்கி விழும்படித் திருமகள் ஆடிய கூத்துக்குப் பாவைக் கூத்து என்று பெயர்; திருமகள் அன்று கொண்ட கோலத்தைக் குறிப்பிடும் படிமத்தைக் 'கொல்லிப் பாவை' என்றும், அந்தப் படிமம் இருந்த மலையைக் 'கொல்லி மலை' என்றும் வழங்குவது உண்டு. பருவப் பெண்களுக்கு உரிய காப்பு மிகுதியைக் கருதி, காவ லில்லாது வேண்டியாங்குத் திரியும். இவளை 'நல்கூர்ந்தார் செல்வ மகள்' என உணர்ந்தான்.

இவளைச் சொல்ஆடிக் காண்பேன் தகைத்து!
'நல்லாய்! கேள்: (13-14)

இவளை நிறுத்தி, இவளோடு பேசிப் பார்ப்பேன்; 'நல்லவளே!' இதனைக் கேள்:

இதுவரை தன்னை எதிர்ப்பட்டு வந்த பெண்ணின் அழகைக் கண்டு மயங்கிய தலைவன் மன நிலையையும், அவன்

சிந்தித்தவற்றையும் விவரிக்கக் கேட்டோம்; இனி, அவன் அவளிடத்துக் கூறியவற்றைக் கேட்போம். செல்வமாக வளரும் பெண்ணாகையால் புகழுரைகளைக் கேட்டு மனமிளகும் என எண்ணிப் பேசத் தொடங்கினான்.

ஆய்தூவி அனம்என, அணிமயில்பெடைஎன
தூதுணம் புறவுஎனத் துதைந்தநின் எழில்நலம்
மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய்! -நிற்கண்டார்ப்
பேதுறூஉம் என்பதை அறிதியோ, அறியாயோ? (15-18)

நன்கு ஆராய்ந்து (சேர்க்கப்பட்டவை என்று சொல்லும்படி, ஒரு படித்தாய் மென்மையாய் இருக்கின்ற) மயிரினையுடைய அன்னம் போலவும், அழகிய மயில் பெண் தன்மையை (மேற்கொண்டது) போலவும், கல்லை உண்டு வாழும் தூதுணம் புறாவைப் போலவும், (என்று உன் நடையையும், சாயலையும், மடப்பத்தையும் கண்டார் வியக்கும்படி, உன்னிடத்தே (ஒருங்கே) சேர்ந்திருக்கும் உன் அழகு மிக்க தோற்றம், (பார்ப்பவர்) காதல் கொள்ளும் தன்மை சிறந்ததும் மானினுடையதைப் போன்றதுமான மருண்ட பார்வையையுடைய இளையவளே! உன்னைக் கண்டவரைப் பித்துறச் செய்யும் என்பதனை நீ அறிவாயோ, மாட்டாயோ?

தூது-கல்; அதை உண்டு வாழ்வது 'தூதுணம் புறவு' துதை-நெருங்கிய, மண்டிய; மடமை-இளமை.

நுணங்குஅமைத் திரள்என, நுண்இழை அணைஎன,
முழங்குநீர்ப் புணைஎன அமைந்தநின் தடமென்தோள்
வணங்குஇறை வால்எயிற்று அந்நல்லாய்! நிற்கண்டார்க்கு
அணங்குஆகும் என்பதை அறிதியோ, அறியாயோ?
(19-22)

எளிதில் வளையும் இளைய மூங்கிலின் திரட்சியை (உடையது) என்றும், (ஊற்றின்பம் பயப்பதால்) மெல்லிய

மயிரினால் ஆகிய தலையணை என்றும், (காமக்கடலைக் கடக்க உதவுமாகையால்) ஒலிக்கின்ற கடல் நீரைக் கடக்க உதவும் தெப்பம் என்றும் (வியந்து பாராட்டும்படி) பொருந்தியவை உள் அகன்ற மெல்லிய தோள்கள். வளைந்த முன் கையினையும், வெண்மையான பற்களையும் உடைய அழகியே! உன்னைக் கண்டவர்க்கு வருத்தம் விளைவிக்கும் என்பதனை நீ அறிவாயோ, மாட்டாயோ?

உருவம், பண்பு பயன் இம் மூன்றையும் பற்றி, தோளுக்கு முறையே மூங்கிலும், தலையணையும், தெப்பமும், உவமிக்கப்பட்டன. இழை தூவியைக் குறிக்கின்றது.

முதிர்கோங்கின் முகைஎன, முகஞ்செய்த குரும்பைஎன,
பெயல்துளி முகிழ்என, பெருத்தநின் இளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய்! நிற்கண்டார்
உயிர்வாங்கும் என்பதை அறிதியோ, அறியாயோ?
(23-26)

கோங்க மரத்தின் முற்றிய அரும்பு என்றும், (தன்னை மூடிக்கொண்டிருக்கும் பாளையினின்றும்) வெளிவந்த தென்னங் குரும்பை என்றும், மழைத்துளியாலாகிய மொக்குகள் என்றும் சொல்லும்படி அளவாகப் பெருத்திருக்கும் உன்னுடைய மெல்லிய முலைகள், மயிர் ஒழுங்கு உடையனவும், வளையலணிந்தவையுமான முன் கைகளையுடைய இளையோளே! உன்னைக் கண்டவர்களுடைய உயிரைக் கவரும் என்பதனை நீ அறிவாயோ, மாட்டாயோ?

கண்டாரைக் கவர்ந்து நிறுத்திய தோற்றத்தை முதல் தாழிசையிலும், ஆதரவுடன் அணைக்கும் தோள்களை அடுத்தும், போகத்தை மிகுவிக்கும் முலைகளைப் பின்னும் கூறியுள்ள முறைவைப்பு உணர்ந்து மகிழத்தக்கது.

எனஆங்கு,
பேதுற்றாய் போலப் பிறர்எவ்வம் நீஅறியாய்,
யாதொன்றும் வாய்வாளாது இறந்தீவாய், கேள். இனி;
(27-29)

என்று நான் உன்னைப் பாராட்டிப் பேசவும், (புதியோன் ஒருவன் தடுத்து நிறுத்திப் பேசுவதன் பொருளை உணராது) திகைப்புற்றவளைப் போன்ற (கோலத்தை மேற்கொண்டு, உன்னைக் கண்டதனால்) பிறர்படும் அவதியை அறியாதவளாய் நீ எதனையும் வாய்விட்டுக் கூறாமல் போகின்றாய், இனி நான் கூறப் போவதைக் கேள்.

'நீ கூறுவது எதுவும் எனக்கு விளங்கவில்லை' என்று தலைவி கூறி இருந்தாலும், தலைவன் கலக்கமின்றி இருந்திருப்பான். உண்மையில் தான் கூறியவற்றைத் தலைவி உணர்ந்துகொள்ள முடியாதவள் தானா. அல்லது, உணர்ந்தும் உணராதவளைப்போல் பாசாங்கு செய்கிறாளா என்ற கலக்கம் தலைவன் வருத்தத்தின் எல்லையைப் பெருக்குகின்றது.

நீயும் தவறுஇல்லை; நின்னை புறங்கடைப்
போதர விட்ட நுமரும் தவறுஇலர்;
நிறைஅழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறைஅறைந்து அல்லது செல்லற்க என்னா
இறையே தவறுஉடை யான். (30-34)

நீயும் குற்றமற்றவள்; உன்னை (இச்சைப்படி) வீட்டின் வெளியே சென்று திரிந்துவர விட்டுவிட்ட உன் சுற்றத்தாரும் குற்றமுடையவர் அல்லர்; தன் இயல்பான தன்மையைக் கடந்து, கொல்லும் தன்மையை மேற்கொண்ட யானையை நீராடச் செல்லவிடும்பொழுது (செய்வதைப் போல, உன் வருகையை அறிவிக்கும் எச்சரிக்கையாகப்) பறையறைந்து வந்தாலன்றி வெளியே செல்லக்கூடாது என்று ஆணையிடாத அரசனே தவறுடையான்.

# 21. வேயெனத் திரண்டதோள்...

அவன் எதைப் பறிகொடுத்துவிட்டான்? ஒன்றிலும் விருப்பமில்லாதவன் போலக் காணப்படுகின்றானே! என்ன நிகழ்ந்தாலும் உற்சாகத்தையும், மன எழுச்சியையும் இழக்காமல், மகிழ்ச்சியோடு இருக்கவேண்டிய இளைஞன் வாடி வாட்டமுற்று வருந்துவது உலகத்தைப் பழிப்பதேயன்றோ? இவ்வாறு இடி விழுந்தவனைப் போல் அவன் இருக்கக் காரணம் என்ன? பாங்கனுக்கே அவன் வருத்தத்துக்குக் காரணம் தெரியவில்லை என்றால், நமக்கு எப்படி தெரியும்? தலைவன் தன் மன நிலையைப் பாங்கனுக்கு விவரிப்பதுபோல் அமைந்திருக்கிறது இப்பாடல்.

வேய்எனத் திரண்டதோள், வெறிகமழ் வணர்ஐம்பால்.
மாவென்ற மடநோக்கின், மயில்இயல், தளர்புஒல்கி
ஆய்சிலம்பு அரிஆர்ப்ப, அவிர்ஒளி இழைஇமைப்ப,
கொடிஎன மின்என அணங்குஎன யாதொன்றும்
தெரிகல்லா இடையின்கண் கண்கவர்பு ஒருங்குஓட
வளமைசால் உயர்சிறப்பின் நுந்தைதன் வியல்நகர்
இளமையான் எறிபந்தோடு இகத்தந்தாய்! கேள் இனி;
(1-7)

மூங்கில் என்று சொல்லும்படி திரண்டு இருக்கின்ற தோள்களையும், மணம் பரப்புகின்ற கடைகுழன்ற கூந்தலையும், மானையும் வெற்றிகொண்ட மடப்பம் பொருந்திய பார்வையையும், மயிலின் சாயலையும் (உடையவளே! நீ தளர்ந்து ஒதுங்கி நடந்து வருவதால், உன் காலில் இருக்கும்) அழகிய சிலம்புகளில் உள்ள மணிகள் (அடி வைக்கும்தோறும்) ஆரவாரிக்கவும், உன் ஒளிமிக்க ஆபரணங்கள் (நீ ஒதுங்குந்தோறும்) விட்டுவிட்டு ஒளியைக் கக்கவும், (மென்மைத் தன்மையால்) கொடி

என்றும் (நுடக்கத்தால்) மின்னல் என்றும், (எனக்கு வருத்தம் விளைவித்ததால்) அணங்கு என்றும் (என்னால் பாராட்டப் படுவதேயானாலும்) இவற்றுள் எது சிறந்த உவமை என்று தெரிந்துகொள்ள முடியாத (உன்) இடையினிடத்தே (அது இருக்கிறதா, இல்லையா என்று தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஆவலினால் தூண்டப்பட்டவையாய் என்) கண்கள் இரண்டும் (அதனால்) கவரப்பட்டனவாய்ச் சேர்ந்து ஓடும்படி செல்வம் நிறைந்ததும், உயர்ந்த சிறப்பினை உடையதுமான உன் தந்தையின் அகன்ற மாளிகையினின்றும், இளமைப் பருவத்தின் தூண்டுதலால் எறிந்து விளையாடும் பந்தோடு (விளையாட்டில் விருப்பமுடையவளாய்) வெளிப் போந்தவளே! நான் கூறுவதைக் கேள்!

இடையின் இருப்பை அறியவேண்டும் என்ற ஆவலினால் இருகண்களும் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு பார்க்கச் சென்றன என்பதை 'ஒருங்கோட' என்ற தொடர் குறிப்பிடுகின்றது.

பூந்தண்தார்ப் புலர்சாந்தின் தென்னவன் உயர்கூடல்
தேம்பாய அவிழ்நீலத்து அலர்வென்ற அமர்உண்கண்
ஏந்துகோட்டு எழில்யானை ஒன்னாதார்க்கு அவன்வேலின்
சேந்துநீ இனையையால், ஒத்ததோ? சின்மொழி! (8-11)

பூக்களால் தொடுக்கப்பட்ட குளிர்ந்த மாலையையும், பூசிப்புலர்ந்த சந்தனத்தையும் அணிந்த பாண்டியனுடைய பெருமை பெற்ற மதுரை நகரத்தில் தேன் வழிந்து ஓடும்படி விரிகின்ற குவளை மலர்களின் அலர்ந்த செவ்வியை வெற்றி கொண்டவையும், உன் முகத்துக்குப் பொருந்தியவையும் ஆகிய ஆளை விழுங்கும் கண்களையும், சிலவாகிய மொழிகளையும் உடையவளே! வளைந்து நிமிர்ந்த தந்தங்களைப் பெற்ற அழகிய யானைகளைக் கொண்ட படைபலம் பெற்ற பகைவர்க்கு (அவனுடைய-பாண்டியனுடைய) வேல் (செய்யும் கொடுமையைக்

காட்டிலும்) நீ சிவந்து, என்னை வருத்தும் தோற்றத்தை மேற்கொள்ளுவது, உன் இயல்புக்குப் பொருந்தியதோ?

அவள் இளையள்; அவன் கூறுவனவற்றை உணர முடியாதவளேனும், புதியோன் ஒருவன் தன்னை நோக்கிப் பேசுவதைக் காணக் கூசிச் சிவந்தாள். விளையாட்டு விருப்பத்தோடு வெளிவந்தவள், நகைமுகம் மாறிச் சிவந்ததைத் தலைவன், தன் குறையை ஏற்காத குறிப்பாகக் கொண்டு கலங்குகிறான். பாண்டியன் வேல், பகைவர் இரத்தம் தோய்ந்து சிவந்தது.

பொழிபெயல் வண்மையான் அசோகந்தண் காவினுள்
கழிகவின் இளமாவின் தளிர்அன்னாய்! அதன்தலைப்
பணைஅமை பாய்மான்தேர் அவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினும் நோய்செய்தல் கடப்பன்றோ? கனங்குழாய்!
(12-15)

(நன்மையைப்) பொழிகின்ற மழையைப்போல் கொடைச் சிறப்பு பெற்ற பாண்டியனது அசோக மரம் அடர்ந்த குளிர்ச்சி பொருந்திய சோலையுள், மிக்க அழகுடைய இளைய மாமரத்தின் தளிரைப்போன்றவளே! உன் அழகிய நிறத்தினால் என் கண்களை மயக்கி வருத்துவதோடு, பந்தியிலே வரிசையாக நிற்கும் பாய்ந்து செல்லும் குதிரைகளையும், தேர்களையும் பெற்ற அவனுடைய பகையரசர்களின் மருமத்தானத்தை ஊடுருவிச் சென்ற அவனுடைய அம்பு (செய்த கொடுமையைக் காட்டிலும், மிக்க வருத்தத்தை (எனக்குச்) செய்வது, பொன்னாலான காதணிகளைப் பூண்டவளே! கொடுமையேயன்றோ?

'மாந்தளிர் மேனிநிறத்துக்கு உவமை. பாண்டியன் அம்பு, பகைவரைப் பட்டவுடன் கொன்று விடுவதால், அவர்களைக் கண நேரம் துன்பப்பட வைக்கிறது. ஆனால் இவள் செய்யும் நோய், அவன் உயிரை வாங்காததோடு, உயிர்போகும் துன்பத்தை அவனை ஓயாது அனுபவிக்கச் செய்கிறது. பொன்னாலாகிய ஆபரணத்தை

அணிந்தவளேனும், இரும்பாற் செய்த அம்பைப் பெற்றவனைக் காட்டிலும் அதிக துன்பத்தை விளைவிக்கிறாள்.

வகைஅமை தண்தாரான் கோடுஉயர் பொருப்பின்மேல்
தகைஇணர் இளவேங்கை மலர்அன்ன சுணங்கினாய்!
மதவலி மிகுகடாஅத்து அவன்யானை மருப்பினும்
கதவவால் தக்கதோ? காழ்கொண்ட இளமுலை; (16-19)

பலவகைப்பட்ட குளிர்ச்சி பொருந்திய மாலைகளைப் பூண்ட பாண்டியனது சிகரங்கள் உயர்ந்த பொதிய மலையின் மேல் அழகுடைய கொத்துகளையுடைய இளைய வேங்கை மரத்தின் மலர்களைப் போன்ற நிறமுடைய சுணங்கு பரக்கப் பெற்றவளே! செருக்காலே வலிமிகப்பெற்ற மதத்தையுடைய அவனுடைய யானைகளின் கொம்புகளைக் காட்டிலும், உன்னுடைய முத்து வடங்களைப் பூண்ட இளைய முலைகள் கோபம் மிக்கவையாய் இருத்தல், நின் இயல்புக்குப் பொருந்துவதோ?

கதம்-சினம்; முலைகளின் திரட்சியையும், அழகையும் கண்டு இவன் மனம் வெதும்பியதை, அவைகளின்மேல் ஏற்றி, அவை யானையின் கொம்புகளிலும் கூர்மையானவை எனக் கூறுகிறான்.

எனஆங்கு,
இனையன கூற,இறைஞ்சுபு நிலம்நோக்கி,
நினையுபு நெடிதுஒன்று நினைப்பாள்போல் மற்றுஆங்கே
துணைஅமை தோழியர்க்கு அமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாள்என் அறிவுஅகப் படுத்தே.
(20-24)

என்று இத்தன்மையான மொழிகளை நான் சொல்லவும், (அவள்) தலை கவிழ்ந்து நிலத்தை நோக்கி, எதனையோ ஒன்றை வெகுநேரம் சிந்தித்துப் பார்ப்பவளைப் போல் நினைத்து, அப்பொழுதே (அவள்

என்ன முடிவிற்கு வந்தாள் என்பதை எனக்குக் கூற்றாலோ, குறிப்பாலோ உணர்த்தாமலேயே) தனக்குத் துணைவியராய் இருந்த தோழியர்களைத் (தேடி, அவர்களிடத்துப்) பொருந்திய கண்களை உடையவளாய், என் அறிவை அகப்படுத்திக் கொண்டு தன் வீட்டினுள் சென்றுவிட்டாள்.

சென்ற கலியில், தலைவன் தன்னைப் புகழக்கேட்ட தலைவி, பேதுற்றவள்போல் பார்த்துவிட்டுச் சென்றதை அத்தலைவன் நன்குணர்ந்துகொண்டான். இங்கு, தலைவன் தன்னைப் புகழக் கேட்டு, தலைகுனிந்து நிலத்தை நோக்கியபடி, எதனையோ சிந்திப்பவளைப்போல் இருந்துவிட்டு, பின்னர் எதனையும் கூறாமலும், உணர்த்தாமலும் சென்றுவிடவே தலைவன் மனக்கலக்கம் உற்றான். சிந்தித்தவள் தான் கூறியவற்றை உணர்ந்துகொண்டிருக்க வேண்டுமே, அவ்வாறு உணர்ந்து கொண்டவள், ஒன்றும் கூறாமலும், குறிப்பிடாமலும் சென்று விட்டாளே, இப்போக்கு அவள் தன்னை விரும்பாததை உணர்த்துவதாகுமே என்ற கவலையே தலைவனைத் துன்பக்கடலில் ஆழ்த்தியது.

## 22. வாருறு வணரைம்பால்...

'ஊர்க்கான் நிவந்த' என்ற பாடலைப்போல், இதுவும் 'சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புற்றது.'

வார்உறு வணர்ஐம்பால், வணங்குஇறை, நெடுமென்தோள்,
பேர்எழில் மலர்உண்கண், பிணைஎழில், மான்நோக்கின்,
கார்எதிர் தளிர்மேனி, கவின்பெறு சுடர்நுதல்,
கூர்எயிற்று முகைவெண்பல், கொடிபுரையும் நுசுப்பினாய்!
நேர்சிலம்பு அரிஆர்ப்ப, நிறைதொடிக்கை வீசினை
ஆர்உயிர் வெளவிக்கொண்டு, அறிந்து ஈயாது, இறப்பாய்! கேள்:
(1-6)

சீவி முடிக்கப்பெற்ற கடைகுழன்ற கூந்தலையும், வளைந்த முன்கையையும், நீண்ட மென்மையான தோள்களையும், ஒப்புசொல்ல முடியாத அழகுமிக்க மலர்களைப்போன்ற 'ஆளைவிழுங்கும்' கண்களையும், அழகிய பெண்மானினுடையதைப்போன்ற (மருண்ட) பார்வையையும், மழையைப்பெற்ற (மரங்களின் பசிய) தளிரை ஒத்த மேனியையும், அழகுபெற்று ஒளிவிடும் நெற்றியையும், கூர்மையானவையும் மலரின் மொட்டுகளைப் போன்றவையுமான வெண்மையான பற்களையும், கொடியை ஒத்த இடையையும் உடையவளே! உனக்குப் (பெரிதும்) பொருத்தமான காற் சிலம்புகளில் உள்ள பரல்கள் ஒலிக்கும்படி, நிறைந்த வளையல்களை அணிந்த கைகளை வீசியவளாய், என்னுடைய அருமையான உயிரை அகப்படுத்திக்கொண்டு, (இவ்வாறு, பிறன் உயிரை பறிகொண்டு விட்டோம் என) உணர்ந்து, (இதனை அவனுக்குத் திருப்பித் தருதலே தகுதியுடையது என்று கருதி) அருளாமல், (நின் இச்சைப்படி) நின் வழியே செல்பவளே! கேள்:

'எயிறு', 'பல்' இரண்டும் ஒரே பொருளைக் குறிப்பன. இவை அடுக்கி வந்தமையால், 'கூர் எயிறு' என்பதனை விழுந்து புதிதாக முளைத்த பற்களெனவும், 'முகைவெண்பல்' என்பதனை இன்னும் விழாத பாற்பற்கள் எனவும் நச்சினார்க்கினியர் கொண்டார். இளம் பருவ மங்கையர்க்கே சிலம்பு அழகைத் தருவன ஆகையால், 'நேர் சிலம்பு' எனப்பட்டன. எதிரே புதியோன் இருக்கவும், சிலம்புகள் ஒலிக்க, கை வீசி நடக்கிறாள் என்பது, ஆடவரைக் கண்டு நாணும் பருவத்தை அவள் இன்னும் அடையவில்லை என்பதை உணர்த்துகின்றது.

உளனாஎன் உயிர்உண்டு, உயவுநோய் கைம்மிக<br>
இளமையான் உணராதாய்! நின்தவறு இல்லானும்,<br>
களைநரில் நோய்செய்யும் கவின்அறிந்து அணிந்துதம்<br>
வளமையான் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்; (7-10)

நான் இருப்பவனாக இருந்தும், என் உயிரை வாங்கிக் கொண்டு வருத்தத்தை விளைவிக்கும் காமநோய் பொறுக்கும் எல்லையைக் கடக்கவும், அதனை உன் இளமை காரணமாய் உணராது இருக்கின்றவளே! இது (நீ இளம் பருவத்தள் ஆகையால்) உன்னுடைய தவறு அன்றேனும், போக்குவார் வேறு எவரும் இல்லாத காம நோயை விளைவிக்கும் உன் அழகின் மாட்சியை அறிந்தவராய் இருந்தும், (நின்னைப் பிறர்க்கு நோய் செய்யவொட்டாமல் வீட்டிலேயே இருக்கச் செய்யாமல்) தம் செல்வ மிகுதியை உலகினர்க்கு உணர்த்த (உன் அழகை நன்றாக எடுத்துக்காட்டும்படி) அணிகலன்களை உனக்குப் பூட்டி, உன்னை வெளியே செல்லவிட்ட உன் சுற்றத்தாரும் தவறுடையர் அல்லர் என்பாயோ!

தம் செல்வச் சிறப்பைப் பிறர்க்கு அறிவிக்கவே, தலைவியை வெளிச்செல்ல விட்டனரேனும், தம்செயல் தலைவியைக் கண்டவர்க்கு வருத்தம் விளைவிக்கும் என உணராதது அவர் குற்றமே என்பது தலைவன் வாதம்.

நடைமெலிந்து, அயர்வுறீஇ, நாளும்என் நலியும்நோய்
மடமையான் உணராதாய்! நின்தவறு இல்லானும்
இடைநில்லாது எய்க்கும்நின் உருவுஅறிந்து அணிந்துதம்
உடைமையான் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்;
(11-14)

என்னுடைய போக்குவரவுகளைக் கட்டுப்படுத்தி, எனக்கு (எதனையும் நன்கு செய்துமுடிக்க முடியாதபடி) தளர்ச்சியைத் தந்து, நாளுக்குநாள் என்னை அதிகமாகத் துன்புறுத்தும் இந்நோய் (நின்னால் விளைந்தது என்பதை) உன் இளமை காரணமாய் உணராதவளாய் இருக்கின்றவளே! இது உன்னுடைய தவறு அன்றேனும், (நின் உறுப்புக்களைச் சுமத்தலால் அப்பாரத்தைத்) தாளாது இளைக்கும் இடையினையுடைய உன் வடிவழகைத்

தெரிந்திருந்தும், தமக்கு உள்ள செல்வ மிகுதியை வெளிப்படுத்த, உனக்கு அணிகலன்களைப் பூட்டி வெளியே போகவிட்ட உன் சுற்றத்தாரும் தவறுடையர் அல்லர் என்பாயோ?

எழுதரு மின் இடையே எனையிடர் செய்தவையே' சிலம்பு. நடை-ஒழுக்கம்; மனிதன் 'தொழிற்படுதலை' உணர்த்துகின்றது.

அல்லல்கூர்ந்து அழிவுற அணங்காகி அடரும்நோய்
சொல்லினும் அறியாதாய்! நின்தவறு இல்லானும்
ஒல்லையே உயிர்வௌவும் உருவுஅறிந்து அணிந்துதம்
செல்வத்தான் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்;

(15-18)

நான் படும் துன்பத்தை மிகுதிப் படுத்திப் பின் நான் அழிவெய்தும்படி வருத்தஞ் செய்யும் அளவிற்குப் பெருகி, இறுதியில் என்னைக் கொன்றுவிடும். இந்நோயின் தன்மையை எடுத்துக் கூறியும் அறிந்துகொள்ள முடியாமல் இருப்பவளே! இது உன்னுடைய தவறு அன்றேனும் கண்டவுடன் (அவர்) உயிரைக் கவர்ந்து கொள்ளும் உன் வடிவழகினை அறிந்து வைத்தும், தம் செல்வ மிகுதியை உணர்த்த உனக்கு அணிகளை அணிவித்து வெளியே போகவிட்ட உன் சுற்றத்தாரும் தவறுடையர் அல்லர் என்பாயோ?

என ஆங்கு
ஒறுப்பின்,யான் ஒறுப்பது நுமரையான் மற்றுஇந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயின், பொலங்குழாய்!
மறுத்து,இவ்வூர் மன்றத்து மடல்ஏறி,
நிறுக்குவென் போல்வல்யான்; நீபடு பழியே. (19-23)

நான் வெறுத்துக் கூறுவதுண்டாயின், நான் வெறுப்பது உன் சுற்றத்தாரையே யன்றி (உன்னையன்று; என்னைப் பற்றியிருக்கும் நீ தந்த) இந்நோய் பொறுத்துக்கொள்ளக்

கூடிய அளவை உடையதன்றி, அதிகப்படுமானால், பொன்னால் செய்த அணிகளைப் பூண்டவளே! (அந்நோய் என் மீது ஏறட்டுக்கொண்ட உரிமையைப்) போக்கி, இவ்வூரின் நடுவேயுள்ள பொது இடத்தில் மடல் ஏறி அந்நோயின் ஆட்சியைத் தடை செய்வேன்போல் நடந்து கொள்வேன்; நான் (மடலேறியதாலோ, இறப்பதாலோ) உண்டாகும் பழியை நீ எய்துவாய்.

# 23. தளைநெகிழ் பிணி நிவந்த...

சிலம்புகள் 'ஜல்ஜல்' என ஒலிக்க, பொம்மைகளையும், விளையாட்டுப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு ஒய்யாரமாக நடந்து வருகிறாள் அவள்- சிறு பெண்ணின் விளையாட்டேயானாலும், 'நல்லன நம்மை வந்தடைய வேண்டும் என்ற எண்ணத்தோடு, பெண்கள் புரியும் நோன்புகளைத் தழுவிய விளையாட்டுகளிலேயே அவள் விருப்பஞ் செலுத்துகிறாள்; 'முதுக்குறைந்தவள்' போல் விளையாட்டின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் அச்சிறுமியைத் தன் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்துகிறான் தலைவன்.

தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் தாமரை
முளைநிமிர்ந் தவைபோலும் முத்துக்கோல் அவிர்தொடி
அடுக்கம்நாறு அலர்காந்தள் நுண்ஏர்தண் ஏர்உருவின்
துடுப்புஎனப் புரையும்நின் திரண்டநேர் அரிமுன்கைச்
சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட அரிப்பெய்த அழகமை புனைவினை
ஆய்சிலம்பு எழுந்தார்ப்ப அம்சில இயலும்நின்
பின்னுவிட்டு இருளிய ஐம்பால்கண்டு என்பால
என்னைஇட்டு இகத்தர இறந்தீவாய்! கேளினி. (1-9)

கட்டு தளரப்பெற்ற அரும்புகளை நீர் மட்டத்துக்கு மேல் உயர்ந்து இருக்கும்படி (தூக்கிய) பசுமையான இலைகளை உடைய தாமரையின் முளைகள் (காய்கள்) வெளிப்பட்டு உயர்ந்திருக்கின்றவைகளைப் போன்ற முத்துக்களைப் பதித்துச் (செய்யப்பட்ட) ஒளிவிடும் வளைகளைப் (பூண்டனவும்) குன்றுகள் மணத்தை வீசும்படி அலர்கின்ற காந்தளின் கூர்மையான அழகையும், குளிர்ச்சியையும் பெற்ற மலர்களின் எழில் நிரம்பிய வடிவங்களை ஒத்தனவும், துடுப்பு என்று சொல்லும்படி நன்கு திரண்டு ஒன்றோடொன்று (உயர்வு தாழ்வு கற்பிக்க முடியாதபடி) ஒத்திருக்கின்றனவும் ஆகிய உன் மென்மையான முன் கைகளாலே ஒளி விடுபவையும், தொழில் மாட்சியை உடையவைகளுமாகிய செப்புகளையும் பாவைகளையும் (வைத்துக்கொண்டு) விளையாடுவதற்கு, மணிகள் உள்ளிடப்பெற்று, அழகு பொருந்தி, பூத்தொழில் நிறைந்தனவாகத் தெரிந்தெடுக்கப் பட்ட (உன் காலிற் புனைந்த) சிலம்புகள் மிகுதியும் ஒலிக்கும்படியும் அழகு வெளிப்படும்படியும் சில அடிகளிட்டு நடக்கின்ற உன்னுடைய, பின்னலிடப்பட்ட கருமையான கூந்தலைக் கண்டு, (எனக்கு உரிமையாய்) என்னிடத்தில் இருப்பனவாகிய மனமும் அறிவும் என்னைவிட்டு நீங்கி (நின்னைப் பின்பற்றி) வரும்படி (என் விருப்பத்துக்கு மாறாக என்னைக்) கடந்து செல்பவளே! இதனைக் கேள்:

பிணி-அரும்பு, பிணிப்பு அல்லது கட்டு உடையது; 'பசுமை அடை', பாசடை; ஏர்-அழகு; காந்தள் மலர்கள் விரல்களுக்கும் துடுப்பு முன்கைக்கும் உவமைகள்; தூதை-பானை, செப்பு; பாவை-மரப்பொம்மை.

மருளியான் மருள்உற 'இவன்உற்றது எவன்என்னும்
அருள்இலை இவட்கு'என அயலார்நின் பழிக்குங்கால்

வைஎயிற் றவர்நாப்பண் வகைஅணிப் பொலிந்துநீ
தையில்நீர் ஆடிய தவம்தலைப் படுவாயோ. (10-13)

(உன் அழகைக் கண்டு) நான் மயக்கம் அடையவும், (மயங்கிய) என் நிலையைக் கண்டு மயங்கி, இவன் இவ்வாறு மயக்கம் உறக்காரணம் என்ன என்று சற்று சிந்தித்துப் பார்க்கும் கருணைகூட இவளுக்கு இல்லாமல் இருந்து விட்டதே என்று கூறி அயலார் உன்னைத் தூற்றும்பொழுது கூர்மையான பற்களை உடைய பெண்கள் கூட்டத்தின் நடுவே சிறந்த அணிகலன்களால் விளங்குகின்ற நீ தைம் மாதத்தில் நீராடிய நோன்பின் பயனைப் பெறுவாயோ?

நல்ல கணவரைப் பெற கன்னிப் பெண்கள் தைம் மாதத்தில் நீராடுவது வழக்கம்; இதற்குத் தைந்நீராடல் என்று கூறுவர். தைந்நீராடுதலால் பெறும் பயனைத் தனக்கு அருளாததால் இழந்து விடுகிறாள் என்று தலைவன் கூறுகிறான்.

உருள்இழாய்! 'ஒளிவாட இவன்உண்நோய் யாதுஎன்னும்
அருள்இலை இவட்கு'என அயலார்நின் பழிக்குங்கால்,
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
எய்திய பலர்க்குஈத்த பயம்பயக் கிற்பதோ? (14-17)

அசைகின்ற அணிகளைப் பூண்டவளே! இவன் மேனி கருகும்படி இவனை உண்ணும் நோய் எது என்று கேட்கும் அருள்கூட இவளுக்கு இல்லாமற் போய்விட்டதே என்று அயலார் உன்னைப் பழிக்கும்பொழுது, விளையாட்டு விருப்பத்தால் பொய்க்கோலம் பூண்டு, நீ பிறர் வீடுகளில் சென்று பாடிப்பெற்ற சோற்றை ஏழையர் பலருக்கும் அளித்ததால் உண்டாகும் பயன், உனக்கு நன்மையைக் கொடுக்குமோ?

பொய்தல மகள்-பிக்குணி வேடத்தைப் பொய்யாகப் பூண்டவள், தன்னைத் துன்பமடையச் செய்வதால், ஈகையால் பெறும் பயனை அவள் அடையாமல் இருந்துவிடுவாள் என்பது தலைவன் குறிப்பு.

ஆய்தொடி ! ஐதுஉயிர்த்து 'இவன்உள்நோய் யாதுஎன்னும்
நோய்இலை இவட்கு'என அயலார்நின் பழிக்குங்கால்,
சிறுமுத்தனைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
நறுநுத லவரொடு நக்கதுநன்கு இயைவதோ? (18-21)

ஆராய்ந்த வளையல்களை அணிந்தவளே! (பிறர் உன் பரிவைக்கண்டு) வியக்கும்படி பெருமூச்செறிந்து, 'இவனைத் தின்னும் நோய் எது என்று, (கேட்கும் அளவுக்குக்கூட) கவலை இல்லை இவளுக்கு' என அயலார் உன்னைப் பழிக்கும் பொழுது, சிறிய பொம்மைப் பிள்ளையை விரும்பி அதற்குச் சமைத்து இட்ட நீ, நல்ல நெற்றியை உடைய பெண்களோடு சிரித்து விளையாடியது பொருந்துவதோ?

உயிரற்ற பிள்ளைக்குப் பரிவுகொண்டு சோறு சமைப்பவள் தன் துன்பத்தைக் கவனிக்காதிருப்பது தகுதியுடையதன்று எனத் தலைவன் வற்புறுத்துகிறான்.

என ஆங்கு,
அனையவை உளையவும் யான்நினக்கு உரைத்ததை
இனையநீ செய்ததுஉத வாயாயின், சேயிழாய்!
செய்ததன் பயம்பற்று விடாது;
நயம்பற்று விடின் இல்லை நசைஇயோர் திறத்தே.
(22-26)

சிறந்த அணிகளைப் பூண்டவளே! உன் மனம் வருந்தும்படி நான் (நீ செய்த) கொடுமைகளைச் சொல்லியது இவற்றால் ஏற்படும் துன்பத்தினின்றும் நான் விடுபடுவதற்கு நீ உதவி அளிக்காவிட்டால், நீ செய்தவைகளின் விளைவாகிய பயன் உன்னைப்

பொருந்துதலைத் தவிராது, 'உன்னை விரும்பியவர் களிடத்து நீ அருள் கொள்ளாவிடின், (நீ செய்த நற்கருமங்களின் பயனும் உனக்கு) இல்லையாம் (என்று நீ உணரும்படி செய்யவே)

நயம்-அருள்; அவளைத் தீங்கு சேராமல் காப்பாற்றுபவனைப் போலத் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறான்.

# 24. சுணங்கணி வனமுலை...

அலருக்கு அஞ்சிக் களவொழுக்கத்தை மேற்கொள்ளத் தயங்கினாள் தலைவி. தலைவன் தன்மையை அவளுக்கு வற்புறுத்தி உரைத்து, தோழி அவளைக் களவுக்கு உடம்படச் செய்ததைச் சித்திரிக்கிறது இக்கவிதை.

சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதல்,
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீழ் இருங்கூந்தல்,
நுணங்குஎழில் ஒண்தித்தி நுழைநொசி மடமருங்குல்,
வணங்குஇறை வரிமுன்கை, வரிஆர்ந்த அல்குலாய்!
(1-4)

தேமலை அணிகலனாகக்கொண்டு அழகுமலிந்து விளங்கும் முலைகளையும், சந்திரனைத் தன்னிடத்தே பெற்றதைப்போன்ற (வடிவத்தால் ஒத்து, குளிர்ச்சியையும், ஒளியையும் பரப்பும்) மணம் நிறைந்த நெற்றியையும், வாசனையை எங்கும் வீசுகின்ற மணமுள்ள மலர்களாலாகிய மாலையும், (பலனைக் கருதாது பிறர்க்கு நன்மையைச் சொரியும்) மழையும் (தம்சிறப்பையும், எழிலையும் பெருக்கிக் கொள்ளுவதற்காக) விரும்பும் கருமையான கூந்தலையும் நுட்பமான அழகு மாண்பு (வெளிப்படும்படி) ஒளிவிடும் தித்தி பொருந்தியதும், (காண்பவர்களின் பார்வை) நுழைந்து (கடந்து, அப்பாற் செல்லும்படி) நுடங்கி, (அவர்களை இடை இருக்கிறதோ,

இல்லையோ என ஐயுறச் செய்து) மயங்க வைப்பதுமாகிய இடையையும், நெகிழ்ச்சி மிக்க மணிக்கட்டுகளினிடத்தே அணிந்த வளையல்களையுமுடைய முன் கைகளையும், திதலை நிரம்பிய அடிவயிற்றினையும் உடையவளே!

வீழ்-விரும்பு; நொசிதல்-நுடங்குதல்; வணங்குதல்- வளைதல்; 'வரிமுன்கை' என்பதில் வரி-வளையல்; 'வரி அல்குல்' என்பதில் வரி-கோடு; 'சுணங்கு,' 'தித்தி,' 'திதலை' இவை மூன்றும் மகளிரின் எழிலை மாண்புறச் செய்வன. சுணங்கு- மார்பு, தித்தி- அடிவயிறு, திதலை- அல்குல், பரந்திருப்பதாகக் கூறுவது வழக்கு. பலனை எதிர்பாராது கொடுத்தலாகிய சிறப்பைப் பெற்றவைகளேனும், மலையும், மழையும், முறையே இவள் கூந்தலைச் சேராமலும் அதன் கருமையைப் பெறாமலும் இருப்பின், தம் உயர்வை இழக்கின்றனவாம். தான் கூறுவனவற்றை அவள் விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று, தோழி தலைவியை இவ்வாறு புகழ்ந்து பேசுகிறாள்.

கண்ஆர்ந்த நலத்தாரைக் கதும்எனக் கண்டவர்க்கு
உள்நின்ற நோய்மிக உயிர்எஞ்சு துயர்செய்தல்
பெண்அன்று புனைஇழாய்! எனக்கூறித் தொழூஉம்;
(5-7)

கண்ணுக்கு நிறைந்த அழகுடையவரை (எதிர்பாராது) திடீரெனக் கண்டவர்களுக்கு, அவர்கள் மனத்தினிடத்தே நிலைபெற்று இருப்பதான நோயைத் (தோற்றுவித்து) வளர்த்து, ('உயிர் நீங்கிவிடுவதும் நல்லதே' எனக்கூறி ஏங்கித் தவிக்கும் அவர்கள் நிலைக்குச் சற்றும் இரங்காமல்) அவர்களுடைய உயிர் மட்டிலும் எஞ்சி நிற்கும் படியான துன்பத்தைத் (துய்க்கச்) செய்தல், நல்ல அணிகளைப் பூண்டவளே! பெண்தன்மைக்குப் பொருந்தாது என்று கூறித் தொழுவான்;

புனை இழை -தொழில்மாட்சி சிறந்த அணிகலன்கள்; அணிகளுக்குச் சிறப்பைக் கொடுக்க, பாரம் உடையவையாய் இருந்தும் அவற்றைச்

சுமந்து திரிபவள், அவளுக்குத் துன்பம் எதனையும் செய்யாத அவனுக்கு அருளாமல் இருப்பது அவள் இயல்புக்குப் பொருந்தாது என அவன் நிலையை அவன் விளக்கியதை போல் கூறிய சொற்கள், எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை. ஆகவே, தோழி தான் அவனைப் பார்த்த நிலையை அடுத்து விவரிக்கிறாள்.

தொழுதே கண்ணுநீர் ஆக நடுங்கினன்; இன்நகாய்!
என்செய்தான் கொல்லோ இஃதுஒத்தன்! தன்கண்
பொருகளிறு அன்ன தகைசாம்பி, உள்ளுள்
உருகுவான் போலும் உடைந்து; (8-11)

தொழுதபடியே, கண்கள் நீராக உருக நடுங்கினான்; விரும்பத்தக்க அருள் நிரம்பியவளே! போர்த்தொழிலிலே மிக்குச் செல்கின்ற யானையைப் போன்ற வல்லமை யையும், மன உறுதியையும் உடைய தன் தன்மை (எரிந்து) சாம்பல் ஆகி, மனத்திற்குள்ளேயே (உறுதி) சிதைந்து வருந்துவான் போலும்! இவன் ஒருவன் (என் முன்னிலையில்) ஏன் இவ்வாறு நடுங்கினானோ?

கண்களிலிருந்து பெருகும் நீர் அளவுக்கு மிஞ்சி, கண்களை மறைத்துக் கொண்டிருந்ததால், கண்களே நீராகி விட்டனவோ என்று அஞ்சும்படி இருந்ததாம் அவன் தோற்றம். 'அவன் என் முன்னர் ஏன் நடுங்கினான்?' என்ற கேள்வி, தலைவியை மறை புலப்படுத்தத் தூண்டும் வல்லமை வாய்ந்தது. தலைவியின் நெஞ்சிலே நிறைந்த அருள், அவள் முகப் பொலிவால் வெளிப்படுகிறது என்பதை 'இன்நகாய்' என்ற விளி உணர்த்துகிறது. இத்தகைய அருளுடையவள் அவன் குறையை ஏற்காமலிருப்பது, அழகன்று எனத் தோழி வற்புறுத்தினாள்.

தெருவின்கண், காரணம் இன்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரணவாசிப் பதம்பெயர்த்தல் ஏதில;
நீ நின்மேல் கொள்வது எவன்? (12-14)

தெருவில், காரணம் இல்லாமல் கலங்குபவர்களைக் கண்டு, நீ வாரணவாசியில் உள்ளவர்களைப் போல்

(கலங்குபவர் வருத்தத்தை உன்னுடையதாக) ஏறிட்டுக் கொள்வது காரணமற்ற செயலேயாகும்; நீயே அதனை நின்மேலிட்டுக் கொள்வது எதற்காக?

பிறர் வருத்தம் கண்டு அது தமக்குற்றதைப் போல் வருந்தும் உயர்ந்த பண்பாடு 'வாரணவாசிப் பதம்' எனப் பட்டது. தலைவன் படும் துயரின் எல்லையைத் தோழி மிகைப்படுத்துகிறாளோ என ஐயுற்ற தலைவி, அலரச்சம் காரணமாக, இன்னும் மறை புலப்படுத்த விரும்பாத வளாகவே காணப்படுகிறாள். தோழி கூறியவற்றின் உண்மையை ஆராய, அவள் நம்மால் நேராத துன்பத்தைக் களைய முற்படுவானேன் என வாதிக்கிறாள். இது தலைவி கூற்று.

தலைவன் கூறியவற்றைத் தான் கொண்டு கூறியபொழுது பேசாதிருந்த தலைவி, அவன் நிலையைத் தான் கண்டபடி விவரித்ததும், பேசத்தொடங்கியதும், தோழியின் வெற்றிக்கு முதற்படியாய் அமைந்தது. அவன் படுந்துன்பம் அவளால் நேர்ந்ததே என்பதை, அவன் கூறியபடியே தோழி தலைவிக்கு அறிவித்து, அதனைத் தெரிந்துகொண்ட பின்னரே, தான் அவனிடத்து பற்றும், இரக்கமும் கொண்டதாகக் கூற முற்படுகிறாள்.

அலர்முலை ஆய்இழை நல்லாய்! 'கதும்எனப்
பேர்அமர் உண்கண்நின் தோழி உறீஇய
ஆர்அஞர் எவ்வம் உயிர்வாங்கும்';
மற்றுஇந்நோய் தீரும் மருந்துஅருளாய் ஒண்தொடீ!

(15-18)

அடி பரந்த முலைகளையும், ஆராய்ந்த அணிகளையும் உடைய நற்குணம் நிரம்பியவளே! (அவளைக் கண்ட மாத்திரத்தில்) விரைவாக (நானே எவ்வாறு என்னுள் புகுந்துகொண்டது என்று தெரிந்துகொள்ள முடியாதபடி) பெரியனவும், போர்த் தொழிலில் வல்லமை மிக உடையனவும் ஆகிய ஆளை விழுங்கும் கண்களை உடைய உன் தோழி (என்னிடத்தே) பொருந்திய நிறைந்த துன்பமாகிய நோய் என் உயிரைப் போக்கிடும். (என்று சொல்லுகிறான்.) ஒளி பொருந்திய வளையல்களை

அணிந்தவளே! (அவனுக்கு நீ தந்த) இந்நோய் நீங்கும் மருந்தையும் கொடுத்தருள்;

தலைவனுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பைத் தான் அறிந்து கொண்டிருந்ததைத் தோழி வெளிப்படையாகக் கூறுவது தலைவியின் நாணத்தை நீக்கவே. தலைவன் தோழிக்குக் கூறியவற்றை, அவள் அப்படியே தலைவிக்கு அறிவிக்கிறாள். இதன் இறுதி அடி தோழியின் வேண்டுகோள்.

'நின்முகம் காணும் மருந்தினேன்' என்னுமால்;
நின்முகம் தான்பெறின் அல்லது கொன்னே
மருந்து பிறிதுயாதும் இல்லேன் திருந்துஇழாய்!
என்செய்வாம் கொல்இனி நாம்! (19-22)

உன்னுடைய முகத்தைக் காண்பதாகிய மருந்தை (வேண்டி நின்றேன்) என்று அவன் சொல்லுகிறான்; உன்னுடைய காட்சியை இப்பொழுதே அவன் (நோயைத் தீர்க்கும் மருந்தாகப்) பெறுதலையன்றி, அதனைப் போக்கக் கூடிய வேறு மருந்து ஒன்றும் இல்லாதவளாய் இருக்கிறேன்; புதுக்கிய அணிகளைப் பூண்டவளே! இதற்கு நாம் என்ன செய்யலாம்?

நம்மால் துன்பத்துக்கு ஆளானவர் நோயைப் போக்குவது நம் கடமை எனத் தலைவி மறைமுகமாக ஒப்புக்கொண்டதை வற்புறுத்தி, தோழி தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள முயல்கிறாள்.

பொன்செய்வோம்;
ஆறு விலங்கித் தெருவின்கண் நின்றுஒருவன்
கூறும்சொல் வாய்எனக் கொண்டுஅதன் பண்புஉணராம்
தேறல் எளிதுஎன்பாம் நாம்? (23-26)

பொன்னை உண்டாக்குவோம்; ஒழுக்கத்தினின்றும் மாறுபட்டு (வழியில் குறுக்கிட்டு), நடுத்தெருவில் நின்றவாறு ஒருவன் கூறும் சொற்களை உண்மை என ஏற்றுக் கொண்டு, அச்சொற்களின் உண்மைத் தன்மையை

ஆராய்ந்தறிய முயலாமல் அவற்றிற்கொப்ப நடந்து கொள்ளத் துணிவது எளிது என்று நான் சொல்லுகிறேன்.

பொன்னை உண்டாக்குதல் எளிதான காரியமன்று. பசலை பொன்னிறம் உடையதாகையால், அவன் நம்மை நினைந்து வருந்துதலைப்போல, நாமும் அவனை நினைந்து வருந்திப் பசப்பூரப் பெறுவோம் என்று நகை தோன்றக் கூறினாள். தலைவனை வரைவு முயற்சியில் தூண்டாது, தன்னைக் களவொழுக்கத்தைக் கைக்கொள்ளத் தோழி தூண்டுவது தலைவிக்கு ஏற்கவில்லை.

ஒருவன் சாமாறு எளிது என்பாம் மற்று; (27)

இல்லையேல், ஒருவன் இறந்துவிடுதல் எளிதான காரியம் என்கிறேன் நான்.

தலைவன் பேச்சைக் கேட்டு மயங்கிடவில்லை. அவன் நிலையை உணர்ந்தே, அலர் தோன்றுமே என்பதனையும் பொருட்படுத்தாது; உன்னைக் களவொழுக்கத்தைக் கைக்கொள்ள வற்புறுத்துகிறேன் என்று தோழி கூறுகிறாள். தோழி இவ்வளவு கடுமையாக எச்சரித்த பின்னரே, தலைவி அவனைச் சென்று காண மனம் ஒப்பினாள். அவனிடத்தில் மிக்க அன்புடையாளேனும், அலரச்சம் அவளைக் கல்நெஞ்சுடையவளாக்கி விட்டிருந்தது.

சிறிது ஆங்கே மாணாஊர் அம்பல் அலரின் அலர்களன,
நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி
பூண்அகம் நோக்கி, இமையான் நயந்து, நம்
கேண்மை விருப்புற் றவனை எதிர்நின்று
நாண்அடப் பெயர்த்த நயவரவு இன்றே! (28-32)

அப்பொழுதே சிறிது நேரம் மாட்சிமைப்படாத இவ்வூரில் அம்பல் பெருகி அலர்ந்தாலும் அலராகட்டும் என்று (துணிந்து), நாணத்தையும் நிறையையும் (நாம் பெற்றிருப்பதைத் தன் வேட்கை மிகுதி காரணமாய்) விரும்பாதவனும், குடிப்பிறப்புக்குரிய ஒழுக்கமற்றவனும், பூண்கள் அணிந்த (நின்) மார்பைப் பார்த்துக் கண்களை இமைக்காமல் நின்றவனாய், அன்பு சிறந்து, நம்முடைய

நெருங்கிய தொடர்பை (களவில் அடிக்கடி சந்திப்பதை) விரும்பியவனுமாகிய அவனை, நாண் மிக வருத்தவும், அவன் எதிர் நின்று (நீ அஞ்சாதே என்று உணர்த்திப்) போக்கிய நயப்பாடு வருதல் இல்லை.

தலைவன் இறந்துவிடும் நிலையில் இருக்கிறான் எனத்தோழி இருமுறை வற்புறுத்திய பின்னரே, தலைவி அலரச்சத்தைக் களைந்து, அவனைக்காண இசைந்தாள். தலைவி தலைவனைக் காத்தவிதத்தைத் தோழி வியந்ததை இக்கரிதகம் உணர்த்துகின்றது. காட்சி ஆசையோடு வந்தவனே தலைவன் என வற்புறுத்தி வந்த தோழி, தன் வெற்றியை ஆதாரமாகக்கொண்டு, அவன் அடிக்கடி சந்திக்க விரும்புகிறான் என்பதையும் குறிப்பிட்டுவிட்டாள். இனிக் களவொழுக்கம் தடையின்றி நிகழுமாகையால், இப்பொழுது நிகழ்ந்ததைப்போன்ற 'நாணடப் பெயர்க்கும்' நயப்பாடு இனி நிகழ வாய்ப்பில்லை.

இக்கவிதை, 'கயமலர் உன்கண்ணாய்' என்ற கவிதையோடு பெரிதும் தொடர்புடையது. இவை இரண்டிலும், தோழியர் மறைவாக நிகழ்ந்தனவாகச் சில நிகழ்ச்சிகளைப் படைத்துக் கூறி, தாம் விரும்பிய பயனைப் பெறுகின்றனர். அக்கவிதையில் 'மன்' என்ற அசைச்சொல் பயன்பட்டதைப்போல, இங்கு 'மற்று' என்ற அசைச்சொல் தோழி கற்பித்துக் கூறியவை, தன் முயற்சி வெற்றி பெற வற்புறுத்தியவை, முடிவு இம்மூன்று பகுதிகளையும் பிரித்துக் காட்டுகின்றது.

## 25. எல்லா இஃதொத்தன்

தலைவன் வற்புறுத்தல் எல்லையைக் கடந்துவிட்டது. தோழி இன்னும் தலைவியின் மனநிலையை அறிந்து கொள்ளவில்லை. தலைவனைப் பொறுக்கச் சொல்லுவதும் கூடாதாகி விட்டது. ஆகவே தலைவியின் விருப்பத்தை அறியவும், அவன் குறையைப் போக்கவும் தோழி அவனோடு சூழ்ந்து நடித்ததை இக்கவிதை சித்தரிக்கிறது.

எல்லா ! இஃதொத்தன் என்பெறான்; கேட்டைக்காண்;
செல்வம் கடைகொளச் சாஅய்ச் சான்றவர்
அல்லல் களைதக்க கேளிர்உழைச் சென்று
சொல்லுதல் உற்றுஉரைக் கல்லா தவர்போலப்
பல்ஊழ் பெயர்ந்து என்னை நோக்கும்; மற்று யான்நோக்கின்,
மெல்ல இறைஞ்சும் தலை; (1-6)

ஏடி! இவன் ஒருவன் என்னிடமிருந்து ஒன்றைப் பெறாதவன்; இவன் படும் அவதியைப் பார்; பொருள் சுருங்கி முடிவை அடைந்துவிடவும், (தம் பழைய செல்வாக்கான நிலையினின்றும்) சாய்ந்த பெரியோர், (வறுமையால் மிக வருந்தி) தம் துன்பத்தைப் போக்க வல்ல (ஆற்றலும், விருப்பமும் உடைய) உறவினரிடத்தே சென்று, தம் குறையைச் சொல்லத் தொடங்கி, (ஆனால் வெட்கம் மீதூர) சொல்ல முடியாதவராய்ப் பேசாது நிற்பவரைப் போல, பலமுறை (இவ்விடத்துக்கு) வந்து என்னைப் பார்ப்பான்; (அவன் வந்த காரணத்தை அறியும் ஆவலுடையவளாய்) நான் அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தால், (நாணத்தால்) மெதுவாகத் தலையைத் தாழ்த்திக் கொள்ளுகிறான்.

தோழி கூறி முடிந்ததும், தலைவன் அங்கு வந்து, முதன் முதலாகத் தோழி எதிரில் சந்திப்பதால் நாணமடைந்த தலைவியின் நிலையை உணர்ந்து, தலைகுனிந்து நின்றதும் ஒன்றாய் நிகழ்ந்தன. வறுமை 'சொல் சொல்' என உயர்த்தவும் நாணம் தாழ்த்தவும், ஒன்றற்கொன்று எதிரான இரு சக்திகளுக்கிடையே பட்ட தலையை 'மெல்ல இறைஞ்சும்' என்ற தொடர் உணர்த்துகின்றது.

எல்லா !நீ முன்னதான் ஒன்று குறித்தாய்போல் காட்டினை;
நின்னின் விடாஅ நிழல்போல் திரிதருவாய்;
என்நீ பெறாதது? ஈதுஎன்; (7-9)

எடா! நீ குறிப்பினால் எதனையோ ஒன்றை நாடி வந்தவனைப்போல் காட்டிக்கொள்கிறாய்; உன்னைவிட்டு

நீங்காத உன்னுடைய நிழலைப்போல், என பின்னால் ஓயாது திரிகின்றாய்; நீ என்னிடத்திலிருந்து பெறாதது எது? இது என்று குறிப்பிட்டுச் சொல்;

'உரைக்கல்லாதவர் போல நோக்கும்' என அவள் கூறியவற்றை உறுதிப் படுத்துகிறான் தலைவன். தம் சூழ்ச்சியை மறைக்க இருவரும் ஏற்கெனவே ஒப்புக் கொண்டபடியே நடிக்கின்றனர். இது தோழி கூற்று.

சொல்லின், மறாதுஈவாள் மன்னோ இவள்; (10)

நான் விரும்பியதைக் குறிப்பிட்டால் மறக்காமல் கொடுப்பாளோ இவள்;

தலைவியைச் சுட்டி, ஆனால் தோழியை நோக்கிக் கேட்கிறான் தலைவன். தான் நாணம் மிக்குடையவன் என்றும், கொடுக்க விருப்பமில்லாதவரைத் துன்புறுத்தும் குணம் இல்லாதவன் என்றும் தன் நற்குணங்களை மறைமுகமாக வெளிப்படுத்திக் காட்டுகிறான். 'மன்னோ' என்ற அசை அவன் தயக்கத்தின் மிகுதியை உணர்த்துகின்றது.

செறாஅது, ஈதல் இரந்தார்க்குஒன்று ஆற்றாது வாழ்தலின்
சாதலும் கூடுமாம் மற்று; (11-12)

சினவாமல், ஒன்றைக்கொடு என்று கேட்டவர்க்கு, அதனைக் கொடுத்து உதவாமல் வாழ்வதினும் சாதலையும் செய்யலாம்;

இது தலைவி கூற்று, தலைவியைப் பேச வைத்ததனோடு, இவ்வாறு ஓர் உறுதிமொழியை அவளிடமிருந்து பெற்றது அவர்கள் சூழ்ச்சியின் வெற்றிக்கு அறிகுறி. ஆகவே சூழ்ச்சியைச் செய்த தோழி, மிக்க மகிழ்ச்சியோடு, தலைவனைத் தான் விரும்பியதைக் கேட்கத் தூண்டுகிறாள்.

இவள்தந்தை காதலின் யார்க்கும் கொடுக்கும் விழுப் பொருள்;
யாதுநீ வேண்டி யது? (13-14)

இவளுடைய தகப்பன் மிக்க அன்புடன் தன்னை வந்து கேட்ட எவர்க்கும் உயர்ந்த பொருள்களை அளிப்பான்; நீ வேண்டியது எது?

தகப்பனைப் போலவே இவளுக்கும் கொடுக்கும் குணம் உண்டு என்று சொல்லுபவனைப் போல, 'இவள் தகப்பன் கொடுக்கும்; நீ வேண்டிய விழுப்பொருளை (தலைவியையே) கேள் எனத் தலைவனைத் தூண்டுகிறாள். இது தோழி கூற்று.

பேதாய்! பொருள்வேண்டும் புன்கண்மை ஈண்டில்லை; யாழ
மருளி மடநோக்கின் நின்தோழி என்னை
அருள்ஈயல் வேண்டுவல் யான்; (15-17)

பெண்ணே! பணத்தை யாசிக்கும் அற்பத்தனம் என்னிடம் இல்லை; மருளுதலால் மடப்பம் பொருந்திய (மானின்) நோக்கத்தை உடைய உன் தோழி என்னை அருள் செய்தலை விரும்புகிறேன் நான்.

தலைவியின் பார்வையைத் தலைவன் ஈண்டுப் புகழ்வது, அதனைக் கொண்டு அவள் அருட்குணம் நிரம்பியவள் என அறிந்து கொண்டதாக உணர்த்துவதற்கு 'யாழ' என்பது அசை.

அன்னையோ! மண்டுஅமர் அட்ட களிறுஅன்னான் தன்னை ஒரு
பெண்டிர் அருளக் கிடந்தது எவன்கொலோ! (18-19)

அத்தகையவனா நீ! (பகைவர் நாற்புறங்களிலும் வளைத்துக் கொண்டிருக்கின்ற) நெருங்கிய போரில் வெற்றி பெற்ற யானையைப்போல் வல்லமையும், பெருமிதமும் உடையவன், தன்னை ஒரு பெண் அருள் செய்து காக்க வேண்டி நிற்பது எக்காரணம் பற்றியோ!

தலைவன் கேட்கப் போவதை அறியாதவள்போல பேசத் தொடங்கினாளே ஒழிய, தோழியால் அவன் குறையை வற்புறுத்த முடியாமல் இருக்க முடியவில்லை. சூழ்ச்சியை வெளிப்படுத்தாமல், இதனைச் செய்து முடிக்கும் தோழியின் திறன் வியக்கத்தக்கது.

ஒண்தொடீ! நாணிலன் மன்ற இவன்; (20)

ஒளி பொருந்திய வளையலை அணிந்தவளே! நிச்சயமாக இவன் நாணமற்றவன்;

தன் வேண்டுகோளை வாய்ப்பறியாமல் கேட்டான் எனக் கூறுகிறாளேயொழிய, அதனை ஏற்றுக்கொள்ள விருப்பமி ல்லாதவளாகத் தலைவி காட்டிக் கொள்ளவில்லை.

ஆயின் ஏஎ
பல்லார்நக்கு எள்ளப் படுமடல் மாஏறி
மல்லல்ஊர் ஆங்கண் படுமே, நறுநுதல்
நல்காள்கண் மாறிவிடின்;எனச் செல்வான்நாம்
எள்ளி நகினும் வரூஉம்; இடையிடைக்
கள்வர் போல் நோக்கினும் நோக்கும்; குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடையன்; எந்தைதன்
உள்ளம் குறைபடா வாறு; (21-28)

“சே! நான் நாணமற்றவனேயானால், பலரும் சிரித்து இகழும்படி மடன்மா ஊர்ந்து, வளப்பம் மிக்க இவ்வூரின் நடுவே இறந்துவிட நேரிடும். நல்ல நெற்றியையுடைய உன் தோழி எனக்கு அருளாமல் தன் ஒழுக்கத்தினின்றும் மாறி விடுவாளானால்’ எனக்கூறிச் செல்பவன். நான் பலமுறை சிரித்து இகழ்ந்ததனையும் பொருட்படுத்தாது (தன் குறையை வற்புறுத்த) வரும் வழக்கமுடையவன்; (என்னோடு பேசிக்கொண்டிருக்கையில்) இடையிடையே (நீ இருக்கும் இடத்தைக்) கள்வர்போலப் பார்த்தலையும் செய்வான்; தான் அடையக் கருதிய அதனை அடையாமற் போகாத பிடிவாத குணம் நிரம்பியவன்; எம் தந்தை மனம் வருந்தாதபடி (சூழ்ந்து ஏற்பது ஒன்றைச் செய்).

காம நோயால் பெரிதும் பீடிக்கப் பட்டவர், தம்மைத் தாம் காதலித்தவர் ஏற்றுக்கொள்ளாவிடின், பனைமடலால் செய்த குதிரையின்மேல் ஏறிக்கொண்டு ஊர் நடுவே தம்மை இழுத்துச் செல்லும்படி செய்வது ‘மடலேறுதல்’ எனக் கூறப்படுகிறது.

கள்வர் பிறர் பொருளிலேயே கண்ணாக இருப்பர்; ஆனால் அவர்கள் தம்மைப் பார்க்கும்பொழுது தாம் பொருள்களைப் பாராமலும், பார்ப்பினும் அவற்றைக் களவாடிக் கொள்ளவேண்டும் என்ற விருப்பத்தோடு பார்ப்பவரைப் போல் காட்டிக் கொள்ளாமலும் நடிப்பர். தோழி தன்னைக் கவனிக்காதபடி, அவன் தலைவி இருக்குமிடத்தைப் பார்த்தது 'கள்வர்போல் நோக்கினும் நோக்கும்' என்பதனால் பெறப்படுகிறது.

தோழியின் சூழ்ச்சித் திறன் 'அயகோ'வின்* திறனுக்கு எள்ளளவும் குறைந்ததன்று. அவன் தீமையைச் சூழ்ந்ததால், தான் சூழ்ந்தவற்றை வெளியிட மறுத்தான். இவள் நன்மையைச் சூழ்ந்த காரணத்தால், தலைவி கேட்காமல் இருக்கையில், இங்குத் தோழி தானாகத் தான் சூழ்ந்தவற்றை வெளிப்படுத்திவிட்டாள்.

தலைவனும் தோழியும் சூழ்ந்து நடித்த நாடகத்தைத் தலைவி முதன் முதலிலேயே தெரிந்து கொண்டுவிட்டாள். தன்னை ஏமாற்ற வந்தவர்களை ஏமாற்றமடையச் செய்வதே தகுதியுடையது என்றெண்ணி, தலைவனைப் பார்த்தறியாதவளைப் போலவே அவள் இறுதி வரை நடித்தது, அவளும் சூழ்ச்சித் திறன் மிக்குடையவள் என்பதை வெளிப்படுத்துகிறது.

* ஷேக்ஸ்பியர் ஒத்தெல்லோ நாடகப் பாத்திரம் (VILLAIN)

# 26. ஏஎ இஃதொத்தன்

பாம்பைப் போல் சீறி விழுந்தாள் அவள்; வலியப் பிடித்து இழுத்தால் ஒரு பெண் சும்மா இருப்பாளா? சீறி விழுந்தவள் சீற்றத்தைத் தணித்து, அவளைத் தன்னை விரும்பச் செய்துவிட்டான் தலைவன். தலைவன் வெற்றி பெறக் கையாண்ட முறைகளைச் சித்தரிக்கிறது இக்கவிதை.

ஏஎ இஃதொத்தன்! நாணிலன்; தன்னொடு
மேவேம்என் பாரையும் மேவினன் கைப்பற்றும்; (1–2)

*சே! இவனும் ஒரு மனிதன்! சிறிதும் நாணமில்லாதவன்; தன்னோடு பொருந்தமாட்டோம் என்று கூறுவாரையும், விரும்பிப் பிடித்து அணைத்துக் கொள்ளுகிறான்;*

மேவினும் மேவாக் கடையும் அஃதுஎல்லாம்
நீஅறிதி; யான்அஃது அறிகல்லேன்; பூஅமன்ற
மெல்இணர் செல்லாக் கொடிஅன்னாய்! நின்னையான்
புல்இனிது ஆகலின் புல்லினென்; (3–6)

*விரும்பினும், விரும்பாவிடினும், அச்செய்தியை நீயே அறிவாய்; நான் அவற்றை உணர்ந்தவன் அல்லேன்; பூக்கள் பொருந்திய மெல்லிய பூங்கொத்துக்கள் நீங்காத கொடியை ஒத்தவளே! உன்னை அணைத்துக் கொள்ளுதல் இன்பம் பயப்பதால், நின்னை நான் அணைத்துக் கொண்டேன்;*

*கொடி அவள் உருவத்துக்கும், பூங்கொத்து நீங்காத கொடியின் அழகு மாட்சி அவள் எழிலுக்கும் உவமைகள்.*

எல்லா! தமக்குஇனிது என்று வலிதில் பிறர்க்குஇன்னா
செய்வது நன்றாமோ மற்று; (7-8)

*ஏடா தமக்கு இன்பந் தருகிறது என்ற காரணத்தால், வலிந்து பிறருக்குத் துன்பம் தருவது நேர்மையாகுமோ?*

சுடர்த்தொடீ! போற்றாய்; களைநின் அறிவு முதுக்குறைமை;
போற்றிக்கள்;
வேட்டார்க்கு இனிதாயின் அல்லது நீர்க்கு இனிது
என்று உண்பவோ நீர்உண் பவர்; (9-11)

*ஒளிவிடும் வளையல்களை அணிந்தவளே! பாதுகாவாதே; நின் அறிவுடைமையைப் போக்கு; நான் கூறுவதை விரும்பிக் கேள்; (நாவறட்சி காரணமாய்) நீரை விரும்பியவர் தமக்கு இன்பம் பயப்பது என்று இல்லாமல், நிருக்கு இன்பம் பயக்கும் என்று அதைக் குடிப்பாரோ?*

முதுக்குறைமை-அறிவுடைமை; இந்த வாதம் அவளுக்கு ஏற்கவில்லை. ஆகவே, அவளை அருள் புரிய வேண்டத் தலைப்பட்டான் தலைவன்.

செய்வது அறிகல்லேன்! யாதுசெய் வேன்கொலோ!
ஐவாய் அரவின் இடைப்பட்டு நைவாரா,
மைஇல் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கெளலும் அறன்எனக் கண்டன்று; (12-15)

ஐயோ! என்ன செய்வேன்! ஐந்தலை நாகத்தின் பிடிக்குள்பட்டு வருந்துபவர் போல வருந்தி, செய்ய வேண்டுவது எது என்று தெரியாமல் தவிக்கிறேனே! மறுவற்ற சந்திரனைப் போல் விளங்கும் முகத்தையுடைய மங்கையரை வலிதிற் கொள்வதும் அறத்தின்பாற் பட்டதாக நூல்கள் கருதுகின்றன.

ஐம்பொறிகளாலும் இன்பம் தரத்தக்க பெண்ணால் வருந்துகிறானாகையால், தன் துன்பத்தை அவள் மேலேற்றி, அவளை ஐவாய் அரவு என்றான். எட்டு வகையான மணங்களுள் இராக்கதமும் ஒன்றாகையால் இவ்வாறு கூறினான்.

அறனும் அதுகண்டற் றாயின், திறன்இன்றிக்
கூறும்சொல் கேளான் நலிதரும்; பண்டுநாம்
வேறுஅல்லம் என்பதுஒன்று உண்டால், இவனோடு
மாறுஉண்டோ நெஞ்சே! நமக்கு. (16-19)

அற நூல்கள் அவ்வாறு கூறுவதனால்தான், இவனும் நாம் கூறுவனவற்றை ஏற்றுக் கொள்ளாமல், வகையறியாமல் நம்மை வருத்துகின்றான்; (இப்பொழுது அன்புடையவராய் இருப்பவர்) சென்ற பிறப்பில் தொடர்புடையவராய் இருப்பர் என்று கூறுவதுண்டு ஆகையால், மனமே! இனி அவனோடு நமக்கு மாறுபாடு ஏதேனும் இருக்குமோ?

# 27. நோக்குங்கால் நோக்கித் தொழூஉம்

தலைவியைக் குறைநயப்பித்துக் குறியிடத்தில் கொண்டு சேர்ந்ததைச் சித்தரிக்கிறது இச்சிறு கவிதை.

நோக்குங்கால் நோக்கித் தொழூஉம்; பிறர்காண்பார்
தூக்கிலி; தூற்றும் பழிஎனக் கைகவித்துப்
போக்குங்கால், போக்கு நினைந்துஇருக்கும், மற்றுநாம்
காக்கும் இடமன்று இனி; (1-4)

*பார்க்குந்தோறும் (நம்மை) நோக்கித் தொழுகிறான்; (அவன் நம்மைத் தொழுவதைப்) பிறர் கண்டு விடுவரே, (அதனால் தனக்கு இழிவு நேருமே) என்ற ஆராய்ச்சி சிறிதும் இல்லாதவன்; நம்மீது பிறர் பழி தூற்றுவாரே என அஞ்சி, அவனைக் கை அமர்த்திப் போகச் செய்தால் (அவனைப் போகச் சொல்வதால் நமக்கு அவனிடத்தில் அன்பில்லை என்று கொண்டு) நம் ஒழுகலாற்றை நினைந்தபடி நின்று கொண்டிருப்பான்; அவன் பிடியினின்றும் நம்மை நாம் காப்பாற்றிக்கொள்ளும் காலம் இனி இல்லை;*

அவன் ஆற்றாமை எல்லையைக் கடந்து விட்டதாகையால் இனி நம்மை காத்துக் கொள்ளும் காலம் இல்லை என்றாள்; இது தோழி கூற்று.

எல்லா! எவன் செய்வாம்? (5)

*ஏடி! இதற்கு நாம் என்ன செய்யலாம்?*

தான் ஒரு செய்தியைக் கூறி முடித்தவுடனேயே, மிக்க பரபரப்புடன் தலைவி இவ்வாறு கேட்டதைக் கொண்டு, அவள் களவொழுக்கத்தை மேற்கொள்ள விரும்புவதைத் தோழி உணர்ந்து கொண்டாள். இது தலைவி கூற்று.

பூக்குழாய்! செல்லல் அவன்உழைக் கூஉய்க், கூஉய்க், கூஉய்
விரும்பியான் விட்டேனும் போல்வல்;என் தோள்மேல்
கரும்புஎழுது தொய்யிற்குச் செல்வல்; 'ஈங்கு ஆக
இருந்தாயோ' என்றுஆங்கு இற;
அவன்நின் திருந்துஅடி மேல்வீழ்ந்து இரக்கும்,நோய் தீர்க்கும்
மருந்துநீ ஆகுத லான்; (6-11)

சித்திர வேலைப்பாடமைந்த காதணிகளை உடையவளே! (நின்னைப் பெறாததால்) மிகுதியான வருத்தத்தையுடைய அவனிடம் கூவிக் கூவி உன்னை விருப்பத்துடன் அழைத்துக் கொண்டு விட்டவளைப் போலவே நான் நடிப்பேன்; என் தோள்களின் மீது கரும்பு எழுதுவதற்காகத் தொய்யிற் குழம்பைக் கொண்டு வர நான் செல்கிறேன்; 'இதுவே இடமாக இருந்துவிட்டாயோ? என்று கேட்டபடி (என்னைத் தேடி வருபவளைப் போலவே) நீ அவ்விடத்திற்கு போ! அவனுடைய நோயைப் போக்கும் மருந்தாகையால், அவன் உன்னுடைய திருந்திய அடிகளைப் பணிந்து உன்னை அருள் புரியுமாறு கேட்டுக் கொள்வான்.

இன்னும், கடம்பூண்டு ஒருகால்நீ வந்ததை
உடம்பட்டாள் என்னாமை என்மெய் தொடு; (12-13)

மேலும் ஒரு முறை (என் தோழி உன் நோயைப் போக்குவதைத் தன்) கடைமையாக மேற்கொண்டு, களவொழுக்கத்துக்கு உடம்பட்டாள் என்று சொல்லாமல் இருப்பதாக என்னைத் தொடு;

'வந்தை' பொருளில்லை, பேச்சு வழக்கு; உடன்பட்டதைத் தலைவி உடன்படாதவளைப் போல் உணர்த்தும் நகைத்திறம் வியக்கத்தக்கது. இது தலைவி கூற்று.

இஃதோ! அடங்கக் கேள்;
நின்னோடு சூழுங்கால் நீயும் நிலம்கிளையா

என்னோடு நிற்றல் எளிதன்றோ! மற்றுஅவன்
தன்னோடு நின்று விடு. (14-17)

உனக்கு நன்மையை நாடியதற்கு என்னைச் சூள் செய்யச் சொல்வதோ வெகுமதி! நீ என்ன செய்ய வேண்டும் என்பதை முற்றிலும் கேள்; உன்னோடு நான் ஆராயுங் காலத்தில், நீ கால் விரலால் நிலத்தைக் கீண்டியபடி என் எதிரில் நிற்பது உனக்கு எளிதாய் இருக்கிறதல்லவா! அவன் முன் அவ்வாறே நின்றுவிடு.

இது 'எல்லா இஃதொத்தன்' என்ற கவிதையை ஒத்தது. இரண்டும் சூழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டவை; தோழியர் அடைந்த வெற்றியைச் சித்தரிக்கின்றன; இங்கு தோழியின் வார்த்தைகளை மனமுவந்து ஏற்றுக் கொள்கிறாள் தலைவி; ஆகவே இத்தோழியின் திறனை ஆசிரியர் அவள் தலைவிக்குத் தலைவன் எதிரில் குறியிடத்தில் நடந்து கொள்ளவேண்டிய விதத்தை விவரிப்பதன் வாயிலாய் வெளிப்படுத்தி இருக்கிறார்.

# 28. அணிமுக மதியேய்ப்ப...

தலைவியைத் தலைவன் வற்புறுத்திக் கூட்டத்துக்கு உடம்பட வைத்ததைச் சித்தரிக்கிறது இக்கவிதை.

அணிமுகம் மதிஏய்ப்ப, அம்மதியை நனிஏய்க்கும்
மணிமுக மாமழைநின் பின்ஒப்பப் பின்னின்கண்
விரிநுண்ணூல் சுற்றிய ஈர்இதழ் அலரி
அரவுக்கண் அணிஉறழ் ஆரல்மீன் தகைஒப்ப,
அரும்படர் கண்டாரைச் செய்தாங்கு இயலும்
விரிந்துஒலி கூந்தலாய்! கண்டை; எமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டு; (1-7)

உன் அழகிய முகம் சந்திரனை ஒத்திருக்கவும். அச்சந்திரனை (பயனைக் கருதாது பிறர்க்கு நன்மை செய்தலில்) மிகவும் ஒத்திருக்கும். நீலமணிகளைப் போன்ற

நிறமுடையனவாய் விளங்கும் பெரிய மேகங்கள் (நிறத்தால்) உன் பின்னப்பட்ட கூந்தலை ஒத்திருக்கவும், (அக் கூந்தலினிடத்தே கிடந்து) மலரும் நுண்ணிய நூலால் சுற்றிக் கட்டப்பட்ட குளிர்ச்சி பொருந்திய இதழ்களை உடைய மலர்கள் (பின்னலை உருவத்தால் ஒத்த) கரும் பாம்பினிடத்தே இருந்து அதன் அழகோடு மாறுபட்டு, கார்த்திகை என்னும் விண்மீன்களை ஒளிவிடும் தன்மையில் ஒத்திருக்கவும், (பொறுத்தற்கு) அருமையான பெருந்துன்பத்தை (உன் அழகிய தோற்றத்தைக்) கண்டவரைத் துய்க்கும் படி செய்தவாறு செல்லும் பரந்து தழைத்த கூந்தலைப் பெற்றவளே! ஆராய்ந்துபார்; எனக்கு முன் நாட்களில் மிகுதியான பொன்னைக் கொடுக்கக் கடமைப்பட்டவள்;

முகத்திற்கும் சந்திரனுக்கும் பொதுப்பொருள் அழகு; மழைக்கும் சந்திரனுக்கும் பொதுப்பொருள் அவற்றின் தொழில்; மழைக்கும் பின்னலுக்கும் பொதுப்பொருள் நிறம்; பின்னலுக்கும் பாம்புக்கும் பொதுப்பொருள் வடிவம்; மலர்களுக்கும் கார்த்திகை மீன்களுக்கும் பொதுப்பொருள் அவற்றின் ஒளி.

கண்டை 'சேரி மொழி': காண் என்னும் பொருள் உடையது; தலைவன் அவளோடு கூடியிருந்த காலத்தில் அவள் அழகு சிறந்து விளங்கினாள். அவன் பிரியவே, ஒளி மங்கிக் கிடக்கிறாள். அவளுடைய இந்நிலையைச் சுட்டி, அவள் முன்னர் பொன்னைப் போல் அழகுடையவளாய் விளங்கியது தன் அளியாலேயே என்றும், அதனை இழந்து விட்டிருப்பவள், தனக்கு அவ்வழகைத் திருப்பித் தரக் கடமைப்பட்டவளாய் இருக்கிறாள் என்றும் கூறுகின்றான் தலைவன். இதனால் இப்பொழுது தன்னோடுசேர்ந்து, அவள் மீ ண்டும் இழந்த அழகைப் பெற்றுப் பொலிவுடையவளாய் விளங்கவேண்டும் என்று குறிப்பாய் அறிவிக்கிறான்.

ஏஎ! எல்லா! மொழிவது கண்டை இஃதொத்தன், தொய்யில்
எழுதி இறுத்த பெரும்பொன் படுகம்,
உழுவது உடையமோ யாம்? (8-10)

சே! அட! இவன் பேசுவதைப் பார்; என் தோள்களின் மீது (இவன்) தொய்யில் எழுதியதால் எனக்குத் தந்த தோற்றப் பொலிவுக்குக் கடன் பட்டிருக்கிறோம்; கூடியதால் ஏற்பட்ட தோற்றப் பொலிவைக் கடன் பட்டிருக்கிறோமா நாம்!

'பெரும் பொன் படுகுவை' என்று தலைவன் கூறியதனை எதிர்க்கிறாள் தலைவி. தொய்யில் எழுதியதால் ஏற்பட்ட அழகின் அளவுக்கே கடமைப்பட்டிருப்பதை ஒப்புகிறாள். அதற்காகப் 'பெரும் பொன் படுகம்' என்று அவன் எப்படிக்கூறலாம்?

உழுதாய்;
கரும்புஇமிர் பூங்கோதை அந்நல்லாய்! யான்நின்
திருந்து இழை மெல்தோள் இழைத்த மற்றுஇஃதோ!
கரும்புஎல்லாம் நின்உழவு அன்றோ? ஒருங்கே
துகள்அறு வாள்முகம் ஒப்பு மலர்ந்த
குவளையும் நின்உழவு அன்றோ? இகலி
முகைமாறு கொள்ளும் எயிற்றாய்! இவை அல்ல
என்உழுவாய் நீமற்று இனி? (11-18)

நீ கூடினாய்; வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையை அணிந்த அழகியவளே! நான் உன்னுடைய புதுக்கிய அணிகளை அணிந்த தோள்களின் மீது தொய்யில் எழுதிய இவ்வளவேதானோ நீ கடன் பட்டிருக்கிறாய்? (நான்) பல காலும் உன் ஆகத்தும், தோள்களிலும் பொறித்த கரும்பு எல்லாம் நீ என்னோடு கூடியதனால் எழுதப்பட்டவை யன்றோ? அதனோடு, மாசற்ற உன் ஒளிவிடும் முகத்தில் ஒன்றை ஒன்று ஒத்திருக்கும்படியாக மலர்ந்து விளங்கும் குவளையைப்போன்ற கண்களின் மலர்ச்சி நீ என்னைக் கூடியதனால் ஏற்பட்டதன்றோ? முல்லை அரும்புகளோடு மாறுபட்டு அவற்றைத் தோல்வியுறச்செய்யும் அழகிய பற்களை யுடையவளே! இத்தகைய பயன்களையே அன்றி, வேறு எப்பயன்களைக் கருதி நீ இனி என்னோடு கூடுவாய்.

கரும்பு வில், மீன் கொடி முதலியவற்றை மகளிர் தோள்களிலும் மார்பிலும் எழுதுவது அவர்கள் எழிலை எடுத்துக் காட்டுவதோடு, புணர்ச்சி இன்பத்தையும் பெருக்கும். முதலில் வந்த 'மற்று' பொருளுடையது; அது அங்கு அளவைக் குறிப்பிடப் பயன்படுகிறது.

எல்லா! நல்தோள் இழைத்த கரும்புக்கு நீகூறும்
முற்றெழில் நீல மலர்என உற்ற
இரும்புஈர் வடிஅன்ன உண்கட்கும் எல்லாம்
பெரும்பொன் உண்டு என்பாய் இனி; (19-22)

ஏடா! (என்னுடைய திரட்சியையுடைய) நல்ல தோள்களிலே எழுதிய கரும்புக்கு (நான் கடமைப்பட்டிருப்பதைப் போல) நீ (பாராட்டிக்) கூறும் முற்றிய அழகையுடைய நீலமலர் என்று சொல்லும்படி (இருந்த கண்கள், மலர் அலர்ந்த பின் செவ்வி குலைந்து ஒளிமங்கி வாடுதலைப்போல வாட்டம்) அடைந்ததும், இரும்பால் கீறிச்செய்யப்பட்ட வடுப்போல் விளங்குவதுமான (தன் எழிலை) உண்ட கண்களுக்கும், மற்றுமுள்ள உறுப்புகட்கும் நீ பெறவேண்டிய மிகுதியான பொன் உண்டு என்று இனிச்சொல்லுவாய் போலும்!

இரும்பு - கத்தி; 'கரும்புக்குக் கூறுவதை ஒப்புவேன்; ஆனால் கண்களுக்கும்; மார்புக்கும் கூறுவதை ஒப்பமாட்டேன்' என்று கூறுகிறாள் தலைவி.

நல்லாய்! இகுளை! கேள்;
ஈங்கே தலைப்படுவன், 'உண்டான் தலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல;' (23-25)

நல்லவளே! இருளையே! கேள்; (தன் பொருளைத்) தின்றவனை எதிர்ப்பட்டால், வேந்தன் (அவனிடத்திருந்து) அபகரித்துக் கொண்டதைப்போன்ற (பலவகைப்பட்ட பலன்களையும்) இப்பொழுதே, இவ்விடத்திலேயே பெறுவேன்.

'உண்டான் தலைப்பெயின் வேந்து கொண்டன பல' என்பது ஒரு பழமொழி; அரசன் பொருளை ஏப்பம்விட்டு அகப்படாமல் திரிந்தவன் எதிர்ப்பட்டால், அவன் பொருள் எல்லாவற்றையும் வேந்தன் அபகரித்து விடுதலைப்போல, அவள் கடமைப்படாத பொன்னையும் வலிதில் அப்பொழுது பெறக்கூடும் என அறிவிக்கிறான் தலைவன். அவள் மன நெகிழ்ச்சியை, அவள் முகக் குறிப்பால் உணர்ந்து, தன் வெற்றிச் செருக்கால் அவன் இவ்வாறு கூறுகிறான். 'இகுளை' என்பது மகளிரை விளிக்கும் சொல்.

ஆங்காக:

(இங்கு இப்பொழுது நீ பெறமுடியாது; என்னை மணந்துகொண்டு பின்னர் அத்தகைய பலன்களை) அப்பொழுது துய்க்கலாம்.

இது தலைவி கூற்று; 'உன் வாய் வீச்சால் நான் மயங்க மாட்டேன்' என்கிறாள் தலைவி.

அத்திறம் அல்லாக்கால், வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூண்ஆகம்
பொய்த்துஒருகால் எம்மை முயங்கினை சென்றீமோ,
முத்துஏர் முறுவலாய்! நீபடும் பொன்எல்லாம்
உத்தி எறிந்து விடற்கு. (26-30)

அவ்வாறு இப்பொழுது சிறந்த இன்பத்தை என்னை அடையவிட உனக்கு விருப்பம் இல்லையானால், முத்து வரிசையை ஒத்த முறுவல் பூப்பவளே! நீ எனக்குக் கடன் பட்ட பொன் அனைத்தையும் கழித்துத் தொலைத்து விடுவதற்காக, வேங்கை மலர்களின் நிரம்பிய எழிலைப் போல் நிறங்கொண்ட சுணங்கை அணிகலனாகப் பூண்ட உன் மார்பால் பொய்யாகவாவது ஒரு முறை அணைத்துவிட்டுச் சென்றுவிடுவாய்.

'பொய்த்தொருகால் முயங்கினை சென்றீமோ' என்பது, உண்மையான விருப்பம் இல்லாவிடினும் விளையாட்டாகவாவது

அணைத்துக்கொள் என்று தலைவன் கேட்டுக்கொண்டதை உணர்த்துக்கிறது இவ்வாறு விளையாட்டாகச் செய்தபோதிலும், அவள் இழந்த அழகைப் பெறுவாள். ஆகையால், இது அவள் கடன்பட்ட பொன்னைத் திருப்பித்தரும் (எழில் உடையவளாகத் தலைவனுக்குக் காட்சி அளிக்கும்) நல்ல பயனை உடையது எனக்கூறி, அவளைத் தன் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளத் தூண்டுகிறான் தலைவன்.

நச்சினார்க்கினியர் உரை இக்கலியில் மலிந்திருக்கும் நகைச்சுவையை நன்கு விவரிப்பதால், அதனை இவ்விளக்கத்தில் குறிப்பிடவில்லை.

# 29. திருந்திழாய் கேளாய்...

தலைவன் தினந்தோறும் இரவில் வந்து தலைவியைச் சந்தித்து மகிழ்கிறான். அவன் விரைவில் மணந்துகொள்ள விருப்பம் உடையவனைப்போல் காட்டிக்கொள்ளவில்லை. இவ்வாறு வரையாமலும், வரைவு முயற்சி தொடங்காமலும் அவன் களவு நீட்டிப்பதைக் கண்டு தலைவி அஞ்சினாள் இதுவரை அலர் தோன்றவில்லை. இனியும் இவ்வாறே மறைபுலப்படாமல் அவனை இரவில் சந்தித்துக் கொண்டிருக்கமுடியும் என எப்படி நம்பலாம். அவன் அணிமையில் மணந்துகொள்வான் எனத்தெரிந்தாலும், பொறுத்துக்கொள்ளத் தகுந்த காரணம் இருக்கும். அவன் வரைந்துகொள்ள விரும்புவதாகவே தோன்றவில்லையே! தலைவி கவலைகொள்ளத் தொடங்கினாள், அவனை வரைவு முயற்சி செய்யத்தூண்ட தோழி ஒரு சூழ்ச்சி செய்தாள். ஓர் இரவு வேண்டுமென்றே குறி தப்பிவிட்டு, அடுத்த நாள், அவன் குறி தப்பியதற்குக் காரணம் கேட்க வந்தபொழுது, அவன் வருகையைக் காணாதவளைப் போலவே, தோழி தலைவிக்குத்தான் குறிதப்ப நேர்ந்த கதையை விவரிக்கிறாள்.

திருந்து இழாய்! கேளாய்;நம் ஊர்க்குஉளெல்லாம் சாலும்
பெருநகை அல்கல் நிகழ்ந்தது ஒருநிலையே; (1-2)

புதுக்கிய அணிகலன்களைப் பூண்டவளே! கேள்; நம் ஊரில் உள்ளவர் அனைவருக்கும் மிக்க சிரிப்பை (விளைவிக்கப்) போதுமான ஒரு வாய்ப்பு நேற்றிரவு நிகழ்ந்தது.

மன்பதை எல்லாம் மடிந்த இரும்கங்குல்
அம்துகில் போர்வை அணிபெறத் தைஇ,நம்
இன்சாயல் மார்பன் குறிநின்றேன் யானாக, (3–5)

உயிர்ப் பன்மைகள் அனைத்தும் (தூக்கத்தில் ஆழ்ந்து) மடிந்தவற்றைப்போல் இருந்த கரிய நள்ளிரவில், அழகிய துகிலால் ஆகிய போர்வையை நன்றாக உடுத்திக்கொண்டு, நம்முடைய இனிய சாயலைப்பெற்ற மார்பினையுடைய தலைவன் (தன் வருகையை அறிவிக்கச் செய்யும்) குறியைக் கேட்கும் ஆவலோடு நின்றவளாய் நான் இருக்கவும்.

'மின் சாயல்' எனக்கொண்டு மின்னலைப்போல் ஒளிவிடும் அழகிய மார்பையுடையவன் எனக் கூறுவதும் பொருந்தும், தைஇ அணிந்து; முக்காடிட்டு மூடியிருக்கும்படி போர்த்துக்கொள்ளாமல், உடம்போடு ஒட்ட உடுத்திருந்தாள் என்பதை 'அணிபெறத்தைஇ' என்ற தொடர் குறிப்பிடுகிறது.

தீரத் தறைந்த தலையும்,தன் கம்பலும்,
காரக் குறைந்து, கறைப்பட்டு வந்து,நம்
சேரியின் போகா முடமுதிர் பார்ப்பானைத்
'தோழி !நீ போற்றுதி' என்றி; (6-9)

மயிர் முழுவதும் வழுக்கை விழுந்து நீங்கியமையால் தட்டையான தலையையும், அதனை மறைக்கப் போர்த்த போர்வையையும் உடையவனாய், கருங்குட்டத்தால் (காலும் கையும்) குறைந்து, (தானம் வாங்குதல் போன்ற) துறையை மேற்கொண்டு வந்து, நம் சேரியை விட்டு

நீங்காதிருக்கின்ற முடவனான வயது முதிர்ந்த பார்ப்பானைத் 'தோழி! நீ கவனித்துக்கொள்' எனப் பலகாலும் எச்சரிக்கை செய்திருக்கிறாய்;

கார்-கருங்குட்டம்; 'காரக்கு' என்பதில் 'அக்கு' சாரியை சாரியையின் ஈறும், ஈற்றயலும் கெட்டு 'கார்' என நின்று, 'குறைந்து' என்ற வருமொழியோடு புணர்ந்தது 'சேரியிற் போகா' என்பதனை, சேரியில் ஓயாது அங்குமிங்கும் அலைந்து திரிபவன் உன உரைப்பதும் பொருந்தும்.

அவன்ஆங்கே
பாராக் குறழாப் பணியாப் 'பொழுதுஅன்றி,
யார்இவண் நின்றீர்; எனக்கூறி, பையென
வைகாண் முதுபகட்டின் பக்கத்தின் போகாது,
'தையால்! தம்பலந் தின்றியோ?' என்று, தன்
பக்குஅழித்துக் 'கொண்டீ' எனத்தரலும், (9-14)

(நான் காதலன் குறியைக் கேட்க நின்ற) அவ்விடத்தே அவன் என்னைப் பார்த்து, (ஐயம் தோன்றினமையால், சற்று அருகே வந்து) குனிந்து பார்த்து, (பெண் என்று தெரிந்துகொண்டதும் மிக்க மரியாதையோடு) பணிந்து, (மகளிர் வெளிவாராத) 'காலம் அல்லாத காலத்தில் இங்கு நின்ற நீர் யார்?' என்று கேட்டு, வைக்கோல் போரைக் கண்ட கிழக் காளையைப்போல என் பக்கத்தை விட்டு நீங்க மனமில்லாமல் நின்றவனாய் மெதுவாகப் 'பெண்ணே! வெற்றிலை தின்கிறாயா? என்று கேட்டு, தன் வெற்றிலைப் பையை அவிழ்த்து, 'எடுத்துக்கொள்' என்று என்னிடம் அதனைத் தர நெருங்கவும்,

பையென-மெதுவாக; பக்கு-பை;

யாதுஒன்றும்
வாய்வாளேன் நிற்பக் கடிதுஅகன்று, கைமாறி
'கைப்படுக்கப் பட்டாய்ச் சிறுமிநீ! மற்றுயான்

ஏனைப் பிசாசு அருள்; என்னை நலிதரின்,
இவ்வூர் பலிநீ பெறாமல்கொள் வேன்' எனப்
பலவும் தாங்காது வாய்பாடி நிற்ப. (15-19)

நான் எது ஒன்றையும் வாய்விட்டுக் கூறாமல் நிற்கவே, (அவன் பயந்து) திடுமெனச் சற்று நகர்ந்து சென்று, தன் ஒழுக்கத்தை மாற்றி, 'சிறியவளே! நீ என்னால் நன்றாக அகப்படுத்திக் கொள்ளப்பட்டாய்; (ஆனால் நீ பெண் இல்லாது பிசாசாக இருப்பின்) நான் ஆண்பாற் பிசாசு; ஆகவே (என்னை வருத்தாது) அருள் செய்; (என் வேண்டுகோளை ஏற்காது-என்னைப் போகவிடாது) என்னைத் துன்புறுத்தினால், இவ்வூரில் உனக்கு இடும் பலியை நீ பெறமுடியாமல் நான் அகப்படுத்திக் கொள்வேன்' என்று முரண்பட்ட பல சொற்களைத் (தன் மனக்குழப்பத்தை) தாங்கமாட்டாமல் வாய் குளறிக்கூறி நிற்கவும்,

முதுபார்ப்பான் அஞ்சினன் ஆதல் அறிந்து, யான்
எஞ்சாது ஒருகை மணல்கொண்டு மேல்தூவக்
கண்டே, கடிதுஅரற்றிப் பூசல்தொடங் கினன் ஆங்கே;
(20–21)

கிழப் பார்ப்பான் பயந்தவனாய் இருத்தலைத் தெரிந்து கொண்டு, நான் குறையாமல் ஒரு கை மணலை வாரிக் கொண்டு, அவன் முகத்தின் (கண்) மீது தூவவும், அதனைக் கண்டு (மேலும் பயந்து) உரத்துக் கூவி அப்பொழுதே (ஊராரைத் தன் உதவிக்கழைக்கக் கத்திப்) பெருங்கலவரத்தை உண்டு பண்ணினான்.

ஒடுங்கா வயத்தின் கொடும்கேழ்க் கடும்கண்
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள்ஓர்
ஏதுஇல் குறுநரி பட்டற்றால்; காதலன்
காட்சி அழுங்க, நம்ஊர்க்கு எலாஅம்
ஆகுலம் ஆகி விளைந்ததை என்றும்தன்

வாழ்க்கை அதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கரும் கூத்து. (23-29)

ஒன்றற்கும் நடுங்காத வல்லமையையும், வளைந்த கோடுகளையும், கொடிய கண்களையும் உடைய பெரிய புலியை அகப்படுத்திக் கொள்ளுவதற்காகக் கட்டிய வலையுள் ஓர் ஒன்றுக்கும் உதவாத சிறு நரி விழுந்ததைப் போல், (நமக்கு) காதலனைப் பார்க்கும் மகிழ்ச்சி இல்லாமற் போகவும், நம் ஊரில் உள்ளவர் எல்லோருக்கும் (தூக்கம் கெட்டதால்) துன்பம் நேரவும், எக்காலத்தும் (தனித்து நிற்கும் பெண்களைக் கண்டால் அவர்கள் மேல் விழுதலைத் தன் தொழிலாகக் கொண்ட கிழப் பார்ப்பான் விரும்பும் பெரிய தண்ணிய கூத்து நிகழ்ந்தது.

கருமை மேகத்திற்கு ஆகித் தன்மையை உணர்த்திற்று; தலைவனை நீக்கி நிறுத்த உதவியதால் இக்கூத்து தலைவிக்குத் தண்ணியதாயிற்று; 'வீழ்க்கை' வாழ்க்கையைப்போல் விரும்பப்படுவதை உணர்த்திற்று.

